அவன் தனது
உறுதியுள்ள வெண்
மையான பற்களைப்பற்றி
ஒருகாலத்தில்
பெருமைப்பட்டுக்
கொண்டிருந்தான். . .

. . . ஆனால், இப்பொழுது

# சிரிக்கவே அச்சப்படுகிறான்!

ஈறுகளை அசட்டைசெய்தால் மிக உறுதியான பற்களும் அழிந்துவிடுகின்றன. இந்த அபாயத்தி லிருந்து உங்களைக் காப்பாற்றிக் கொள்ள ஒரு வழி எஸ். ஆர். டூத்பேஸ்ட் உபயோகிப்பதுதான். உலகெங்கும் பல் வைத்தியர்கள் ஈறுவியாதிகளை சிகிச்சை செய்ய உபயோகிக்கும் ஸோடியம் ரிஸிநோலியேட்* இந்த எஸ். ஆர். டூத்பேஸ்ட் ஒன்றில்தான் இருக்கிறது. தினமும் தவறாமல் எஸ். ஆர். டூத்பேஸ்ட் உபயோகிப்பதனால் இரட்டிப்பு பாதுகாப்பு கிடைக்கிறது —உறுதியுள்ள ஆரோக்கியமான ஈறு களில் பற்களை ஒழுங்காகவும், வெண்மையாகவும் இருக்கச் செய்கிறது.



**எஸ். ஆர். டூத்பேஸ்ட் உபயோகித்து உங்கள் சிரிப்பை கவர்ச்சியுடையதாகச்செய்யுங்கள்**




பெரிய சைஸிலும் கிடைக்கிறது

* ஸோடியம் ரிஸிநோலியேட பாக்டீரியாவை எதிர்ப்பதோடு பாக்டீரியாவினால் ஏற்படும் விஷத்தன்மையைத் தடுக்கும் சக்தியையும் அளிக்கிறது.

GSR. 95-50 TM

# கல்கி பொருளடக்கம்


மலர் 12
இதழ் 17

1952 நவம்பர் 23

நந்தன ஹு
கார்த்திகை 8




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

நவம்பர்

28உ

முதல்

தமிழ்நாடெங்கும் திரையிடப்படும்!



K. K. ப்ரொடக்ஷன்ஸ்

# பசியின் கொடுமை

தமிழ்

தங்கம்...பிரேம்நஸீர்...திக்குரிஸி...திரௌபதி

டைரக்ஷன்...மோஹன்ராவ்

வசனம்...பாடல்:
வித்வான் P. ஆதிமூலன்
அண்ணல் தங்கோ

சங்கீதம்:
P. S. திவாகர்

போட்டோகிராபி:
E.R. கூப்பர்
F.R.S.A (ENG)

இதன் மலையாளம் (விசப்பின்றேவிளி) · தெலுங்கு (ஆகலி)
வெளியீடுகள் எல்லா இடங்களிலும் வெற்றிகரமாக ஓடுகின்றது...



மலர் 12

தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார்

இதழ் 17

# கண்ட்ரோல் மீண்டும் வேண்டுமா?

சென்னை நகரின் வீதிகளில் இப்போதெல்லாம் ஓர் அபூர்வமான கூக்குரல் கேட்கிறது. "அரிசியோ அரிசி!" என்பதுதான் அந்தக் கூக்குரல். ஒரு கட்டை வண்டியில் மூன்று மூட்டைகளில் மூன்று ரக அரிசிகளைப் போட்டுக்கொண்டு இரண்டு பேர் வண்டியைத் தள்ளிக்கொண்டு செல்லுகிறார்கள். பையன் ஒருவன் "அரிசியோ அரிசி!" என்று கூவிக்கொண்டு போகிறான். இந்தக் கூக்குரலை வீதியில் கேட்கும் போது சென்னை நகரத்திலுள்ள குடித்தனக்காரர்களுக்கு ஆறு மாதங்களுக்கு முன்னால் நினைத்தறியாத ஒரு நிம்மதி உண்டாகிறது. அரிசி வண்டி வரும்போதெல்லாம் குடித்தனக்காரர்கள் நிறுத்தி அரிசி வாங்குகிறார்களா? கிடையாது. சில சமயம் ஒரு வீதி முழுவதிலும் ஒரு வீட்டிலேகூட வண்டியை நிறுத்தி 'அரிசி வாங்குவதில்லை. "இந்த வீதி சுத்த மோசம்" என்று முணு முணுத்துக் கொண்டு அரிசி வண்டிக் காரர்கள் அடுத்த வீதிக்குப் போகிறார்கள்.

அநேக வீடுகளில் ஒரு வாரத்துக்கோ ஒரு மாதத்துக்கோ இன்னும் அதிக காலத்துக்கோ வேண்டிய அரிசி இருக்கிறது. ஆகையால் அதிகப்படியாக வாங்க யாரும் அவசரப் படுவதில்லை. வேண்டும்போது அரிசி வாங்கிக் கொள்ளலாம் என்ற நம்பிக்கை இருக்கிறது. அப்படி ஒருவேளை அரிசி தேவைப்படும்போது வாசலில் அரிசி வண்டி வராவிட்டால், சர்க்கார் நியாய விலைக் கடைக்குப் போய் வாங்கிக் கொள்ளலாம் என்ற தைரியம் இருக்கிறது. வண்டிக்காரன் ஒருவேளை ரொம்ப அதிகமாக விலை சொன்னால், "போ! போ! வேண்டாம்! நியாய விலைக் கடையில் வாங்கிக் கொள்கிறோம்" என்று சொல்லக்கூடிய துணிவும் இருக்கிறது. படிக்கு நாலணா வித்தியாசத்துக்குள் இருந்தால், அரிசியின் தரத்தை முன்னிட்டு வாசலில் வரும் நல்ல அரிசியையே வாங்கிக் கொள்ளப் பெரும்பாலோர் தயாராயிருக்கிறார்கள்.

சென்னை நகரின் குடித்தனக்காரர்கள் சென்ற பத்து வருஷ காலத்தில் இவ்வளவு நிம்மதியாக இருந்ததில்லை. இந்த ஆறு மாதங்களாகத்தான் இத்தகைய நிம்மதியை அவர்கள் அநுபவித்து வருகிறார்கள்.

சென்னை மாகாணத்திலுள்ள மற்ற நகரங்களிலும் பட்டணங்களிலும் ஏறக்குறைய இந்தத் திருப்திகரமான நிலைமை நீடித்து வருகிறது.

கிராமப் பிரதேசங்களில் பஞ்சத்திலடிபட்ட பகுதிகளைத் தவிர மற்றப் பகுதிகளிலும் இதே நிலைமை குடிகொண்டிருக்கிறது.

பஞ்சத்திலடிபட்ட கிராமப் பிரதேசங்களின் நிலைமை முற்றும் மாறானது. அங்கே தானியம் கிடைத்தாலும் ஜனங்கள் கையில் வாங்குவதற்குப் பணம் இல்லை. ஆகையால் பஞ்சப் பிரதேசங்களின் நிலைமையை முற்றிலும் வேறு நோக்கத்துடன் பார்க்க வேண்டும். பணப் பஞ்சம், தானியப் பஞ்சம் இரண்டும் தீரும் வரையில் பஞ்ச நிவாரண முறைகளைக் கையாள வேண்டும். பஞ்சப் பிரதேசங்களில் உள்ள பிரச்னை, மக்களின் உயிரை எப்படிக் காப்பாற்றுவது என்பதுதான். தானியக் கண்ட்ரோலைப் பற்றிய பிரச்னை அங்கே கிடையவே கிடையாது.

*   *   *   *

ஆறுமாத அநுபவத்துக்குப் பிறகு "கண்ட்ரோலை நீக்கியது சரியா? இல்லையா? இதே ஏற்பாட்டைத் தொடர்ந்து நடத்துவதா? அல்லது கண்ட்ரோலை முன்போல் மறுபடியும் கொண்டு வரவேண்டியதுதானா?" என்று யோசிக்க வேண்டியது அவசியமேயாகும். சர்க்காரும் யோசிக்க வேண்டியதுதான்; பொது மக்களும் ஆலோசிக்க வேண்டியதுதான்.

கண்ட்ரோல் ரத்து வெற்றி பெற்றிருக்கிறதா, இல்லையா என்று ஆராய்ச்சி செய்யும் போது ஒரு முக்கியமான விஷயத்தை ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். இந்த வருஷத்திலும் நமக்கு எதிராகத் தேவேந்திரன் சதி செய்திருக்கிறான்.

# உலக அரங்கில் மல்யுத்தம்










தென் மேற்குப் பருவ மழை வழக்கமான அளவு பெய்யவில்லை. ஆகையால் காவேரியில் போதுமான தண்ணீர் வரவில்லை. ஒரு சமயம் தஞ்சை ஜில்லா அடியோடு பாழ்த்து விடுமோ என்ற கவலை ஏற்பட்டிருக்கது. நம் முன்னோர் செய்த புண்ணியம் கொஞ்சம் பாக்கியிருப்பதால் தென்மேற்குப் பருவமழைக் காலம் போன பிறகு மைசூரிலும் சேலத்திலும் நல்ல மழை பெய்து மேட்டூரில் ஒரு வார காலத்திற்குள் தண்ணீர் மட்டம் ஏறியது. கிடைத்த தண்ணீரைச் சரியாகப் பகிர்த்து விடுவதால் தஞ்சை ஜில்லா விவசாயம் சுமாராக நடந்திருக்கிறது. குருவை மகசூல் ஒன்றுக்கு முக்கால் பங்குதான் கிடைத்தது. சம்பா மகசூலும் அவ்வளவு கிடைத்தால் பெரிய காரியம் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

வட கிழக்குப் பருவ மழை சென்ற ஐந்தாண்டுகளாகப் பெய்யவில்லை; இந்த ஆண்டிலும் பெய்யவில்லை. பருவ மழை வட்டமே மாறிப்போய் விட்டதாகத் தோன்றுகிறது. ஆகையால் ஐப்பசி கார்த்திகை மழை இனிமேல் என்றைக்குமே இல்லை யென்று வைத்துக்கொண்டு நிலைமையை நிர்ணயிக்க வேண்டும். வங்காளக் குடாக்கடலில் சுழிக்காற்று உண்டாகி அதன் விளைவாக மழை பெய்தால்தான் தென்னாட்டுக்கு இனி இந்த வருஷத்தில் மழை என்று வைத்துக் கொள்ளலாம்.

இவ்வாறாக, ஆடிப் பருவ மழை ஒன்றுக்குப் பாதியாகப் போயிருந்தும், ஐப்பசிப் பருவமழை அடியோடு பொய்த்துப் போயிருந்தும் கூட இம் மாகாணத்தின் உணவு நிலைமை இவ்வளவு திருப்திகரமாக இருக்கிறது;—அதாவது வீதிகளில் “அரிசியோ அரிசி!” என்று கூவி விற்கும் படியான நிலைமை நீடித்திருக்கிறது.

இதை எண்ணிப் பார்க்கும்போது இம்மாகாணத்தில் ஆறு மாதத்துக்கு முன்னால் உணவுக் கண்ட்ரோல் ரத்து செய்தது மகத்தான வெற்றி அளித்திருக்கிறது என்று அறியலாம்.

* * *

தஞ்சை ஜில்லாவிலிருந்து வரும் சில செய்திகள் அவ்வப்போது தினப் பத்திரிகைகளில் வெளியாகின்றன. “குருவை நெல்லின் விலை நல்ல பாம்பின் விஷம் போல் ஏறுகிறது” “டைபாய்டு சுரம் போல் வேகமாக ஏறுகிறது” “குருவை நெல் விலை இன்று மூட்டை இருபத்தொன்றரை ரூபாய்” “இன்றைக்கு இருபத்திரண்டு ரூபாய்!” என்றெல்லாம் செய்திகள் பிரசுரமாகின்றன.

படிப்பதற்கு இச்செய்திகள் பீதிகரமாயிருக்கின்றன. ஆனால் உண்மையில் அப்படிப் பீதி கொள்வதற்கு அவசியம் ஒன்றுமில்லை.

கோயமுத்தூர், செங்கற்பட்டு, திருநெல்வேலி முதலிய ஜில்லாக்களில் சாதாரணமாக நெல்லின் விலை மூட்டை முப்பது ரூபாயும் அதற்கு மேலும் கூட விற்று வருகிறது. உணவுக் கண்ட்ரோல் ரத்தானதிலிருந்து சென்னை நகரில் அரிசி மூட்டையின் விலை அறுபது ரூபாய்க்கு மேலே தான். அதாவது நெல்லின் விலை மூட்டை முப்பது ரூபாய்க்குக் குறைவாக இல்லை.

இந்த மாகாணத்தை ஆறு மண்டலங்களாகப் பிரித்து மண்டலத்துக்குள் ஜில்லாவுக்கு ஜில்லா நெல் தாராளமாகப் போகலாம் என்று ஏற்படுத்தினார்கள். திருநெல்வேலியிலிருந்து தென்னார்காடு வரையில் ஒரே மண்டலம். ஆகவே இந்த மண்டலத்துக்குள் நெல்லின் விலை சில இடங்களில் ஏறியும் சில இடங்களில் குறைந்தும் ஒரு சராசரிக்கு வந்துதான் தீரவேண்டும்.

கோயமுத்தூர் ஜில்லாவில் ஓரளவு தொழில் வளமிருக்கிறது. ஆகையால் பணமும் இருக்கிறது.

அந்த ஜில்லாவின் தேவைகளுக்காகத் தஞ்சாவூரில் வந்து நெல் வாங்குகிறார்கள். முன்னெல்லாம் கள்ள மார்க்கெட்டில் வாங்கி இரகசியமாகக் கடத்திக் கொண்டிருந்தார்கள். இப்போது பகிரங்க மார்க்கெட்டில் வாங்கிப் பகிரங்கமாக எடுத்துக் கொண்டு போகிறார்கள். குறுவை மகசூலின் ஆரம்பத்தில் மூட்டை பதினெட்டு ரூபாயாக இருந்தது. பெரும்பாலும் விற்ற பிறகு மிச்சம் உள்ள சொற்ப நெல்லுக்குக் கிராக்கி அதிகமாகி மூட்டை இருபத்திரண்டு ரூபாய் ஆவதில் அதிசயம் ஒன்றுமில்லை. அதைப் பற்றிப் பீதியடைய வேண்டியதுமில்லை. தஞ்சை ஜில்லா விவசாயிகளுக்கு இந்த விலை கூடுதலினால் ஏற்படும் சிறிய நன்மையைக் கண்டு மற்ற ஜில்லாக்காரர்கள் அசூயைப்பட மாட்டார்கள். ஏனெனில், மற்ற ஜில்லாக்களில் ஏற்கெனவே மூட்டை முப்பது ரூபாய்க்கு அல்லவா நெல் விற்று வருகிறது!

தஞ்சை ஜில்லாவில் நெல்லோ, அரிசியோ வாங்கிச் சாப்பிடும் நிலைமையில் உள்ளவர்களுக்கு மட்டும் இது கஷ்டமாகத் தானிருக்கும். அவர்கள் தங்கள் தேவையை நியாய விலைக் கடைகளில் வாங்கிப் பூர்த்தி செய்து கொள்ளலாம். மொத்தத்தில் தஞ்சை ஜில்லா விவசாயிகள் அடையும் அநுகூலம் அந்த ஜில்லாவிலுள்ள எல்லாருக்கும் கிடைத்ததாகக் கருத வேண்டும். நெல் விளைவு ஒன்றுக்கு முக்கால் பங்கு ஆகிவிட்ட நிலைமையில், நெல் விலை சிறிது கூடி விற்காவிட்டால் விவசாயத்தில் எப்படி உற்சாகம் இருக்கும்! இந்த விலை கூடுதலினால் ஏற்படும் அநுகூலத்தைப் பட்டாதார்கள், உழவர்கள் ஆகிய இரு சாராரும் அடைகிறார்கள் என்பதையும் மறந்து விடக் கூடாது. பண்ணையாட்கள் நெல் கூலிதான் பெறுகிறார்கள். வார சாகுபடியாரும் குத்தகைதாரர்களும் விளைந்த நெல்லிலேதான் பங்கு பெறுகிறார்கள். எனவே, கூடுதல் விலையால் ஏற்படும் லாபம் சரியாகப் பகிர்ந்து கொள்ளப்படுகிறது.

* * *

இதே முறையை அனுசரித்து வருங்காலத்தைச் சமாளிக்க முடியுமா என்ற முக்கியமான கேள்வி இப்போது எழுந்திருக்கிறது. இதைப் பற்றி நம் உணவு மந்திரி கனம் சி. சுப்பிரமணியம் தமது கவலையை வெளியிட்டிருக்கிறார். "ஐப்பசிப் பருவ மழை அடியோடு பொய்த்து விட்டதே! வருங்காலத்தில் ஏற்படக் கூடிய நிலைமையைச் சமாளிக்க முடியுமா!" என்று ஐயமுற்று அதை வெளிப்படுத்தியிருக்கிறார்.

உணவு மந்திரி கவலைப்படுவது இயற்கைதான். கவலைப்பட வேண்டியதும் அவசியந்தான்.

இன்னும் ஒரு வருஷத்துக்கு இம்மாகாணத்தின் உணவுத் தேவைகளை எப்படிப் பூர்த்தி செய்வது என்பதைப் பற்றி இப்போதே தீர்க்காலோசனை செய்ய வேண்டியது மிக மிக அவசியம்.

"நாம் எதிர்பார்த்தபடி பருவ மழை பெய்யவில்லை. வியாபாரிகளும் விவசாயிகளும் சரியாக நடந்து கொள்ளவில்லை. ஆகையால் பழைய பெத்தானே பெத்தான் என்று முன்னிருந்த கண்ட்ரோல் முறைகளைத் திரும்பக் கொண்டு வரப் போகிறோம்" என்று தீர்மானித்து விடலாம்.

அத்தகைய அவசியம் இன்னும் ஏற்படவில்லையென்று நாம் உறுதியாக நம்புகிறோம்.

இப்போது அமுலில் உள்ள முறையை வைத்துக் கொண்டே முன் யோசனையுடன் சில காரியங்களைச் செய்து நிலைமையைச் சமாளிக்கலாம் என்றும் கருதுகிறோம்.

ஆறு மாதங்களுக்கு முன் உணவுக் கண்ட்ரோலை ரத்து செய்தபோது சர்க்கார் தங்கள் அதிகா









ரங்கள் எல்லாவற்றையுமே பறி கொடுத்து விடவில்லை. நெருக்கடியான நிலைமையைச் சமாளிப்பதற்குச் சில முக்கிய அதிகாரங்களை வைத்துக் கொண்டுதா னிருக்கிறார்கள்.

தானியத்தின் விலை அளவு மீறிப் போவதைத் தடை செய்யச் சர்க்காரிடம் அவசியமான அதிகாரம் இருக்கிறது.

வியாபாரிகள் தானியங்களை வாங்கி அமித லாபத்துக்கு விற்கும் நோக்கத்துடன் கட்டி வைப்பதைத் தடை செய்யவும், அவசியமானபோது அவசியமான அளவில் தானியக் கொள்முதல் செய்யவும் அதிகாரம் இருக்கத்தான் இருக்கிறது.

அதிக பட்ச விலையை நிர்ணயிப்பது, வர்த்தகர்கள் நெல்லை வாங்கிக் கட்டிப் போடுவதைத் தடை செய்வது, விவசாயிகளுக்குத் தொந்தரவு இல்லாத 'லெவி' முறையின் மூலம் ஓரளவு நெல் கொள்முதல் செய்வது,—ஆகிய இத்திட்டங்களைக் கையாளுவதின் மூலம் வருங்கால நெருக்கடியைச் சமாளிக்க வேண்டும்.

வட இந்தியாவில் பல பகுதிகளில் இந்த வருஷம் நல்ல மகசூல் விளைந்திருப்பதாகத் தெரிகிறது. அவ்விதம் விளைந்திருக்கும் இடங்களிலிருந்து புன்செய் தானியங்களை வேண்டிய அளவு தருவித்துக் கொள்ள ஏற்பாடு செய்துவிட்டால், நமது உணவு மந்திரியின் கவலை முக்கால் பங்கு தீர்ந்து விடும்.

நல்ல வேளையாக, சென்ற ஆறு மாதத்தில் அரிசியின் அடிமைத் தனத்திலிருந்து இம்மாகாண மக்கள் பல இடங்களில் விடுதலை பெற்றிருக்கிறார்கள். மைலோ, சோளம், கேழ்வரகு முதலிய தானியங்களின் செல்வாக்கு உயர்ந்து வருகிறது.

மக்களின் உணவுத் தேவையை அரிசியைக் கொண்டுதான் பூர்த்தி செய்ய வேண்டும் என்றால், சென்னை மாகாணம் கூடிய சீக்கிரத்தில் 'இன்ஸால்வெண்ட்' ஆக வேண்டிய நிலைமை ஏற்பட்டு விடும். அது அவசியமுமில்லை.

நியாயமான விலைக்குப் புன்செய் தானியம் தாராளமாகக் கிடைக்கும்படி செய்து விட்டால், இந்த இராஜ்யத்தின் மக்களில் 100-க்கு 80 பேர் திருப்தி அடைவார்கள் என்பதில் ஐயமில்லை.

''அரிசிக்கு அடிமையாகத்தான் இருப்போம்'' என்று சொல்லும் மற்ற இருபது பேருக்கு வேண்டிய அரிசி இம்மாகாணத்தில் எப்படியும் உற்பத்தியாகிவிடும். டெல்ட்டா ஜில்லாக்களில் 'லெவி' முறையில் விவசாயிகளுக்கு அதிக தொந்தரவில்லாமல் ஓரளவு நெல் கொள்முதல் செய்து சர்க்கார் கையிருப்பில் வைத்துக் கொள்ளலாம்.

புன்செய் தானியம் அதிகமாகக் கிடைக்கும் போது அரிசி விலை அபரிமிதமாக ஏறுவதற்கு இடமில்லை. சிறிதளவு ஏறினாலும் அரிசிச் சாப்பாட்டுக்காரர்கள் சமாளித்துக் கொள்வார்கள். அதாவது மறுபடியும் பழையபடியே கண்ட்ரோல் விதிகளுக்கும் ரேஷன் தொல்லைகளுக்கும் உள்ளாவதைக் காட்டிலும் கரேபச்சையாகச் சிறிது அதிக விலை கொடுத்தாவது அரிசி வாங்கிக் கொள்ளும் நிலைமையையே விரும்புவார்கள். ''அரிசியோ அரிசி!'' என்று வீதிகளில் கேட்கும் கூக்குரல் அவர்களுக்கு அளிக்கும் நிம்மதியை மறுபடி இழக்க விரும்ப மாட்டார்கள்.

*　　*　　*

உணவுக் கண்ட்ரோல் விஷயத்தில் சென்னை சர்க்காரின் கொள்கையை மத்திய சர்க்காரின் திட்டக் கமிஷன் நிபுணர்கள் விழுந்து குளறுவார்களோ என்ற பயம் ஒன்று இருந்து வருகிறது.

## பதவியின் பிடிவாதம்!




சிலர் பதவி கிடைத்தால் அதை இலேசில் விடுவதில்லை. ஆனால் ஜவாஹர்லால் அவர்களையோ காங்கிரஸ் தலைமைப் பதவி விட மாட்டேன் என்று பிடிவாதம் பிடிக்கிறது.

மேற்படி திட்டக் கமிஷனைச் சேர்ந்தவர்கள் காகிதத் திட்டங்கள் போடுவதில் அபார சாமர்த்திய சாலிகள். சென்ற இரண்டு வருஷங்களாகத் திட்டம் வகுத்துக் கொண்டே இருக்கிறார்கள். மேலும் மேலும் திட்டங்களை அபிவிருத்தி செய்து கொண்டே போகிறார்கள்.

ஐந்து வருஷத்தில் 1,800 கோடி ரூபாய் செலவாகக்கூடிய திட்டங்களை முதலில் வகுத்தார்கள். பின்னர், தொகையைப் பெருக்கிக் கொண்டே போய் இப்போது இரண்டாயிரம் கோடி ரூபாய் செலவுக்குத் திட்டம் வகுத்திருக்கிறார்கள்.

இவர்கள் காகிதத்தில் புள்ளி விவரங் கூட்டிப் போடும் திட்டங்கள் அப்படியே நடந்து விடும் என்பது இவர்களுடைய ஆசையான நம்பிக்கை.

"திட்டத்துக்கு அஸ்திவாரம் கண்ட்ரோல். ஆகையால் எங்கள் திட்டம் நிறைவேற வேண்டுமானால் உணவுக் கண்ட்ரோலைக் கடுமையாக அமுல் நடத்த வேண்டும்!" என்பது இவர்களுடைய சித்தாந்தம்.

மத்திய சர்க்காரிடமும் முக்கியமாக பண்டித ஜவாஹர்லால்ஜியிடமும் திட்டக் கமிஷன் நிபுணர்களுக்கு அபரிமிதமான செல்வாக்கு உண்டு.

ஆகவே, "கண்ட்ரோல் ரத்து தோற்று விட்டது. ஆகையால் மறுபடியும் பழைய முறைக்குத் திரும்பிச் செல்லுங்கள்!" என்று மத்திய சர்க்கார் கண்டிப்பாகக் கட்டளை யிடக்கூடிய அபாயம் ஒன்று எப்போதும் உண்டு.

இப்போதைக்கு அந்த அபாயம் ஒதுங்கிப் போயிருக்கிறது. ஆனால் அடியோடு போய் விட்டதாகச் சொல்ல முடியாது.

ஆகவே கண்ட்ரோல் ரத்து முறையினால் இந்த மாகாணத்து விவசாயிகளும் பொது மக்களும் மொத்தத்தில் நன்மை அடைந்திருக்கிறார்கள் என்று நம்புவோரும், இந்த முறையே நீடித்திருக்க வேண்டும் என்று கருதுவோரும் நமது இராஜ்ய சர்க்காரின் உணவுக் கொள்கையை ஆதரித்துப் பூரணமாக ஒத்துழைக்க வேண்டும்.

சிறிய அசௌகரியங்களைப் பெரிது படுத்திக் கூக்குரல் இட்டால், எட்டு வருஷம் கஷ்டப்பட்ட பிறகு நாம் அடைந்திருக்கும் "உணவு விடுதலை" என்னும் பாக்கியத்தை மீண்டும் இழந்துவிட நேரிடும். பழைய தொல்லைகளும் தொந்தரவுகளும் ஒன்றுக்கு இரண்டு மடங்காகப் பெருகி நம் தலையில் வந்து கமரும்.

# சென்னைப் பட்டினமும் சின்னப் பட்டினமும்

முற்றும் துறந்த சாமியார்களும் எப்படி மோக வலையில் விழக்கூடும் என்பதற்கு ஆந்திர தேசபக்தர் சுவாமி சீதாராம் என்பவர் தற்சமயம் உதாரணமாக விளங்கி வருகிறார். ஆந்திர மாகாணத்துக்காக இவர் பல தடவை உண்ணாவிரதம் இருந்து உயிர் துறந்துவிட முயன்றும் ஆசை காரணமாக உயிர் போகவில்லை; அந்த வரையில் நமக்கு மிக்க சந்தோஷம். ஆனால் ஆந்திர மாகாணமும் நம் ஆந்திர சகோதரர்களுக்குக் கிடைக்கவில்லை; அதைக் குறித்து நமக்கு மிக்க வருத்தம்.

ஆந்திர சகோதரர்களுக்கு ஆந்திர மாகாணம் இன்னும் கிடைக்காம லிருப்பதற்குக் காரணம் "மதராஸ் மனதே" என்னும் அவர்களுடைய துராசைதான். இதை எத்தனையோ பேர் எத்தனையோ தடவை எடுத்துக் காட்டிய பிறகு இப்போதுதான் ஆந்திரத் தலைவர்கள் உணரத் தொடங்கி யிருக்கிறார்கள்.

உணர்ந்தும் என்ன பயன்! லோபமும் மோகமும் போய் மதமும் மாத்சரியமும் வந்திருக்கின்றன. "மதராஸ் நமக்கு வராவிட்டால், தமிழர்களுக்கும் கிட்டக் கூடாது. சென்னை நகரைத் தனி இராஜ்யமாகச் செய்ய வேண்டும்" என்ற கிளர்ச்சியில் இப்போது இறங்கி யிருக்கிறார்கள். இதற்கு 'ராஜி முயற்சி' என்று பெயராம். இந்த ராஜி ஏற்பாட்டைத் தமிழர்கள் ஒப்புக் கொள்ள வேண்டுமாம். ஒப்புக் கொள்ளச் செய்வதற்கு என்ன வழி என்று ஆந்திரத் தலைவர்கள் கூடிக் கூடி ஆலோசித்து வருகிறார்கள். இதற்காகவே சுவாமி சீதாராம் டில்லிக்குப் போவதைத் தள்ளி வைத்து விட்டு ஸ்ரீ டி. பிரகாசத்துடனும் ஸ்ரீ சஞ்சீவி ரெட்டியுடனும் கலந்து ஆலோசனைகள் நடத்தி வருகிறாராம்.

லோப மோகம் பலிக்கவில்லையென்றால், மதமும் மாத்சரியமும் மட்டும் பலிக்குமா! "நமக்குக் கிட்டாதது தமிழர்களிடமும் இருக்கக் கூடாது" என்று சொன்னால், அதை யாராவது 'ராஜி முயற்சி' என்று ஒப்புக் கொள்வார்களா! வேறு யார் ஒப்புக் கொண்டாலும் தமிழர்கள் ஒப்புக் கொள்வார்களா! ஒரு நாளும் மாட்டார்கள்.

ஆந்திரத் தலைவர்களின் ராஜி யோசனை அசூயை காரணமாக ஏற்பட்ட அபத்த யோசனை என்பது ஒரு புறம் இருக்க, அந்த யோசனையை ஒப்புக் கொள்வதால் ஏற்படக் கூடிய விபரீதத்தையும் எண்ணிப் பார்க்க வேண்டும்.

* * *

சென்ற வாரத்தில் சென்னை நகர சபையின் பிரதம கணக்கு அதிகாரி (சீப் அக்கவுண்ட்ஸ் ஆபீஸர்) ஸ்ரீ எஸ். சத்தியமூர்த்தி நகர சபையின் பொருளாதார வரவு செலவு நிலைமை பற்றி எல்லாரும் எளிதில் தெரிந்து கொள்ளக் கூடியவாறு ஓர் அருமையான பிரசங்கம் செய்தார். அச்சமயம் "சென்னை நகர சபையின் வரவு செலவு இந்தியாவிலுள்ள ஸி வகுப்பு இராஜ்யங்களின் வரவு செலவை ஒத்தது" என்பதைப் பெருமிதத்துடன் குறிப்பிட்டார்.

இந்தப் பிரசங்கத்துக்குத் தலைமை வகித்த நமது நிதி மந்திரி ஸ்ரீ ஸி. சுப்பிரமணியம் அதிலிருந்து வெளியான ஒரு முக்கியமான உண்மையைத் தெளிவாக எடுத்துக் காட்டினார்.

சென்னை நகரம் இப்போது இவ்வளவு பெரிதாகவும் செல்வ வளமுள்ளதாயும் வரவு செலவில் ஸி இராஜ்யத்தை ஒத்ததாயும் இருப்பது எதனால்! ஒரு பெரிய இராஜ்யத்துக்குத் தலை நகரா யிருப்பதினால்தான். ஆந்திர நாட்டின் தலை நகர் விஜயவாடாவுக்கும் தமிழ்நாட்டின் தலைநகர் திருச்சி அல்லது மதுரைக்கும் போய்விட்டால், அப்புறம் சென்னைப் பட்டினத்தின் நிலை என்னவாகும்! இப்போது உள்ளது போல் வளம் பொருந்திய பெரிய நகரமா யிருக்க முடியுமா! முடியவே முடியாது. மிகச் சொற்ப காலத்தில் சென்னைப் பட்டினம் நூறு வருஷத்துக்கு முன்னிருந்தது போன்ற சின்னப் பட்டினம் ஆகிவிடும்! இன்னும் கொஞ்ச காலத்துக்குப் பிறகு சின்னக் கிராமம் ஆனாலும் ஆகிவிடும்!! நிச்சயமாக அப்போது மதராஸ் நகரம் ஸி வகுப்பு இராஜ்யத்தை ஒத்ததாக இராது! இஜட் வகுப்புக்கும் கீழே வகுப்பு உண்டா என்று பார்க்க வேண்டியதாகும்.

சென்னைப் பட்டினத்தைத் தனி இராஜ்யமாக்கும் யோசனை அநீதியான, அசூயையை அடிப்படையாகக் கொண்ட, அபத்த யோசனை என்பது மட்டும் அல்ல; அது சென்னைப்பட்டினத்தையே அழித்து விடக் கூடிய படுமோச யோசனையாகும்.

# மலானுக்கு ஒரு அண்ணன்!

கொழும்பு நவம்பர் 14உ.

விவசாயத்தில் கைதேர்ந்தவர்களான ஏழரை லட்சம் இந்தியத் தொழிலாளர் இந்நாட்டிலிருக்கிறார்கள். அவர்களைத் தகுந்தபடி பயன்படுத்தினால் இலங்கை அரசாங்கம் ஊர் ஊராக, தேசம் தேசமாக அன்னக் காவடி தூக்கிக் கொண்டு அலைய வேண்டியிருக்காது. நாற்று நடுவதை ஒரு புதுமையாக மதித்து மேளதாளங்களுடன் திருவிழாக் கொண்டாடும் இலங்கை மந்திரிகள், இந்தியத் தொழிலாளரை அவர்களது தோட்டங்களுக் கருகிலிருக்கும் நிலங்களிலே நெல் சாகுபடி செய்யத் தூண்டி ஆதரவு காட்டினால் ஓரிரண்டு ஆண்டுகளுக்குள் கீழ்த் திசையின் தானியக் களஞ்சியமென்ற பழைய பெருமையை இலங்கை அதிக சிரமமின்றி அடைந்து விடலாம். ஆனால் இத் தேசத்துக்கு எவ்வளவோ அருமை பெருமையான காரியங்களைச் செய்யக்கூடியவர்களான ஒரு பெரிய சமுதாயத்தை அடக்கி, ஒடுக்கி, அனாதைகளாக்கி, முடிவில் நாடு கடத்தப் பார்க்கிறது. இத்தகைய செய்கையின் பலாபலன்கள் என்ன என்பதை இலங்கை சர்க்கார் ஆய்ந்தோய்ந்து பார்க்கவில்லை.

நீதி மன்றத்தைத் துச்சமாக மதித்து, நியாயத்தையும் நேர்மையையும் தலை குனிய வைத்து, கொடிய வகுப்பு வாத வெறியாட்டம் நடத்துவதில் தனக்கு நிகர் யாருமில்லை யென உலகத்தில் மலான் ஆட்சி ஒன்றுதான் பெயரெடுத்திருந்தது. மலானுக்கு ஒரு அண்ணன் இலங்கையில் நானிருக்கிறேனென்று பிரதமர் டட்லி சேனநாயகா நேற்று எங்கள் பார்லிமெண்டில் மார் தட்டி வீராப்புப் பேசி யிருக்கிறார். பிரஜா வுரிமைச் சட்டத் திருத்த மசோதா பல லட்சம் இந்தியத் தொழிலாளரைக் கடுமையாகவும் நேர்மையற்ற முறையிலும் பாதிக்குமென்று இலங்கை இந்திய காங்கிரஸ் அழாத குறையாகப் பிரதமரிடம் முறையிட்டது. இந்தியப் பிரதமர் நேருவும் இரு தேச கலாசார, சரித்திர பூகோள ஒற்றுமையின் பெயரிலும் பிரஸ்தாப மசோதாவைக் கைவிடுமாறு சொந்த ஹோதாவில் இலங்கைப் பிரதமருக்குக் கடிதம் எழுதினார். இலங்கைப் பார்லிமெண்டு சபையிலும் ஸ்ரீ வி. சுந்திரலிங்கம் போன்ற எதிர்க் கட்சித் தலைவர்கள் அரசாங்கத்துக்கு நியாயத்தை உணர்த்தப் படாத பாடுபட்டு கரடியாகக் கத்திப் பார்த்தார்கள். இலங்கையை மற்றொரு தென்னாப்பிரிக்காவாக்க வேண்டாமென்று ஸ்ரீ பீட்டர் கெனமென் எச்சரிக்கையும் செய்தார். பிரதம மந்திரியின் காதில் இதொன்றும் ஏறவில்லை.

விவாதத்தின் பொழுது எதிர்க்கட்சி அங்கத்தினர்களுக்குப் பதில் அளிக்கும் போது பிரதமர் சில விஷயங்களைச் சொல்லியிருப்பது ஏற்கெனவே கசந்து போயிருக்கும் இலங்கை - இந்தியா உறவை மேலும் மோசமாக்குவதாய்த்தான் இருக்கிறது. இந்திய அரசாங்கம் ஏற்றுக் கொள்ளுவதாயிருந்தால் இங்குள்ள இந்தியர்கள் எல்லோரையுமே இலங்கை சர்க்கார் செலவில் நாளையே நாடுகடத்திவிடத் தயாரா யிருப்பதாகப் பிரதமர் டட்லி சேனநாயகா கூறுகிறார். இலங்கை இந்தியர்கள் நீடித்து இலங்கையில் வசிப்பதினால் அவர்கள் இலங்கையைச் சேர்ந்தவர்களே தவிர இந்தியப் பிரஜைகளில்லை யென்பதை நேருஜி ஏற்கெனவே தெள்ளத் தெளிவாக அறிவித்துவிட்டார். பிரஜாவுரிமைக்கு மனுப்போட்டவர்கள் இந்தியர்களில்லை யென்று சொல்லி இங்குள்ள இந்திய ஹை கமிஷனரும் சென்ற பல மாதங்களாக அவர்களுக்கு இந்தியா பாஸ்போர்ட் தர மறுத்து வருகிறார். இந்த நிலைமையில் இலங்கை இந்தியர்களை இந்தியா திரும்ப ஏற்றுக்கொள்ளுமா என்ற பேச்சுக்கே இடமில்லை. இதற்கு இந்தியா தயாராயிருந்தாலும் நாடு கடத்தப்படுவதற்கு இந்தியர்கள் தயாரா யிருப்பார்களா என்ற கேள்விக்கும் இடம் கிடையாது. பிறந்து வளர்ந்து, இறந்து, தேயிலை ரப்பர் தோட்டங்களுக்கு உரமாகி, இலங்கையிலேயே தலைமுறை தலைமுறையாக வசித்து வரும் இந்தியர்கள் தங்களை இலங்கைப் பிரஜைகளாகவே மதிக்கிறார்கள். தங்களை நாடு கடத்த இலங்கை அரசாங்கத்துக்கு உரிமை யிருப்பதாக அவர்கள் நினைக்கவில்லை. உரிமை யிருப்பதாக அவர்கள் சொல்லிக் கொண்டால் அதை எதிர்த்துப் போராடி, இந்நாட்டின் பிரஜா உரிமை பெற எவ்விதமான தியாகங்கள் செய்யவும் இலங்கை இந்தியர்கள் சித்தமா யிருக்கிறார்கள்.

—ஜவி.

## பஞ்ச நிவாரணத் தொண்டுக்கு உதவி

அன்னதான சிவன் சங்கத்தார் வடாற்காடு ஜில்லாவில் செங்காடு, நரசிங்கபுரம் என்னும் இடங்களில் பஞ்ச நிவாரணத்துக்காகக் கஞ்சி நிலையங்கள் நடத்தி வருகிறார்கள். தினம் சுமார் இரண்டாயிரம் ஏழைகள் இந்த நிலையங்களுக்கு வந்து கஞ்சி வாங்கி அருந்திவிட்டுச் செல்கிறார்கள்.

இந்த அருமையான தொண்டுக்கு உதவி செய்யக் கும்பகோணம் வாணி விலாஸ சபையார் முன் வந்திருப்பதைப் பாராட்டுகிறோம். நாளது நவம்பர் 30உ ஞாயிற்றுக்கிழமை குமாரி சாருபாலாவின் நடனக் கச்சேரி நடத்தி அதில் வசூலாகும் தொகை முழுவதையும் பஞ்ச நிவாரணத் தொண்டுக்கு அளிக்க வாணி விலாச சபையார் ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

கும்பகோணத்திலும் சுற்றுப் புறங்களிலுமுள்ள தர்ம சிந்தனையுள்ள அன்பர்கள் அன்னதான சிவன் பெயரால் நடக்கும் இந்த அருமையான பசிப்பிணி போக்கும் கைங்கரியத்துக்குப் பூரண உதவி செய்வார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

# பொன்னியின் செல்வன்

கல்கி

மணியம்

## அத்தியாயம் 18

## அம்பு பாய்ந்தது!

ஓடைக் கரையில் ஒரு மரத்தின் பின்னால் பாதி மறைந்தும் மறையாமலும் நின்ற ஊமை ராணியைப் பூங்குழலி பார்த்தாள். எதிர்பாராத சமயத்தில் எதிர்பாராத இடத்தில் அவளைக் கண்டதினால் பூங்குழலிக்குச் சிறிது திகைப்பு உண்டாயிற்று. அயல் மனிதர்களைப் பார்ப்பதில் ஊமை ராணிக்குப் பிரியம் இல்லை என்பது அவளுக்குத் தெரிந்திருந்தது. படகில் சேந்தன் அமுதன் இருக்கிறானே, அவனைக் கண்டு ஒரு வேளை அத்தை ஓடி விடுவாளோ? — என்ற எண்ணம் அவள் மனத்தில் தோன்றிய அந்தக் கணமே அவளுடைய அத்தை ஓடத் தொடங்கி விட்டாள். பூங்குழலி சட்டென்று ஓடத்திலிருந்து ஓடைக் கரையில் குதித்து மேட்டில் ஏறிப் பார்த்தாள். அத்தை சற்றுத் தூரத்தில் அடர்ந்த காட்டுக்குள் மறைந்ததைக் கவனித்தாள்.

இதற்குள் சேந்தன் அமுதனும் கரையில் குதித்து மேட்டில் ஏறிப் பூங்குழலி நின்ற இடத்துக்கு வந்து சேர்ந்தான்.

"பூங்குழலி! பூங்குழலி! சற்று முன் இங்கே நின்றது யார்?" என்று கேட்டான்.

"உனக்குத் தெரியவில்லையா, அமுதா?"

"நிச்சயமாய்ச் சொல்லத் தெரியவில்லை; ஒருவேளை......"

"ஆமாம்; என் அத்தைதான்! நீ செத்துப் போனதாக நினைத்துக் கொண்டிருந்த உன் பெரியம்மாதான்!"

"ஆமாம்; அம்மாவின் ஜாடை கொஞ்சம் இருந்ததுபோல் தோன்றியது."

"வெறுமனே ஏதாவது சொல்லாதே! சின்ன அத்தைக்கும் பெரிய அத்தைக்கும் உருவ ஒற்றுமை ஒன்றுமில்லை. குணத்தில் ஒற்றுமையும் இல்லை. வீட்டில் கட்டிப் போட்டிருக்கும் பசு எங்கே? காட்டில் எதேச்சையாகத் திரியும் சிங்க ராணி எங்கே?"

"சரி; அப்படியே இருக்கட்டும். ஏன் உன்னைப் பார்த்ததும் சிங்க ராணி ஓடிப் போய் விட்டாள்?"

பூங்குழலி சிரித்துவிட்டு, "என்னைக் கண்டு ஓடவில்லை; உன்னைப் பார்த்து விட்டுத்தான் ஓடினாள். அயல் மனிதர்களைப் பார்ப்பதற்கு அவளுக்குப் பிரியமிருப்பதில்லை" என்றாள்.

"நான் அயல் மனிதன் அல்லவே?"

"அத்தைக்கு அது தெரியாதல்லவா? தெரிந்து கொண்டால் உன்னைப் பார்த்து விட்டு ஓடமாட்டாள். ஆனால் தெரிந்து கொள்வதற்கு முன்னால் ரொம்பவும் தயங்குவாள்."

"பூங்குழலி! இப்போது என்ன செய்யப் போகிறாய்?"

"அத்தையைத் தேடிப் பிடிக்கப் போகிறேன்."

"நானும் வரட்டுமா?"

"எதற்காக?"

"பெரியம்மாவை நேரில் பார்த்துத் தெரிந்து கொள்வதற்காகத்தான்."




"எதற்காகப் பெரியம்மாவை நீ தெரிந்து கொள்ள வேண்டும்?"

சேந்தன் அமுதன் தன் பெரியம்மாவின் பழைய வரலாற்றைச் சிறிது பூங்குழலியிடம் அறிந்து கொண்டிருந்த படியால் அவளைப் பார்க்க ஆவலாயிருந்தான். அத்துடன் பெரியம்மா தன் கட்சியிலிருந்து பூங்குழலியின் மனத்தை மாற்றுவதற்கு உதவி செய்யக் கூடும் என்ற ஆசையும் அவனுக்கு இருந்தது.

"எத்தனையோ காரணங்கள் இருக்கின்றன. ஆனால் பெரியம்மாவைத் தெரிந்து கொள்ள விரும்புவதற்குக் காரணம் வேண்டுமா, என்ன?" என்றான்.

பூங்குழலி சற்று யோசித்து விட்டு, "சரி, வா! போகலாம். உன்னையும் அழைத்துச் சென்றால் பெரியம்மாவைப் பிடிப்பது சற்றுப் பிரயாசையாக இருக்கும். ஆனாலும் யார் விடுகிறார்கள்? படகை இங்கேயே கட்டிப் போட்டு விட்டுப் போகலாம்!" என்றாள்.

அவ்விதமே படகை ஒரு தாழம்பூப் புதரின் அடியில் மறைவாக விட்டுக் கட்டியும் போட்டு விட்டு இருவரும் கோடிக் கரைக் காட்டை நோக்கிச் சென்றார்கள்.

நடந்து கொண்டே சேந்தன் அமுதன் "பூங்குழலி! பெரியம்மா இலங்கைத் தீவிலும் பூதத் தீவிலும் இரக்கிறாள் என்று சொன்னாயல்லவா?" என்றான்.

"ஆமாம்; சில சமயம் இலங்கைத் தீவிலும் சில சமயம் பூதத் தீவிலும் இருப்பாள்."

"இங்கே அடிக்கடி வருவதுண்டா?"

"இல்லை; அபூர்வமாகத்தான் வருவாள். நான் வெகு நாள் அவளைப் போய்ப் பார்க்காமலிருந்தால் வருவாள்."

"இப்போது உன்னைப் பார்க்கத்தான் வந்திருக்கிறாளா?"

"இந்தத் தடவை வேறு காரியமாக வந்திருக்கிறாள் என்று தோன்றுகிறது."

"வேறு என்ன காரியம்?"

"அவளுடைய சுவீகாரப் புதல்வன் கடலில் முழுகிப் போய்விட்டானா, தப்பிப் பிழைத்துக் கரை சேர்ந்தானா என்று தெரிந்து கொள்வதற்கு வந்திருக்கலாம். இளவரசர் கப்பலேறிப் புறப்பட்ட பிறகு கடலில் சுழிக்காற்று அடித்தது அத்தைக்குத் தெரியும் அல்லவா?"

"அருள்வர்மர் இவளுடைய சுவீகாரப் புதல்வரா? அப்படியானால் பெரியம்மாவின் சொந்தமகன் யார்?"



"அதுதான் எனக்குத் தெரியவில்லை. ஒரு நாள் இல்லாவிட்டால் ஒரு நாள் அந்த இரகசியத்தை நான் கண்டு பிடித்துத் தெரிந்து கொள்ளப் போகிறேன்."

"சொந்த மகன் உயிரோடிருக்கிறானோ, அல்லது இறந்துபோய்விட்டானோ?"

"ஆம்; அவன் இறந்து போயிருக்கவுங் கூடும். யாருக்குத்தெரியும்?" என்று சொன்னாள் பூங்குழலி.

சற்றுப் பொறுத்து, "அமுதா! அத்தையைப் பார்த்தாயே? உன் அன்னையின் முக ஜாடையாயிருப்பதாகச் சொன்னாய்; வேறு யாருடைய முகமாவது ஞாபகத்துக்கு வந்ததா?" என்று கேட்டாள்.

"ஏதோ ஞாபகம் வருவது போலத் தோன்றுகிறது. தெளிவாகத் தெரியவில்லை. மேகத்திரை போட்டு மறைத்தது போலிருக்கிறது."

"பழுவூர் இளைய ராணியை நீ அடிக்கடி பார்த்ததுண்டா?"

"சில சமயம் பார்த்ததுண்டு. ஆமாம்! நீ சொன்ன பிறகு யாருடைய முக ஜாடை என்று தெரிகிறது. நந்தினி தேவியின் முகத் தோற்றமேதான்! ஆச்சரியமாயிருக்கிறதே! அது எப்படி ஏற்பட்டிருக்கும், பூங்குழலி? நீ எப்படி அந்த ஒற்றுமையைக் கண்டு பிடித்தாய்?"

"அத்தையை அடிக்கடி நான் பார்த்துக் கொண்டிருக்கிறேன். பழுவூர், இளைய ராணியைச் சில தினங்களுக்கு முன்னாலேதான் இதே கோடிக் கரையில் பார்த்தேன். முகத் தோற்றத்தின் ஒற்றுமை உடனே எனக்குத் தெரிந்துபோய் விட்டது......"

"காரணம் என்னவாயிருக்கும்?"

"அதையுந்தான் ஒரு நாள் கண்டு பிடிக்கப் போகிறேன். இன்றைக்கு அத்தையைப் பார்த்ததும் அதைப்பற்றிக் கேட்கலாமென்றிருக்கிறேன்."

"அத்தைதான் ஊமையாயிற்றே? எப்படி அவளுடன் பேசுவாய்?"

"நீ உன் தாயாரோடு பேசவில்லையா, அமுதா!"

"ஜாடையினால் பேசுவேன். பிறந்தது முதல் பழக்கம். அப்படியும் புதிய விஷயம் ஒன்றைப் பற்றிச் சொல்வதாயிருந்தால் கஷ்டந்தான்!"

"பெரிய அத்தையும் நானும் அப்படித்தான் ஜாடையினால் பேசிக் கொள்வோம். ஜாடையினால் பேச முடியாததைச் சித்திரம் எழுதிக் காட்டிக் கொள்வோம்..."

"ஒரே குடும்பத்தில் அக்கா, தங்கை இருவரும் ஊமையாகப் பிறந்தது எவ்வளவு கஷ்டமான விஷயம்? அவர்களைப் பெற்றவர்களுக்கு அதனால் எவ்வளவு துன்பமாயிருந்திருக்கும்?"




"அதுமட்டுமல்ல. சிறு வயதில் அக்காவும் தங்கையும் ஓயாமல் சண்டை போட்டுக் கொள்வார்களாம். அதனால்தான் பாட்டனார் பெரிய அத்தையை மட்டும் அழைத்துக் கொண்டு போய்ப் பூதத் தீவில் குடியேறி வசித்து வந்தாராம். பெரிய அத்தையின் பேரில் தாத்தாவுக்கு

ரொம்ப ஆசையாம். குழந்தை பிறந்தவுடன் அவளுக்கு ராணியாகும் யோகம் இருக்கிறது என்று யாரோ ஜோசியன் ஒருவன் சொன்னானாம். அதனால் குழந்தை ஊமை என்று தெரிந்ததும் அவருடைய மன வேதனை ரொம்ப அதிகமாயிருந்ததாம்......"

இப்படிப் பேசிக் கொண்டே அவர்கள் காட்டில் புகுந்தார்கள். வெகு நேரம் தேடி அலைந்தும் ஊமை ராணியைக் கண்டு பிடிக்க முடியவில்லை.

"அமுதா! நீ என்னுடன் இருப்பதனால் தான் அத்தையைக் கண்டுபிடிக்க முடியவில்லை. உன்னைக் கண்டு வேண்டுமென்றே மறைந்து கொள்கிறாள்."

"என் அதிர்ஷ்டம் அவ்வளவுதான். நான் நினைத்தது எதுவும் நடைபெறுவதில்லை. நான் போகட்டுமா?"

"எப்படிப் போவாய்? இந்தக் காட்டிலிருந்து உன்னை நான்தான் வெளியிலே கொண்டு போய் விட வேண்டும்."

இந்தச் சமயத்தில் ஓர் அதிசயமான குரலின் ஒலி காட்டுக்குள்ளேயிருந்து வந்தது. அது மனிதக் குரலாகவும் தோன்றவில்லை; மிருகங்களின் குரலாகவும் தோன்றவில்லை.

இரண்டு மூன்று தடவை அந்த ஒலி கேட்டது. அந்த ஒலி வந்த திசையை நோக்கிச் சில மான்கள் பாய்ந்து ஓடின.

பூங்குழலி சற்று நின்று யோசித்தாள். "அமுதா! சத்தம் செய்யாமல் என்னைத் தொடர்ந்து வா!" என்று கூறினாள்.

குரல் வந்த திக்கை நோக்கி இருவரும் மெள்ள நடந்து சென்றார்கள். சற்று நேரத்துக்கெல்லாம் அதிசயமான காட்சி ஒன்றைக் கண்டார்கள்.

ஊமை ராணி ஒரு மரத்தின் அடிப் பகுதியில் சாய்ந்து நின்று கொண்டிருந்தாள். அவளுடைய கையில் இளந்தளிர்கள் சில வைத்துக் கொண்டிருந்தாள். அவளைச் சுற்றிலும் ஏழெட்டு அழகிய மான்கள் நின்றுகொண்டிருந்தன. அவள் கையிலிருந்த தளிர்களைத் தின்பதற்கு அவை போட்டியிட்டன. அவளுடைய தோளின் மீது ஒரு சிறிய மான் குட்டி உட்கார்ந்து தன் சின்னஞ் சிறிய அழகிய கண்களால் அவளுடைய முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தது.

இந்த அபூர்வமான தோற்றத்தைக் கண்டு பூங்குழலியும் அமுதனும் சிறிது நேரம் அசையாமல் நின்றார்கள்.

முதலில் ஊமை ராணியின் தோள்மேலிருந்த மான் குட்டிதான் அவர்களைப் பார்த்தது. பார்த்ததும் தோள் மீதிருந்து துள்ளிக் கீழே குதித்தது.

மற்ற மான்களும் அவர்களைப் பார்த்து விட்டன. எல்லா மான்களும் அவர்கள் நெருங்கி வந்தால் பாய்ந்து ஓடுவதற்கு ஆயத்தமாக நின்றன.

பின்னர் ஊமை ராணியும் அவர்களைப் பார்த்தாள். அவள் தொண்டையிலிருந்து இன்னொரு விசித்திரமான ஒலி வந்தது.

அதைக் கேட்டதும் மான்கள் எல்லாம் துள்ளிப் பாய்ந்து ஓடிப் போய்விட்டன.

"அத்தைக்கு மனிதர்களின் பாஷை மட்டுந்தான் தெரியாது. மிருகங்களின் பாஷை நன்றாய்த் தெரியும்" என்று பூங்குழலி சொல்லிக் கொண்டே, ஊமை ராணியிடம் சமிக்ஞை செய்தாள்.

ஊமை ராணி இம்முறை ஓடவில்லை. பூங்குழலியைப் பார்த்துப் பதில் சமிக்ஞை செய்தாள்.

பூங்குழலி நெருங்கி வந்ததும் ஊமை ராணி அவளைக் கட்டி அணைத்துக் கொண்டு உச்சி மோந்தாள்.

சேந்தன் அமுதன் சற்றுத் தூரத்திலேயே நின்று கொண்டிருந்தான்.

அத்தையும் மருமகளும் சிறிது நேரம் மௌன பாஷையில் பேசினார்கள்.

பின்னர் பூங்குழலி அமுதனை அருகில் வரும்படி அழைத்தாள்.

ஊமை ராணி அவனை மேலும் கீழும் சில தடவை உற்றுப் பார்த்து விட்டு அவன் தலை மீது கை வைத்து ஆசி கூறும் பாவனையில் சிறிது நேரம் இருந்தாள்.

பின்னர் கையை அவன் தலையிலிருந்து எடுத்துவிட்டுப் பூங்குழலியைக் கையைப் பிடித்து இழுத்துக்கொண்டு போனாள்.

மூன்று பேரும் ஓடைக் கரைக்கு வந்தார்கள்.

ஊமை ராணி அங்கேயே உட்கார்ந்து கொண்டு பூங்குழலிக்குப் போய் வரும்படி சமிக்ஞை காட்டினாள்.

பூங்குழலி "வா! அமுதா! வீட்டுக்குப் போகலாம். அத்தை வர மாட்டாளாம். இங்கே சாப்பாடு கொண்டு வர வேண்டுமாம்" என்றாள்.

இருவரும் கலங்கரை விளக்கை நோக்கிப் போனார்கள்.

"பூங்குழலி! எனக்கு என்ன சொல்கிறாய்?" என்று அமுதன் கேட்டான்.

"உன்னோடு தஞ்சைக்கு வரலாம் என்ற எண்ணம் எனக்கு இருந்தது. அது இப்போது சாத்தியமில்லை. அத்தைக்கு அவருடைய செல்வச் சுவீகாரப் பிள்ளையைப் பார்க்க வேண்டுமாம். ஆகையால் மறுபடியும் நாகைப் பட்டினப் பிரயாணம் எனக்கு இருக்கிறது. நீயும் உடன் வந்தால் அத்தை உடனே ஓடி மறைந்தாலும் மறைந்து விடுவாள். அவளிடம் நான் தெரிந்து கொள்ள

வேண்டிய விவரங்களையும் தெரிந்து கொள்ள முடியாது."

சேந்தன் அமுதன் பெருமூச்சு விட்டு, "நான் கொடுத்து வைத்தது அவ்வளவு தான். அப்படியானால், இப்போதே உன்னிடம் விடை பெற்றுக் கொள்கிறேனே!" என்றான்.

"இல்லை, இல்லை! வீட்டுக்கு வந்து சாப்பிட்டு விட்டு உன் மாமன் முதலியவர்களிடம் விடை பெற்றுக் கொண்டு போ! இல்லாவிட்டால், என்னிடம் எல்லாரும் சண்டைக்கு வருவார்கள்!"

வழியில் இன்னொரு இடத்தில் ஒரு புதரின் மறைவில் நின்று ஒரு பெண்ணும் ஆணும் பேசிக் கொண்டிருப்பதை அவர்கள் பார்த்தார்கள்.

"ஆகா! அண்ணி ராக்கம்மாள் போலிருக்கிறது. இன்னமும் இரகசியப் பேச்சு முடிந்தபாடாக இல்லை. இப்போது வந்திருப்பவர்கள் யார்? அந்தப் பாண்டிய நாட்டு ஒற்றர்கள் தானா? வேறு யாராவதா?" என்று பூங்குழலி தனக்குத்தானே சொல்லிக் கொண்டாள்.

ராக்கம்மாள் புதர் மறைவிலிருந்து வெளிப்பட்டு வந்தாள். பூங்குழலியைப் பார்த்ததும் சிறிது திடுக்கிட்டாள். ஆனால் அதை உடனே மறைத்துக் கொண்டு வேகமாக அவர்களண்டை நெருங்கி வந்தாள்.

"பூங்குழலி! இத்தனை நாள் எங்கே தொலைந்து போயிருந்தாய்? உன் அப்பாவும் அண்ணனும் ரொம்பக் கவலைப்பட்டுப் போனார்களே!" என்றாள்.

"எதற்காகக் கவலைப்பட வேண்டும்? நான் வீட்டை விட்டுப் போவது இது தான் முதல் தடவையா!"

"இந்தத் தடவை உன் அத்தை மகனையும் அழைத்துக்கொண்டு போய்விட்டாயல்லவா? ஒருவருக்கும் சொல்லாமல் நீங்கள் கலியாணம் செய்துகொண்டு விடுவீர்களோ என்று கவலை!"

"அண்ணி! இந்த மாதிரி அசட்டுப் பேச்செல்லாம் என்னிடம் பேச வேண்டாம் என்று எத்தனை தடவை சொல்லியிருக்கிறேன்? இன்னொரு தடவை இவ்வாறு பேசினாயோ......?"

"இல்லையடி, பெண்ணே! இல்லை! நீ உன் அத்தை மகனைக் கலியாணம் செய்து கொண்டால் எனக்கு என்ன? அரச குமாரனைக் கலியாணம் செய்து கொண்டால் எனக்கென்ன? இலங்கையிலிருந்து உன் பெரிய அத்தை வந்து உன்னைத் தேடிக் கொண்டிருந்தாள். அவளை நீ பார்த்து விட்டாயா?" என்றாள்.

"இல்லை, இன்னும் பார்க்கவில்லை!" என்று சொன்னாள் பூங்குழலி.

வீடு சேர்வதற்குள் சேந்தன் அமுதனிடம் தனியாகப் பேசும் சந்தர்ப்பம் கிடைத்தபோது, "அமுதா! ஜாக்கிரதை! அண்ணி பாண்டிய நாட்டுச் சதிகாரர்களோடு சேர்ந்தவள். அவள் உன் வாயைப் பிடுங்கப் பார்ப்பாள். ஒன்றுக்கும் பதில் சொல்லாதே!" என்றாள்.

"இங்கு நான் இருக்கும் இன்னும் சிறிது நேரமும் ஊமையாகவே இருந்து விடுகிறேன்" என்றான் சேந்தனமுதன்.

* * *

அன்று பிற்பகலில் பூங்குழலி மறுபடியும் நாகைப் பட்டினத்தை நோக்கித் தன் ஓடத்தைச் செலுத்தினாள். படகில் ஊமை ராணி வீற்றிருந்தாள்.

ஊமை ராணியின் அருகில் இருக்கும் போது பூங்குழலி எப்போதும் மன நிம்மதி அடைவது வழக்கம். ஒத்த உணர்ச்சியுள்ள அவர்களுடைய உள்ளங்கள் ஒன்றுக்கொன்று அவ்விதம் அமைதியை அளிப்பதுண்டு.

ஆனால் இம்முறை பூங்குழலியின் மனதில் அத்தகைய நிம்மதி ஏற்படவில்லை.

சில நாளைக்கு முன்பு அதே ஓடத்தில் பொன்னியின் செல்வனை உணர்வு இழந்திருந்த நிலையில் அழைத்துப் போனது அவளுக்கு அடிக்கடி நினைவு வந்தது. அந்த இராஜ குமாரனை இன்னொரு இராஜ குமாரியிடம் சேர்ப்பிப்பதற்காகவே தான் அத்தனை கஷ்டத்திற்கு உள்ளானதை எண்ணியபோது அவளுடைய இதயத்தில் 'சுருக்'கென்ற வேதனை ஏற்பட்டது.

சேந்தன் அமுதனை "ஊருக்குப் போ!" என்று பிடித்துத் தள்ளியது போல் அனுப்பி விட்டதை எண்ணியபோது அவள் உள்ளம் இரங்கியது.

இந்த எண்ணங்களைத் தவிர, அன்று அவளுடைய தந்தை தியாக விடங்கக் கரையர் செய்த எச்சரிக்கை அடிக்கடி நினைவுக்கு வந்து கொண்டிருந்தது.

"குழந்தாய்! உன்னுடைய போக்குவரத்துகளைக் கொஞ்சம் கட்டுப்படுத்திக் கொண்டால் நன்றாயிருக்கும். யார் யாரோ புதுப் புது மனிதர்கள் இங்கே வந்து கொண்டிருக்கிறார்கள். எதற்காக வருகிறார்கள் என்று தெரியவில்லை. இராஜ்யத்தில் ஏதேதோ சதிகள் நடந்து கொண்டிருக்கின்றன. அவற்றில் நீ அகப்பட்டுக் கொள்ளாதே! நம்முடைய குடும்பம் என்றென்றைக்கும் சோழ குலத்து மன்னர் குடும்பத்துக்குக் கடமைப் பட்டது! இதை மறந்து விடாதே!" என்று அவளுடைய தந்தை கூறினார்.

தந்தையின் எச்சரிக்கையோடு அண்ணியின் இரகசிய நடவடிக்கைகளையும் சேர்த்து எண்ணியபோது பூங்குழலிக்கு என்றுமில்லாத திகில் உண்டாயிற்று. ஒரு வேளை அந்தப் புது மனிதர்கள் தன்னைத் தேடிக் கொண்டுதான் வந்திருப்பார்களோ? தன்னைத் தொடர்வதின் மூலம் பொன்னியின் செல்வன் இருக்குமிடத்தைக் கண்டு பிடிக்க முயல்வார்களோ? தன் மூலமாக அது வெளிப்பட்டால் எவ்வளவு பெரிய குற்றமாக முடியும்?......

பூங்குழலியின் மனக் கலக்கத்தை அதிகமாக்கக் கூடிய விதமாக ஓடையின் கரையோரக் காடுகளில் சலசலப்புச் சத்தங்கள் கேட்டுக் கொண்டிருந்தன.

அப்போது காற்றே அடிக்கவில்லை. எட்டுத் திசைகளும் சதி செய்து கொண்டு காற்றைப் பிடித்துத் தடுத்து வைத்திருப்பதுபோல் இருந்தது.

அப்படியிருக்கும்போது ஓடைக் கரைக் காடுகளில் சலசலப்பு ஏற்படக் காரணம் என்ன?

ஊமை ராணிக்கு இந்தத் தொந்தரவு ஒன்றுமில்லை. அவளுக்குக் காது கேட்காது. ஆகையால் சலசலப்புச் சத்தமும் காதில் விழாது. அவளிடம் அதைப் பற்றி யோசனை கேட்கவும் முடியாது.

ஆனால் ஊமை ராணிக்கு அதிசயமான வேறு சில சக்திகள் உண்டு. கண்ணால் பார்த்தும் காதால் கேட்டும் தெரிந்து கொள்ள முடியாத விஷயங்களை ஆறாவது புலனின் உதவியைக் கொண்டு அவள் கண்டு கொள்வாள். அவள் அறியாத அபாயம் ஒன்றும் தன்னை நெருங்க முடியாதல்லவா?......

இது என்ன? அத்தையும் கவலையோடு அடிக்கடி ஓடைக் கரையை அண்ணாந்து பார்த்துக் கொண்டு வருகிறாளே? உண்மையிலே அபாயம் ஏதேனும் தொடர்ந்து வருகிறதோ?......

அத்தை ஓடைக் கரையை அடிக்கடி பார்ப்பதின் காரணம் சீக்கிரம் வெளியாகி விட்டது. பூங்குழலியின் கவலையை அது போக்குவதாயிருந்தது.

ஓரிடத்தில் ஐந்தாறு மான்கள் ஓடைக் கரைப் புதர்களின் இடையில் தெரிந்தும் தெரியாமலும் நின்று படகை எட்டிப் பார்த்தன! இல்லை; படகைப் பார்க்கவில்லை! ஊமை ராணியைப் பார்த்தன!

ஆகா! மான்களைப் போன்ற அழகான பிராணிகள் உலகில் வேறு எதுவும் இல்லை! மான்களைப் படைத்த கடவுள் எதற்காக மனிதர்களையும் படைத்தாரோ, தெரியவில்லை. சண்டாள மனிதர்கள்! இவ்வளவு அழகான பிராணிகளை வேட்டையாடிக் கொல்லுகிறவர்களும் இருக்கிறார்கள் அல்லவா?...

மான்களைப் பார்த்து, அவற்றின் அழகை நினைத்து, அதிசயித்த பூங்குழலியின் கரங்கள் துடுப்புப் போடுவதை நிறுத்தின. படகு நின்றது.

ஊமை ராணியின் தொண்டையிலிருந்து ஒரு விசித்திரமான ஒலி கிளம்பிற்று. அது அன்று காலையில் கேட்ட குரல் போல் இல்லை. அதில் திகிலும் எச்சரிக்கையும் கலந்திருந்தன.

அதைக் கேட்ட மான்களும் திகில் அடைந்து திரும்பி ஓடத் தொடங்கின.

அதே கணத்தில் எங்கேயோ மறைவான இடத்திலிருந்து ஓர் அம்பு விர் என்று வந்து ஒரு மானின் மீது தைத்தது.

அம்பு தைத்த மான் சோகம் நிறைந்த ஓலமிட்டது!

ஊமை ராணி படகிலிருந்து கரையில் தாவிக் குதித்துக் காயமடைந்த மானை நோக்கி ஓடினாள்.

அவள் மானின் சமீபத்தை அடைந்த அதே சமயத்தில் நாலா புறத்துப் புதர்களிலும் சலசலப்புச் சத்தம் உண்டாயிற்று. அடுத்த வினாடியில் ஏழெட்டுப் பேர் வந்து அவளைச் சூழ்ந்து கொண்டார்கள். அவர்களில் பலர் கையில் வேலாயுதங்கள் இருந்தன. சற்றுத் தூரத்தில் அவர்களுக்கு வழிகாட்டி அழைத்து வந்த ராக்கம்மாளும் காணப்பட்டாள்.

ஊமை ராணி தப்பி ஓட முயன்றாள்; முடியவில்லை. தப்பி ஓடுவது இயலாத காரியம் என்று அறிந்ததும் ஊமை ராணி சும்மா நின்று விட்டாள்.

இரண்டு பேர் நெருங்கி வந்து அவளுடைய கைகளைக் கயிற்றினால் பிணித்துக் கட்டினார்கள்.

இவ்வளவும் பூங்குழலி பார்த்துக் கொண்டிருக்கும் போதே சில வினாடி நேரத்தில் நிகழ்ந்து விட்டன. ஊமை ராணியின் கரங்களைக் கயிற்றினால் கட்டுகிறார்கள் என்பதை அறிந்ததும் பூங்குழலி படகிலிருந்து பாய்ந்து கூச்சலிட்டுக் கொண்டு ஓடிவந்தாள். கையிலிருந்த துடுப்பை ஓங்கிக் கொண்டு வந்தாள்.

ஊமை ராணியைச் சுற்றி நின்றவர்களில் ஐந்தாறு பேர் பூங்குழலியை நோக்கி ஓடி வந்தார்கள். அவளைப் பிடித்து இழுத்துக் கொண்டு போய்ப் படகில் தூக்கிப் போட்டுக் கயிற்றினால் இறுக்கிக் கட்டி விட்டார்கள்.

பிறகு திரும்பிச் சென்றார்கள். அவர்களுடன் சாவதானமாக வந்த ஊமை ராணியையும் அழைத்துக் கொண்டு சில விநாடி நேரத்தில் மறைந்துவிட்டார்கள்.

# ரஸிகர்கள் வாழ்க!

"சபாஷ்!" "பஹுத் அச்சா!" "பலே ஜோர்!" "எக்ஸலெண்ட்!" "அடி!" "குத்து!" "கொல்லு!" "ஹும், தள்ளு!" என்று இப்படி ஒரே அமர்க்களமாக ஆயிரம் ஆயிரம் ஜனங்கள் ஏககாலத்தில் ஆரவாரம் செய்தனர். இவ்வளவு கூக்குரலும் போதாதென்று கரகோஷ ஆரவாரத்தில் ஆயிரம் பதினாயிரம் கரங்களும் சேர்ந்து கொண்டன. இத்துடன் "ஹோ! ஹோ!" என்ற உற்சாகக் கூக்குரல்களும் சேர்ந்து கொண்டன. அப்புறம் கேட்பானேன்!

இவ்வளவும் எங்கே நடந்தது என்கிறீர்களா! அப்படிக் கேளுங்கள். சென்ற அக்டோபர் மாதம் 25ந் தேதியிலிருந்து சென்னை, ராயப்பேட்டை ஒய். எம். ஸி. ஏ. மைதானத்தில்தான் நடந்தது. பாரத சாம்பியன்ஷிப்புக்காக நடக்கும் சர்வதேச மல் யுத்தப் போட்டியில் கூடியிருந்த ரஸிக மகா ஜனங்களின் உற்சாக ஆரவாரம்தான் மேற்கூறியவை யெல்லாம்.

பாரத தேசத்துப் பழம் பெரும் யுத்தங்களுள் ஒன்று மல் யுத்தம். பலமற்ற கோழைக்கும் பலம் ஊட்டும் யுத்தம் மல்யுத்தம். பார்ப்பவர்களைப் பரவசப்படுத்தி வீறு கொண்டு எழச் செய்யும் யுத்தம் மல் யுத்தம். பீமசேனன், ஜராசந்தன், இடும்பன், கீசகன், பகாசுரன், துரியோதனன் முதலிய இதிகாச வீரர்களெல்லாம் புரிந்த பழம் பெரும் யுத்தம் மல் யுத்தம்.

அன்னியர் ஆட்சியிலும் அடிமை வாழ்விலும் பல்லாண்டு அகப்பட்டுக் கொண்டு அவதியுற்ற மக்களுக்குக் கோரமான மல் யுத்தப் போட்டியைப் பார்க்கும் அளவுக்குக் கூட மன வலிமை இருக்கும் என்று முதலில் என்னால் நம்ப முடியவில்லை. ஆனால் யுத்தரங்கத்துக்குப் போய் அங்கே லட்சோப லட்சம் ரஸிகப் பெருமக்கள் அணிவகுத்து அழகாக அமர்ந்திருந்த காட்சியைக் கண்ணால் பார்த்ததும் என் அவநம்பிக்கை உடனே விடை பெற்றுக் கொண்டது. "ஆறரை மணிக்கு ஆரம்பமாக இருக்கும் மல் யுத்தத்துக்குப் பகல் ஒரு மணிக்கே வந்து கடும் வெய்யிலையும் பொருட்படுத்தாமல் ஏராளமான ஜனங்கள் கூடிவிடுகிறார்களே! யுத்தம் ஆரம்பமானதும் பனியையும் லட்சியம் செய்யாமல் இரவு ஒன்பது மணி வரையில் உட்கார்ந்திருக்கிறார்களே! இந்த ரஸிகர்களின் அடங்காத ஆர்வத்தை மேற்படி மல்யுத்த வீரர்கள் எப்படித்தணிய வைக்கப்போகிறார்களோ!" என்ற எண்ணம் என் மனதில் பதிந்திருந்தது.



வீரர்கள் யுத்தத்தை ஆரம்பித்ததும் சண்டையின் உக்ரம் அதிகரிக்க அதிகரிக்க, யுத்தரங்கத்தில் வீசிய பனியின் குளிர் குறைய ஆரம்பித்தது. வரவர உடலில் நல்ல உஷ்ணமே ஏற்பட்டு விட்டது.

பாரதச் சிங்கம் தாராஸிங், ரஷ்யக்கரடி ஸெரிகி ஆர்லாப், ஆஸ்திரேலியப் புலி ஹோல்டன், பசிபிக் தீவுகளின் வீரரான வாங்பக் லீ, துருக்கி சாம்பியன் அலி ரஜாபே, தென் கிழக்கு சாம்பியன் ஜெஹக்ஸி, கீழ்த்திசைச் சாம்பியன் கிங்காங், போலந்து வீரர் ஸிரேட் ஜெபிஸ்கோ, பாலஸ்தீன வீரர் கோல்ட்ஸ்மென்—இவர்களெல்லோரும் மல்யுத்தப் போட்டியில் கலந்து கொண்ட வீரர்கள். பெயரளவில் மட்டும் சிங்கமும் புலியும் கரடியுமாயிராமல், யுத்தரங்கத்தையே தங்களுடைய வாகவமான போர்த் திறமையினால் கலங்கவைத்தனர்.

சென்னை நகரத்தில் தண்ணீர்ப் பஞ்சம், உணவுப் பஞ்சம், குடியிருப்பு வீட்டுக்குப் பஞ்சம் முதலிய எத்தனையோ பஞ்சங்கள் ஏற்பட்டாலும் ரஸிகர்களுக்கு மட்டும் இங்கே பஞ்சமே கிடையாது. கிரிக்கெட்டு, கால் பந்து, சங்கீதம், விவசாயம், கைத்தொழில், கல்வி முதலிய எந்தத் துறையில் எந்த விசேஷமான வைபவம் நடைபெற்றாலும் அங்கெல்லாம் நம் ரஸிக மகா ஜனங்கள் ஏராளமாகக் கூடி ரஸித்து, மேற்படி விளையாட்டுப் பந்தயங்களிலும் கலை மகாநாடுகளிலும் பங்கெடுத்துக் கொண்டவர்களுக்கு அபரிமிதமான உற்சாகம் அளித்து வருகிறார்கள்.

தர்ம யுத்தத்தையே விரும்பி ஆதரித்து வந்த பழம் பெரும் நாடு பாரதநாடு. அக்கிரமத்தை, அநீதியை, அதர்மத்தை ஒரு சிறிதும், விளையாட்டுக்குக்கூட விரும்பமாட்டார்கள் நம் நாட்டுமக்கள் என்பது மற்போர் அரங்கில் உறுதியாயிற்று.

விளையாட்டு மைதானத்தில் சிறிது அதர்மம் தலை காட்டினாலும், ஆட்ட விரோதமான செயல்களை வீரர்கள் மேற்கொண்டாலும் ஜனங்கள் அத்தனை பேரும் நீதியை நிலை நாட்டக் கூக்குரலிட்டனர். அந்தமாதிரி சந்தர்ப்பங்களில், ஆட்ட மத்தியஸ்தரை (ரெபரீ) யைப் பார்த்து, "Foul" "வெளியே தள்ளு!" "அக்கிரமம்!" என்று ரஸிக மகாஜனங்களிடமிருந்து ஏக காலத்தில் புறப்பட்ட ஆக்ரோஷமான வார்த்தைகள் சண்டையிட்ட வீரர்களுக்கு நல்ல எச்சரிக்கையாக அமைந்தன.

இதில் முக்கியமான விஷயம் நம் பாரத வீரர் தாராஸிங் ஆட்ட விரோதமான செயல் எதையும் செய்யாமல் சண்டையிட்டதுதான். எதிராளி இடைவிடாமல் ஆட்ட முறை தவறியபோது அவர் கையைக் கட்டிக் கொண்டு சும்மா இருக்க முடியாதல்லவா! அந்த மாதிரி சமயங்களில் தாராஸிங்கும் கடுமையாக அவருக்கு அறிவுறுத்த வேண்டியதாயிற்று. ஆனாலும் ஆட்டமத்தியஸ்தர் (ரெபரீ) விஸில் கொடுத்ததும் தாராஸிங் அவர் உத்தரவுக்குப் பணிந்து மிகவும் கண்ணியமாக நடந்து கொண்டது ரஸிகர்களுக்கு அவரிடமுள்ள மதிப்பைப் பெரிதும் உயர்த்தியது. பாரதத்தின் பண்டைய தரும யுத்தப் பண்பையும் உயர்த்தியது. தாராஸிங் நல்ல ஆஜானுபாகுவான தோற்றமுள்ளவர்; இளைஞர்; கீழ்த்திசை வீரர் கிங்காங்கை முன்பு தோற்கடித்த வீரரான ஹர்பான்ஸிங்கை இரண்டு முறை புறமுதுகு கண்டவர். அவருடைய மற்போரில் நேர்மையும் நீதியும் இருப்பதைக் காணலாம்.

ஓயாமல் ஆட்ட விரோதமாக யுத்தம் செய்து அதன் மூலம் 'பிரஸித்தி' பெற்றிருந்த வீரர்களும் இந்தக் குழுவில்

இருந்தார்கள். அவர்களுள் முதல் ஸ்தானம் பெற வேண்டியவர்கள் கீழ்த்திசைச் சாம்பியன் கிங்காங், ஆஸ்திரேலியா வீரர் டைகர் ஜோகல்டன், துருக்கி சாம்பியன் அலிராஜாபே, ரஷ்யக் கரடி ஆர்லாப் ஆகியவர்கள்தான்.

அலியும் புலியும் (அலிராஜா பேயும், டைகர் ஜோகல்டனும்) சண்டையிட்டபோது தலைமயிரைப் பிடித்திழுத்தல், அரங்குக்கு வெளியே போய் அடிக்கடி விழுவது, குரல் வளையைப் பிடித்தல் முதலிய ஆட்ட முறை கேடான காரியங்களை இடைவிடாமல் செய்து ஆட்ட மத்தியஸ்தருக்கு ஓய்வு ஒழிவில்லாத சிரமத்தைக் கொடுத்தார்கள். ரஸிகர்களுக்கும் சிரமத்தைக் கொடுத்தார்கள்.



மாபெரும் வீரர் என்று கூறப்படும் 367 பவுண்டு எடையும் 6 அடி உயரமும் உள்ள மனித மலை போன்ற கிங்காங் நகர்ந்து வந்ததும் அரங்கத்தில் அமோகமான உற்சாக ஆரவாரம் கிளம்பியது. கிங்காங்கின் உண்மைப் பெயர் எமிலிஜாயா. கிங்காங் என்ற பட்டப் பெயர் ''ஏப்'' (குரங்கு) என்ற ஆங்கிலச் சினிமாப் படத்திலிருந்து எடுக்கப்பட்டது. கிங்காங்கும் தாராசிங்கும் சண்டையிட்டபோது ஆட்ட மத்தியஸ்தரும் அவர்களுடன் மல் யுத்தம் புரியவேண்டி வந்தது. அன்று 'ரெபரி'யாயிருந்த பசிபிக் தீவுகளின் வீரர் வான் பக்லி மிகவும் பாராட்டப்பட வேண்டியவர். ஒவ்வொரு தவறுக்கும் அவர் எழும்பி இரண்டுகாலையும் தூக்கி தவறு செய்தவர்களுக்குச் செம்மையான உதை கொடுத்துப் பாராட்டுதலைப் பெற்றார்.

மிகவும் ஆக்ரோஷமான போரில் தாராசிங்குக்கும் ருஷ்யக் கரடிக்கும் நடந்த போரை முக்கியமாகக் குறிப்பிட வேண்டும். கரடியின் முரட்டுத்தனமான ஆலிங்கனப் பிடிக்கும் ஆட்ட முறை தவறிய செயல்களுக்கும் அவர் சிறிதும் அசைந்து கொடுக்கவே யில்லை. ஆனால் நம் பாரத சிங்கம் அதற்கெல்லாம் நியாயமான முறையில் பதில் அடி கொடுத்ததைக் கண்டு ரஸிகர்கள் மெய்மறந்து ஆரவாரித்து ரஸித்தனர். அந்தப் போர் வெற்றி தோல்வியில்லாத 'டிரா'வில் முடிந்தது.

பாலஸ்தீன வீரர் கோல்ட்ஸ்டீனும் தென்கிழக்கு சாம்பியன் ஜெகன்ஸியும் போர் புரிந்தபோது ரெபரிக்கு வேலையே இருக்கவில்லை. போர் ரொம்பவும் ஒழுங்காகவும் கனஜோராகவும் நடந்தது.

''தருமத்தின் வாழ்வுதனைச் சூது கவ்வும், தருமம் மறுபடி வெல்லும்'' என்ற மகாகவியின் வாக்கு இந்தமல் யுத்தப் போட்டியில் உண்மையாயிற்று.

ஒரு முறை கிங்காங்கிடம் தோல்வியுற்ற தாரா மறுமுறை அவருக்குச் சவால் விடுத்தார். இந்தக் காட்சியைக் காணச் சென்ற ஞாயிறன்று ஒரு ஜன சமுத்திரமே யுத்தரங்கத்தில் கூடிவிட்டது.

அன்று கிங்காங் ஆக்ரோஷத்துடன் போர் புரிந்தார். தமக்கே இயல்பான முரட்டு அடிகளையும் ரெபரியின் கட்டளைக்குக் கீழ்ப்படியாத அசுர சுபாவத்தையும் காண்பித்தார். அந்த 'மனித மலை'யைப் புரட்டிக் கீழே தள்ளிய தாரா, சக்கையாகப் பிழிந்தெடுத்தார். அந்தச் சமயம் யுத்தரங்கத்தில் 'ரெபரி'யைக் காணவில்லை. ரெபரியின் கதறல் சத்தம் மட்டும் கேட்டது. விஷயம் தெரிந்த தாரா மனித மலையை மீண்டும் புரட்டியதும்தான், இத்தனை நேரமும் 'ரெபரி' அவர்கள் இருவருக்கும் அடியில் அகப்பட்டுக் கொண்டு திணறினார் என்பது தெரிந்தது!

கிங்காங்கின் தவறுகளைப் பொறுக்காத 'ரெபரி' தம் கடமையைச் சரிவரச் செய்யப் பல முறை அவரை உதைக்கும்படி நேர்ந்தது. இதில் ஆத்திரங் கொண்ட கிங்காங் ரொம்பவும் ஆக்ரோஷமாய்ச் சண்டை செய்து பலமுறை அரங்கை விட்டு வெளியேறி மேலும் மேலும் தவறுகளைச் செய்து, கடைசியில் 'ரெபரி'யையே தூக்கி அரங்குக்கு வெளியே எறிந்து மகாஜனங்களின் பூரண ஆத்திரத்துக்கும் உரியவரானார். மூன்றாவது ரவுண்டிலேயே கிங்காங் தோற்றார். தாராசிங்குக்கு 'கவர்னர்ஸ் கப்' பரிசு கிடைத்தது. ரஸிக மகா ஜனங்களின் இடைவிடாத கரகோஷ ஜய கோஷ ஆரவாரங்களுக்கு இடையே வெற்றியடைந்தவர் தாரா என்று அறிவிக்கப்பட்டது. தர்மம் வென்றது; அதர்மம் தோல்வி அடைந்தது.

## அட்டைப்பட விளக்கம்

ஆயத்திடையோள் பாசிழைப் பாவை
யானை மிசையோன் மாமுடிக் குரிசில்
இருவரும் அவ்வழி பருகுவனர் நிகழ
மன்னவன் முகத்தே மாதரும் நோக்கி
உள்ளமும் நிறையும் தன்னிடக் கலங்கி......

—பெருங்கதை

'யானை வரும் பின்னே மணியோசை வரும் முன்னே' என்பதற்கிணங்க மாடவீதியில் மணியோசை கேட்டது. உடனே, யானைதான் வருகிறது என்று ஊகித்து அறிந்து கொண்ட அவந்தி நாட்டிளவரசி வாசவதத்தை, யானையைப் பார்க்க உப்பரிகையில் வந்து நின்று கொண்டாள்.

தூரத்தே யானை வருவது தெரிந்தது. யானையின் மீது இருந்தவர் தெரியவில்லை. 'யாராயிருந்தால் என்ன! நாம் யானையைப் பார்க்கத்தானே வந்தோம்' என்று நின்று கொண்டேயிருந்தாள். யானை நெருங்கி வர வர யானையைப் பார்ப்பதை விட்டாள். யானையின் மீதிருந்த இளைஞனையே பார்த்துக் கொண்டிருந்தாள். அவனும் அவளையே பார்த்தான்.

இவர்களையோ, இவர்களுடைய பார்வையையோ பொருட்படுத்தாது யானை மேலே சென்றது. யானை மீதிருந்த அரசகுமாரனாகிய உதயணனும் சென்றான். அவனுடன் அவளுடைய உள்ளமும் சென்றது; இதுகாறும் நிலையாக இருந்த அமைதியும் அவளை விட்டுச் சென்றது.

பெருங்கதை என்ற தமிழ்க் காவியத்தில் வரும் கதாநாயகனாகிய உதயணனும், வாசவதத்தையும் சந்தித்துக் காதல் கொள்ளும் காட்சி இவ்விதம் அட்டைச் சித்திரமாகத் திகழ்கிறது.



# நான் கிளாக்ஸோவை சிபார்சு செய்கிறேன்

உஷ்ண தேசங்களில் உள்ள குழந்தைகளுக்கென்றே பிரத்யேகமாகத் தயாரிக்கப்பட்டுள்ள கிளாக்ஸோ மிகவும் சுத்தமான பால் உணவு. மேலும் ஒழுங்காக சமநிலையாக்கப் பட்டது. புதிய பசும்பாலிலிருந்து தயாரிக்கப்பட்ட கிளாக்ஸோவில் அயமும், விடமின் 'டி' யும் சேர்ந்திருப்பதால், இரத்தசோகை (அனிமியா), ரிக்கெட்ஸ் போன்ற வியாதிகளிலிருந்து பாதுகாக்கிறது. கிளாக்ஸோ தாய்ப் பாலைப்போல் இருப்பதால் அது கொடுக்கப்படும் குழந்தைகள் ஆரோக்கியமாகவும், திடகாத்திரத்தோடும், குதூகலமாகவும் வளருகின்றனர்.

**Glaxo**

கிளாக்ஸோ குழந்தைகளுக்கான சிறந்த உணவு



**பாரெக்ஸ்**

தாய்மார்களுக்கு ஓர் முக்கிய செய்தி! குழந்தைகளுக்கு முதலாவதாக கொடுக்க வேண்டிய கெட்டியான உணவு இந்தியாவில் மறுபடியும் கிடைக்கப் படுகிறது.

கிளாக்ஸோ லேபரட்டரீஸ் (இந்தியா) லிமிடெட் பம்பாய், கல்கத்தா, மதராஸ்

# அமெரிக்காவின் புதிய ஜனாதிபதி

பரம ஏழைக் குடும்பத்தில் பிறந்த பையன் ஒருவனுக்கு ஓர் ஆசை உண்டாயிற்று. மற்றப் பையன்கள் காலில் 'பூட்ஸ்' போட்டுக்கொண்டு பள்ளிக்கூடத்துக்குப் போகும்போது தான் மாத்திரம் வெறும் காலுடன் செல்ல அவனுக்கு மிகவும் வெட்கமாக இருந்தது.

பூட்ஸ் வாங்கித் தரும்படி அவன் தன் தாயாரைக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டான்.

பூட்ஸ் வாங்குவதற்குப் பணம் வேண்டாமா! தாயார் சாக்குப் போக்குச் சொல்லிக் கொண்டிருந்தாள். கடைசியாக, பூட்ஸ் வாங்கித் தருவதற்கு ஒரு நிபந்தனை விதித்தாள்.

"உனக்கு மூன்று தம்பிக் குழந்தைகள் இருக்கிறார்கள் அல்லவா! அவர்களைப் பார்த்துக் கொள்வதற்கே எனக்கு நேரம் சரியாக இருக்கிறது. ஆகையால் நீ சமையல் கற்றுக்கொண்டு எனக்கு உதவியாக இருந்தால் நான் உனக்குப் பூட்ஸ் வாங்கித் தருவேன்" என்று கூறினாள் தாயார்.

பையனும் சரி என்று ஒத்துக் கொண்டான். அன்று முதல் அக்கறையுடன் சமையல் கற்றுக் கொள்ளத் தொடங்கினான். சில நாட்களில் தாயாருடைய உதவி இல்லாமலே சமையல் செய்வதில் தேர்ச்சி பெற்று விட்டான்.

தாயாரும் தன் வார்த்தையை நிறைவேற்றினாள். புதிதாக பூட்ஸ் வாங்கிக் கொடுக்க முடியா விட்டாலும், தான் போட்டுக் கொண்டு பழையதாகிக் கிழிந்து கிடந்த பூட்ஸை அவன் காலுக்குச் சரியாகச் சீர்படுத்திக் கொடுத்தாள்.

கிடைப்பதற்கரிய பூட்ஸ் கிடைத்ததைக் குறித்துப் பையனுக்கு மகிழ்ச்சி தாங்க முடியவில்லை!

மேற்படி பையன் வேறு யாருமில்லை. அகில உலகப் புகழ் பெற்ற அமெரிக்க இராணுவத் தளபதியான ஜெனரல் ஐஸன் ஹோவர்தான்.

ஏழ்மையில் பிறந்து ஏழ்மையில் வளர்ந்த ஐஸன் ஹோவர் தேர்தலில் இணையிலா வெற்றி பெற்று, அமெரிக்க ஜனாதிபதி பதவியை அடைந்துள்ளார்.

ஐஸன் ஹோவரின் குடும்பத்தினர் பரம்பரையாக ஏழைகள்தான். இருந்தாலும் அறிவில் தங்கள் குடும்பம் ஏழை அல்ல என்று ஐஸன் ஹோவர் அடிக்கடி தம் மூதாதையரைப் பற்றிப் பெருமையாகக் கூறுவது உண்டு.

"என் தந்தை எனக்கும் என் சகோதரர்களுக்கும் சொத்தோ, பாங்கியில் பணமோ எதுவும் வைத்து விட்டுப் போகவில்லை. ஆனால் அவர் எங்களுக்கு வைத்து விட்டுப் போன விலை மதிக்க முடியாத பொக்கிஷம் அவரது அரிய உபதேச மொழிகள்தான்.

"'அறிவின் ஆணிவேர் கடவுள் நம்பிக்கைதான்' என்று என் தந்தை அடிக்கடி கூறுவார். என் பெற்றோர் மிகுந்த சிக்கனமாக வாழ்க்கை நடத்துவதாக நான் கவனித்துக் கொண்டிருந்தேன். நாங்கள் ஏழையாக இருப்பதுதான் அதற்குக் காரணம் என்பது பிறகுதான் எனக்குத் தெரிந்தது" என்று ஜெனரல் ஐஸன்ஹோவர் தமது தேர்தல் பிரசங்கம் ஒன்றில் குறிப்பிட்டார்.

'பாங்கியில் நிறைய பணம் இருந்தால்தான் வாழ்க்கையில் சந்தோஷம் ஏற்பட முடியும் என்ற சித்தாந்தத்தைப் போல் மூடத்தனமானது வேறு ஒன்றுமே இல்லை. மனதில் தைரியம் வேண்டும். வாழ்க்கையில் ஏற்படும் இடையூறுகளைக் கண்டு பயப்படக் கூடாது. மனிதனுக்கு உண்மையான சொத்தும் பொக்கிஷமும் சந்தர்ப்பம்தான். கிடைக்கும் நல்ல சந்தர்ப்பங்களைக் கை நழுவ விடாமல் உபயோகித்துக் கொள்பவனின் வாழ்க்கையில் தோல்வி என்பதே இராது!'

ஐஸன் ஹோவர் தமது தந்தையின் மேற்படி உபதேச மொழிகளைப் பக்தி சிரத்தையுடன் பின்பற்றினார். ஐஸன் ஹோவருக்குப் பல சந்தர்ப்பங்கள் கிடைத்தன. அச் சந்தர்ப்பங்களையெல்லாம் அவர் கை நழுவ விடவில்லை. இராணுவத்தில் சாதாரண அதிகாரியாக இருந்த ஐஸன் ஹோவர் படிப்படியாக முன்னேறி, இன்று அமெரிக்காவிலேயே மகோன்னத ஸ்தானத்தை அடைந்துள்ளார். உலகத்துக்கே தலைமை வகிக்கும் அமெரிக்கா தேசத்தின் ஜனாதிபதியாகவும் பிரதம தளபதியாகவும் வந்துள்ளார்.

*  *  *

அமெரிக்க நகர் ஒன்றில் நடந்த பொதுக் கூட்டத்தில் ஐஸன் ஹோவர் பேசியபோது அவருக்கு எதிர்க் கட்சியான ஜனநாயகக் கட்சியை ஆதரிக்கும் ஏராளமான பெண்கள் துடைப்பக் கட்டைகளுடன் கூட்டத்துக்கு வந்து ஆர்ப்பாட்டம் செய்தார்கள். மேற்படி சங்கடமான நிலைமையைச் சமாளிப்பது எளிதாக இல்லை.



புதிய ஜனாதிபதி ஐஸன்ஹோவர்.

கடைசியாக, ஐஸன் ஹோவர் ஒரு யுக்தியைக் கையாண்டார்.

"இந்தப் பெண்மணிகளையெல்லாம் நான் மனமார வாழ்த்துகிறேன். இவர்கள் எல்லாரும் கையில் ஏன் துடைப்பக் கட்டைகளை வைத்துக் கொண்டிருக்கிறார்கள், தெரியுமா! 'சென்ற இருபது வருஷ காலமாக ஜனநாயகக் கட்சி நிர்வாகத்தில் ஏற்பட்டுள்ள ஊழல்களைப் பெருக்கிச் சுத்தம் செய்தே தீருவோம்' என்று சபதம் செய்வதற்காகவே இவ்விதம் வந்திருக்கிறார்கள்" என்று கூறினார் ஐஸன் ஹோவர்.

இதைக் கேட்ட யாவரும் வயிறு வெடிக்கச் சிரித்துக் கரகோஷம் செய்தனர். மேற்படி பெண்களின் எதிர்ப்பும் அட்டகாசமும் உடனே அடங்கி விட்டன!

○●○ ஸ்ரீ ராமகிருஷ்ண மாணவர் இல்லத்தின் மூல ஸ்தாபகரான ஸ்ரீ ராமஸ்வாமி ஐயங்கார் அவர்களைக் குறித்து 'கல்கி' தீபாவளி மலருக்காக ஒரு கட்டுரை எழுதி உதவும்படி மேற்படி இல்லத்தின் காரியதரிசி ஸ்ரீ ராமானுஜாச்சாரியார் அவர்களைக் கேட்டுக் கொண்டிருந்தோம். கட்டுரை காலந் தாழ்த்தி வந்தபடியால் தீபாவளி மலரில் சேர்க்கக் கூடவில்லை. மிக்க மகிழ்ச்சியுடன் இந்த இதழில் வெளியிடுகிறோம். —ஆசிரியர்.

# ராமு ~ என் வழிகாட்டி

ஸ்ரீ ஸி. ராமானுஜாச்சாரியார்

"ராமு"வின் தம்பி நான் என்று சொல்லிக் கொள்வதில் எனக்கு எப்போதும் தனிப்பெருமிதம் உண்டு. நாங்கள் ஒன்று விட்ட சகோதரர்களாயினும், உடன் பிறந்த சகோதரர்களைவிட அதிக அன்பும் அந்நியோன்னியமும் எங்களிடம் நிலைபெற்றிருந்தன. நாங்கள் ஒரு வயிற்றில் பிறந்தவர்கள் என்றே எல்லோரும் எண்ணினார்கள்; இப்போதும் எண்ணுகிறார்கள். எங்களை அறிந்தவர்கள் எல்லாம், எங்களைப் பிரிக்காமல் "ராமு - ராமானுஜு" என்று இணைத்துக் கூட்டுச் சொல்லாலேயே குறிப்பிட்டது நாங்கள் இரண்டு உடல்களில் வளர்ந்த ஓருயிர் போன்ற உறவை எங்களிடம் வளரச் செய்தது.

இக்காரணத்தால் ராமுவைப் பிரிந்தபின் பாதி உயிர் போய் விட்டது போன்ற உணர்ச்சி என் மனத்தில் அடிக்கடி எழும். இப்போதும் ராமுவைப் பற்றி எதைப் பேசினாலும், எழுதினாலும் என்னைப்பற்றியே பேசிக் கொள்வது போலும், எழுதிக் கொள்வதுபோலும் தோன்றுகிறது. ராமு செய்ததெல்லாம் நான் செய்ததாகவும், நான் செய்தது ராமு செய்ததாகவும் பிரிக்க முடியாதபடி எங்கள் வாழ்க்கை அமைந்து விட்டது. இக்காரணத்தால் இக் கட்டுரையும் கூடச் சுய சரிதைபோலத் தோன்றுமோ என்ற சந்தேகம் என் மனத்தில் எழுகிறது. வாசகர்களுக்கும் இங்ஙனம் தோன்றினால் அதை மன்னிப்பார்களாக.

சென்னைக்கு முப்பது மைல் தூரத்தில் உள்ள கொளத்தூர் என்னும் கிராமத்தில் ஐந்து வயது வரை வளர்ந்து பின் ராமு மயிலாப்பூருக்கு வந்து சேர்ந்தான். அன்று முதல் நாங்களிருவரும் எல்லா வகையிலும் ஒன்றாகவே வளர்ந்தோம்.

ராமு இளமையிலிருந்தே அஞ்சா நெஞ்சம் படைத்தவன். ஒரு அமாவாசையன்று நண்பர்கள் சிலருடன் ஸமுத்திர ஸ்நானத்திற்குப் போயிருந்தோம். வரதாச்சாரி என்னும் நண்பன் அலையில் அகப்பட்டுக் கொண்டு மரிக்கும் தறுவாயில் இருந்தான். ராமு தன் உயிரைத் திருணமாகக் கருதி நண்பனை மீட்க அலையில் புகுந்து அவனைக் கண்டு பிடித்துத் தோளில் பதித்துத் திரும்பி நீந்தி வரும் சமயத்தில், அவன் மறுபடியும் ஓர் பேரலையால் அடித்துக் கொண்டு போகப் பட்டான். இந்நிகழ்ச்சியால் ராமு இரண்டு மாத காலம் ஏங்கி உறக்கமின்றித் தவித்ததே அவன் தீரத்தையும், உயர்ந்த நோக்கத்தையும் அறிவிப்பதாகும்.

எங்கள் அத்தை பிள்ளைகளான ஸர் வி.ஸி. தேசிகாச்சாரியாரும், வி. ஸி. சேஷாச்சாரியாரும் ஆரம்பத்திலிருந்தே எங்கள் படிப்பிலும், நன்னடத்தையிலும், முன்னேற்றத்திலும் மிகுந்த அக்கறை எடுத்துக் கொண்டனர். அவர்கள் ஆதரவும், புத்திமதிகளும், தக்க சமயங்களில் ஒத்தாசையும், அவர்கள் பொதுக் காரியங்களில் காட்டிய ஊக்கத்தின் முன்மாதிரியும் அவர்களை லட்சிய புருஷர்களாகக் கருதி, அவர்களைப் பின்பற்றி வாழவேண்டும் என்ற ஆசையையும் சிறுவயதில் எங்களிடம் உண்டாக்கிற்று.

அவர்கள் காங்கிரஸிலும், விவேகானந்தர் வரவேற்புக் கமிட்டியிலும், ராமகிருஷ்ண ஸங்கத்திலும், பள்ளிக்கூடங்களிலும், பிற பொது ஸபைச் சங்கங்களிலும் கமிட்டி மெம்பர்களாய் இருந்து பணி செய்ததால் அவர்களைப் பின்பற்றி, இவ்வியக்கங்களில் எங்களுக்குப் பிரவேசமும் ருசியும் ஏற்பட்டன. குடும்பத்தில் பெண் மக்களால் ஒருவருக் கொருவர் வித்தியாச மனப்பான்மை ஏற்படும்போல் இருந்த காலத்தில் ராமு எழுதிய ஒரு கடிதத்தில் என் பொருட்டுக் கூறியது ஒன்று ஞாபகம் வருகிறது.

"நாம் சாதாரண மக்களைப் போல் உண்டு, உடுத்து, மடியப் பிறக்கவில்லை என்று நிச்சயமாய் நம்புகிறேன். அந் நம்பிக்கை நம்முடைய சங்கை நாமே ஊதுவதாகாது. நாமிருவரும் கூடி ஏதோ ஒரு சிறந்த பணி செய்யப் போகிறோமென்ற எண்ணம் என் மனத்தில் வளர்ந்து வருகிறது. ஆகையால் நம்மிருவரையும் எதுவும் பிரிக்கவிடக் கூடாது." இந்தத் தீர்மானமும், தீர்க்கதரிசனமும் எங்கள் வாழ்க்கைக்கு வழிகாட்டி ஆயிற்று. படிக்கும் நாட்களில் ஒன்றாயிருந்ததுபோல். விவாகமான பின்னும், உத்தியோகத்தில் அமர்ந்து குடும்பம் வளர்ந்த பின்னும், ஒன்றாகவே கூடி வாழ்ந்தோம்.

நானும் ராமுவும் சென்னை செக்ரடேரியட்டில் வேலையில் அமர்ந்தோம். ராமு சேர்ந்தது ரயில்வே செக்ரடேரியட், நான் சேர்ந்தது லோகல்-முனிசிபல் செக்ரடேரியட். ராமு சேர்ந்த ஆபீஸ் சில வருஷங்களுக்குப் பின் இந்தியா கவர்ன்மெண்டில் சேர்க்கப்பட்டபோது, ரயில்வே சீனியர் இன்ஸ்பெக்டர் ஆபீஸில் ராமு ஹெட்ளொர்க்காக அமர்ந்தான். ஆபீஸ் வேலை அதிக நெருக்கடி இல்லாமல் இருந்ததால் பொதுக் காரியங்களைக் கவனிக்க ராமுவுக்கு அவகாசம் இருந்தது.

1897-ம் வருஷம் எங்களிருவர் வாழ்க்கையிலும் மிகவும் முக்கியமான வருஷம். ஸ்வாமி விவேகானந்தரைத் தரிசித்துச் சேவை செய்யும் பாக்கியம் பெற்றதும் பின், இராமகிருஷ்ணானந்த ஸ்வாமிகளை வரவேற்றதும் அவ்வருஷமே. ஹரிஜனப் பிள்ளைகளுக்காக ஒரு பள்ளிக்கூடம் ஆரம்பித்ததும் அப்போதுதான். ஸ்வாமி விவேகானந்தர் திக் விஜயம் செய்து கொண்டு சென்னை வந்த போது, எங்கள் உள்ளத்தில் ஒரு உவகை பொங்கி எழுந்தது. அவரை அணுகிச் சிறு பணிகள் செய்வதையும், அவர் பிரசங்கங்களைக் கேட்பதையும் பெரும் பாக்கியமாகக் கருதினோம். அவர் சென்ற பிறகும், அவர் எங்கள் மனமாகிய தனி

யில் ஒரு கந்தா விளக்கை ஏற்றி வைத்துவிட்டது போல உணர்ச்சி உண்டாயிற்று. திரும்பவும் சென்னைக்கு வந்த இராமகிருஷ்ணானந்த ஸ்வாமிகள் அந்த விளக்கின் ஒளி மங்காமலும், உலக ஆசைக் காற்றில் அணைந்து போகாமலும் இருக்கும்படி காப்பளித்தார். அவர் நடத்திய வகுப்புகளால் மத வாழ்க்கைக்கும், சமூக சேவைக்கும் ஒழுங்கான அஸ்திவாரம் போடப்பட்டது.

திருவல்லிக்கேணி 'ஐஸ் ஹவுஸ்'ல் இராமகிருஷ்ணானந்த ஸ்வாமிகள் வசித்து வந்த போது, அடிக்கடி ராமு ஸ்வாமிகளைக் காணப் போவதுண்டு. பூஜைக்காகவும், ஏழைகளுக்குச் சேவை செய்வதற்காகவும் பலரை நாடி உதவி சேகரிக்கும் பணியில் ஸ்வாமிகள் மூலம் ராமு முதன் முதலில் பயிற்சிபெற ஆரம்பித்தான். நானும் அவனைப் பின்பற்றினேன். "ஏற்பது இகழ்ச்சி" எனினும், பிறருக்காகப் பிச்சையெடுப்பது தவறன்று; அது தக்க முறையில் கைக்கொள்ளப்பட்டால், ஞான வாழ்க்கைக்குச் சாதனமாகும் என்பதையும் கண்டுகொண்டோம். முக்கியமாக ராமகிருஷ்ணர், விவேகானந்தர் பிறந்த நாள் கொண்டாட்டத்தின் போது, ஆயிரக்கணக்கான ஏழை மக்களுக்கு அன்னமிடும் கைங்கரியத்தில் ராமுவுக்கு இருந்த உற்சாகம் அளவு கடந்தது.

ஸ்வாமிகளின் உபதேசத்தால் இராமகிருஷ்ண சங்கத்தின் தொண்டுக்கே வாழ்க்கையை ஏகமனதாக அர்ப்பணம் செய்வதற்கு முன், செய்த முக்கியமான ஒரு சேவை, ஹரிஜனச் சிறுவர்களுக்காக எங்கள் வீட்டுக்கருகிலேயே மயிலாப்பூர் மாடவீதியில் ஆரம்பித்து நடத்திய பள்ளிக்கூடம் ஆகும். விவேகானந்த ஸ்வாமிகள் சென்னைப் பிரசங்கங்களில் கீழ் வகுப்பு மக்களைக் கைதூக்கிவிட வேண்டியது முக்கியமான பணி என்று வற்புறுத்தியதும், அவருக்குப் பின் வந்த புத்தபிக்ஷு அங்காரிக தர்மபாலரும் அதே விஷயத்தைக் கூறியதும் எங்கள் மனத்தில் ஒரு கிளர்ச்சியை உண்டாக்கியது. எங்கள் சக்திக்கு இயன்ற வகையில் ஒரு பள்ளிக்கூடமாவது நிறுவி அதன் மூலம் ஹரிஜனங்களுக்குச் சேவை செய்வதென்று ராமு தீர்மானித்தான். இன்னும் சில இளைஞர்களும், நானும் ராமுவுக்குப் பக்கபலமாக நின்றோம். ஐந்து ரூபாய் வாடகையில் மாடவீதியில் ஒரு மேல் மாடியில் வாடகை வீட்டில் 40 பிள்ளைகளுடன் ஆரம்பித்த இப் பள்ளிக்கூடம், பலவகை எதிர்ப்பையும் பொருட்படுத்தாமல் ஏழு வருஷம் விடா முயற்சியுடன் நடத்தப்பட்டது. சிறுவர்களுக்குக் கல்வி கற்பித்ததுடன், சமயம் வாய்த்தபோது, ஆடைகளும், சிற்றுண்டிகளும் வழங்கப்பட்டன. நண்பர்கள் வீட்டில் கலியாணம் நடந்தால் பள்ளிச் சிறுவர்களுக்கும் அப்போது விருந்து ஏற்பாடு செய்யப்படும்.

தையல்வேலை போன்ற கைத்தொழில்களைக் கற்பிக்கவும் ஏற்பாடாயிற்று. இதை முதன் முதலாகப் பார்வையிட்ட போது சேலம் விஜயராகவாச்சாரியார் அறிவித்த மகிழ்ச்சி, எங்களுக்கு இப் பணியில் உற்சாகத்தை வளர்த்தது.

இதற்குப் பின் 1905-ல் ஆரம்பிக்கப்பட்டது இராமகிருஷ்ண மாணவரில்லம். ஸ்வாமி ராமகிருஷ்ணானந்தர் அனுமதியும், ஆசியும் அளித்தார். டாக்டர் நஞ்சுண்டராவ் வீட்டு வசதி அளித்தார். எங்கள் தாயும், சகோதரியும் இன்னும் சில பெண்மணிகளும் சமையல் பாத்திரங்கள் கொடுத்துதவினர். தன் பையனைப் படிக்க வைக்க விரும்பிய ஒரு சமையல்காரன் மாதம் மூன்று ரூபாய்ச் சம்பளத்தில் வேலையை ஏற்றுக் கொண்டான். பொருளுதவிக்குப் பல நண்பர்களை நாடினோம். முதன் முதலில் நாங்கள் நாடிய பெரிய மனிதர் ஸ்ரீ வி. கிருஷ்ணசாமி அய்யர். நாங்கள் போன சமயம் சந்திரகிரஹணம். எப்போதும் அவரைச் சுற்றிக் கூட்டம் இருக்குமாதலால் இரவு பத்து மணிக்கு அவரைத் தனிமையில் காணச் சென்றோம். அவர் எரிந்து விழுந்தார். ஆரம்பிக்க எண்ணிய மாணவரில்லம், உருவாகும் என்ற நம்பிக்கை தமக்கு இல்லை யென்றும், தாம் உதவி செய்ய இயலாதென்றும் சொல்லிவிட்டார். பின் பி. ஆர். சுந்தரய்யரும் அங்ஙனமே சொன்னார். ஆனால் வேறு சிலர் உதவி செய்வதாய் வாக்களித்தார்கள். நாங்கள் தைரியத்தை இழக்காமல் "கடவுளை நம்பினோர் கைவிடப்படார்" என்ற நம்பிக்கையில், ஏழு பிள்ளைகளுடன் மாணவரில்லத்தை ஆரம்பித்தோம். முதல் வருஷம் முடிந்து ரிபோர்ட் வி. கிருஷ்ணசாமி அய்யருக்கு அனுப்பியபோது, முன்பு அவர் பேசிய கடுஞ் சொற்களை நாங்கள் மனத்தில் கொள்ளாமல் உற்சாகத்துடன் வேலையில் ஈடுபட்டதை மெச்சித் தம் உதவியாகப் பொங்கல் தினத்தன்று ரூபாய் நூறு அனுப்பிவைத்தார். அவ்வாறே பி. ஆர். சுந்தரய்யரும், ஆதியில் நம்பிக்கை வைக்காத பலரும் பின், சிறுகச் சிறுக உதவி செய்ய ஆரம்பித்தனர். முதல் வருஷம் மொத்த வரவு ரூ. 430. இரண்டாம் வருஷம் ரூ. 1050. ஐந்தாம் வருஷம் மாணவர் 16 பேர்; வரவு ரூ. 1300. இதற்குள் மூன்று வீடு மாறி, இல்லம் பலாத்தோப்பில் 20 ரூபாய் வாடகை வீட்டில் அமர்ந்தது. பின் நாட்களில் மாம்பலத்தில் மஹாரிஷியாக வாழ்ந்த வாசுதேவாச்சாரியாரும், இதற்குள் இல்லத்துப் பணி

யில் ஒத்துழைப்பவராக சேர்ந்து கொண்டார். அவருடன் எம். ரங்காச்சாரியார், கே. பி. ராமநாதய்யர், மகாகனம் ஸ்ரீனிவாஸ சாஸ்திரி முதலியவர்களடங்கிய ஒரு கமிட்டி ஏற்படுத்தி, "ஏழை மாணவர் நிதி" என்ற ஒன்றையும் ஆரம்பித்துக் கலாசாலை மாணவர்களுக்கு உபகாரச் சம்பளம் கொடுக்கவும் ஏற்பாடு செய்தோம். இதற்கு வருஷம் ரூ. 600 வீதம் உதவியளிப்பதாய் வி. கிருஷ்ணஸ்வாமி ஐயர் ஏற்றுக் கொண்டார். பின் அன்னி பெஸண்டு, ஸர் ஸி. பி. ராமஸ்வாமி ஐயர் இன்னும் பலரும் உதவியளித்தனர்.

1910 முதல் சுமார் பத்து வருஷம் சராசரி 30 மாணவர்களுக்கு இந்த நிதி உதவியளித்து வந்தது. மாணவரில்லத்தையும் இந்த நிதியையும் சேர்த்துப் பராமரிப்பது, கடினமாயிருந்ததால் 1920 லிருந்து இந்த நிதி நிறுத்தப்பட்டது.

1913-ல் இல்லத்தின் இடம் கச்சேரி ரோடில் வாடகை ரூ. 60-ல் ஒரு வீட்டில் இருந்தது. மாணவர்கள் 45 பேர்; செலவு ரூ. 9500 ஆகவும் இருந்தது. 1921-ல் மாணவரில்லத்திற்கான புதிய கட்டிடம் கட்டி முடிந்தது. இதற்கு நன்கொடையாக மனை யளித்தவர் எஸ். ஜி. ஸ்ரீனிவாஸாச்சாரியார். சர்க்கார் உதவியாலும், மற்றும் பல பேருடைய நன்கொடையாலும் கட்டிடம் கட்டச் சேகரித்துச் செலவிட்ட தொகை சுமார் இரண்டு லக்ஷம் ரூபாய் ஆகும். ரூபாய் இரண்டாயிரத்துக்கு அதிகமாகக் கொடுத்தவர்களின் பெயர்கள், அறைகளின் வாயிலில் பித்தளைத் தகடுகளில் பதிக்கப்பட்டன. பூஜா மண்டபம் அமைக்க, ஜமீன்தார் பெத்தாச்சி செட்டியார் ரூ. 15000 கொடுத்துதவினார். அதில் ஸரஸ்வதி தேவியின் அழகிய உருவச் சிலை பிரதிஷ்டை செய்யப்பட்டு, நித்ய பூஜை ஏற்பாடாயிற்று.



ஸ்ரீ ஸி. ராமஸ்வாமி ஐயங்கார்

இதை 1921ல் அக்ஷயத் திருதியையன்று திறந்து வைத்தவர் ஸ்ரீமத் பிரம்மானந்த ஸ்வாமிகள்.

புது இடத்தில் ஸ்தாபிக்கப்பட்ட இல்லம் சத்திரம் சாவடி போலன்றிக் கல்வித் தெய்வத்தின் அழகிய கோவிலாக அமைந்தது. புது இடம் வந்ததும் வருவாய் 25000 ரூபாய்க்கு உயர்ந்து, மாணவர் எண்ணிக்கை நூறு ஆயிற்று. ராமு கண்ட கனவு ஒரு வகையில் பூர்த்தியாயிற்று. இல்லக் கட்டிடத்தின் ஒவ்வொரு செங்கல்லையும் எடுத்துப் பார்த்தால் அதில் 'ராமு' என்று எழுதியிருக்கும் என்றும், மாணவர் உள்ளத்தில் வாழும் தெய்வம் 'ராமு' என்றும், 'ராமகிருஷ்ண ஹோம்' என்பது 'ராமுவின் ஹோம்' என்றும், பலவிதமாய் ராமுவை மாணவ நிலயத்துடன் ஒன்றுபடுத்திக் கூறலாயினர். அப்படியிருந்ததால் ராமுவின் சரித்திரத்தை, இல்லத்தின் சரித்திரமாகக் கூறாமல் பிரித்துக் கூற இயலாது. இல்லத்தின் சரித்திரமே ராமுவின் சரித்திரமென்பதும் மிகையாகாது.

ராமு மாணவ நிலயத்துக்கே தன் வாழ்க்கையை அர்ப்பணம் செய்து விட்டதால் குடும்ப அலுவல்களைக் கவனிக்க அவகாசம் இருக்கவில்லை. எங்கள் இருவர் குடும்பங்களும் ஒன்றாய் வாழ்ந்ததால், குடும்பத்தைச் சேர்த்துக் கவனிப்பது ஆதியி [illegible] ர் பணியாகவும் ஆயிற்று. மாணவ நிலயத்தைக் கவனிப்பது முக்கியமாக ராமுவின் பணியாகவும் ஆயிற்று. ராமுவின் வாழ்வு வானப்பிரஸ்தனுடையதைப் போல் இருந்தது. நான் அவனுடைய லக்ஷ்யத்துக் கிணக்கமாக என்னால் இயன்ற வகைகளி லெல்லாம் உதவியாக யிருப்பதை முக்கிய நோக்கமாய்க் கொண்டிருந்தேன்.

ராமுவுக்கு எந்தச் சமயத்தில் எது செய்ய வேண்டுமென்று தெரியும். எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்ற இங்கிதம் நன்றாய்த் தெரியும். தருமத்துக்குப் பொருள் சேர்ப்பதிலும் தன்னைத் தாழ்த்திக் கொள்ளாமல் கம்பீரமாகப் பிச்சை யெடுக்கும் கலையிலும் வல்லவன். ஆகையால் அவனை "பிச்சை எடுக்கும் கலையில் அரசன்" என்று ஒரு நண்பர் கூறினார். மாணவர்களைப் பராமரிப்பதில் கண்டிப்பா யிருப்பான். ஆனால் அவர்களிடம் தாய்போல அன்புடன் இருக்கவுந் தெரியும்.

ராமு உயர்ந்து வளர்ந்து கம்பீரமான தோற்றமுடையவன். அழகிய சிவந்த மேனி; விசாலமான மார்பு; வசீகரமான கண்கள்; பரந்த நெற்றி; கூரிய மூக்கு. அவனுடைய மாசற்ற குணத்துக்கும் கபடமற்ற அன்புக்கும் வசப்படாதவர் இல்லை. இல்லத்துப் பணியில் தனக்கு உதவியாயிருந்த மாணவர்களைத் தோழர்களெனக் கருதி வாழ்க்கைத் துணை போலப் போற்றி வந்தான்.



வடாற்காடு ஜில்லா வாலாஜா தாலூகாவைச் சேர்ந்த கிராமத்தில் கஞ்சி தானம் பெறுவதற்காக ஏழைகள் கூடியிருக்கிறார்கள். அவர்களில் ஒரு பெரியவர் கஞ்சிப்பானை கொண்டுவந்து வைக்கப்பட்டதும் கையை எடுத்துக் கும்பிட்ட காட்சியைப் படத்தில் பார்க்கலாம்.

கொடிய பஞ்சத்தினால் பீடிக்கப்பட்ட சில கிராமங்களில் அன்னதான சிவன் சங்கத்தார் கஞ்சி நிலையங்கள் ஏற்படுத்தி நடத்தி வருகிறார்கள். உழைப்பாளிகளான ஏழைக் கிராமவாசிகளின் உயிரைக் காப்பாற்றும் இந்தப் புனித கைங்கரியத்துக்குப் பணமும், தானியமும், துணிமணிகளும் கொடுத்து உதவுவதைப் போன்ற புண்ணியம் வேறு ஒன்றும் இருக்க முடியாது. உதவி அனுப்ப வேண்டிய விலாசம் :— ஆடிட்டர் சூரிய நாராயணன், டிரஸ்டி, அன்னதானசிவன் சங்கம், 19, ஸ்ட்ரிங்கர்ஸ் தெரு, (Stringers St.,) பிராட்வே, மதராஸ் 1.

---

அவனுக்குப் பணி செய்த வண்ணான், நாவிதன், சக்கிலி கூடத் தோழர் போலவே கருதப்பட்டுக் கடைசி நாள் வரை அவனிடமிருந்து பிரியாது பழகினர். ராமுவுக்கு அதிகமாகப் பேசவுந் தெரியாது எழுதவுந் தெரியாது என்று சொல்லுவது தவறாகாது. ஆனால், அது குறையா யில்லாமல், அவனுடைய அடக்கத்தைச் சோபிக்கச் செய்யும் குணமாகவே காணப்பட்டது. அதிகப் பேச்சு இல்லாததால், அவசியமான அளவில் ஆணித்தரமாய்ப் பேசும் பேச்சும், எழுதும் எழுத்தும் எடுத்த காரியத்தை எளிதில் சாதிக்கக் கூடிய வன்மை பொருந்தியதா யிருக்கும். தான் ஏற்பாடு செய்திருக்கும் உத்சவங்களிலும், பொதுக் கூட்டங்களிலும் கூட ராமு பதுங்கியிருக்கு மிடத்தைத் தேடிப் பிடிக்க வேண்டியிருக்கும். மறைவாயிருந்து பணியாற்றுவதே ராமுவின் அருங்குணம். அவனுடைய தன்னடக்கம்தான் அவனுடைய பொக்கிஷமா யிருந்தது.

உத்தியோகத்தால் உயர்ந்ததொரு பதவி இல்லாவிட்டாலும், உயர்ந்த பதவியிலிருந்த பலர் அவனிடம் வைத்திருந்த மதிப்பு அளவு கடந்தது. ராமு நோய் வாய்ப்பட்டபோது கண்ணும் கண்ணீருமாக அவன் அப்போது ஆரம்பித்திருந்த கைத் தொழிற் கலாசாலை தடைப்படாது நடக்கும் பொருட்டு "இராமஸ்வாமி ஐயங்கார் கைத் தொழில் மூலதனம்" என்ற பேரால், அல்லாடி கிருஷ்ணஸ்வாமி ஐயர் ரூ. 10,000 கொணர்ந்து கொடுத்துத் தம் அன்பைத் தெரிவித்த நிகழ்ச்சி என் கண் முன் இப்போதும் நிற்கிறது. ராமு பிறர் உள்ளத்தில் எங்ஙனம் இடம் பெற்றிருந்தான் என்பதற்கு இது ஒரு உதாரணம். இப்படித்தாமே வந்து ராமு மேற் கொண்ட பணியில் உதவியவர் எத்தனையோ பேர். படிப்பில் சிறிதும் ஊக்க மில்லாது, சில வகுப்புகளில் ஒரு வருஷத்துக்கு மேலும் இருக்கவேண்டி யிருந்தவனும், விளையாட்டிலும், உண்டியிலும், உடையிலுமே பிரிய முள்ளவனாகக் காணப்பட்டவனும் ஆகிய ராமு எப்படி இவ்வளவு அருங் குணமுள்ளவன் ஆனான் என்பது, அவனை இளமையில் அறிந்த பலருக்கு அதிசயமாயிருந்தது. எந்தகுருவின் சேவைக்குத் தன் வாழ்க்கையை அர்ப்பணம் செய்தானோ, அந்தக் குருவின் கிருபையே அவன் இங்ஙனம் அதிசயமாய் மாறியதற்கும், என்னையும் என் போன்றவரையும் அவனைப் பின்பற்றி நடக்கச் செய்ததற்கும் காரணம் என்று நான் கருதுகிறேன்.

ஸ்வாமி ராமகிருஷ்ணானந்தரின் மரணத்தறுவாயில், ராமு, அவரைப் பார்க்கப் போனபோது கல்கத்தாவில் அவர் கூறியதாவது : "ராமு, என் பணி முடிந்துவிட்டது. குருதேவர், வா என்று கூவியழைப்பதைக் கேட்கிறேன். நான் அவர் திருவடி நிழலுக்குச் செல்லுகிறேன். நான் சென்னை வந்த புதிதில் மிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தபோது, குருதேவர் எனக்கு ஒரு காட்சியைக் காட்டினார். அதை நான் உனக்கு இதுவரை சொல்லவில்லை. அவர் ஒரு இளைஞனை என் முன் காட்டி 'இதோ, உனக்கு உதவி செய்ய இவனைக் கூட்டி வந்துள்ளேன்' என்று கூறினார். அந்த இளைஞன்தான் நீ; குருதேவர் உன்னைக் காப்பாராக!"

புதுக் கட்டிடம் முடிந்து, அதில் இல்லம் ஸ்தாபிக்கப் பட்டபின், குருகுல லக்ஷ்யம் பூர்த்தியாகும் பொருட்டு 1922-ல் குருகுல முறையில் ஹைஸ்கூல் ஆரம்பிக்கப்பட்டு, சீக்கிரமாகவே ஒன்றே கால் லக்ஷத்தில் தனிக் கட்டிடமும் கட்டப்பட்டது. இதன் பின் 1926-ல் கைத் தொழிற் கலாசாலை ஒன்றும் ஆரம்பிக்கப்பட்டது. இந் நாட்களில், ராமு மாணவர்களுடன் ஒன்றாக இல்லத்திலேயே வாழ்ந்து, அதிகாலையில் எழுந்தவுடன் அவர்களுக்கு மத போதனையும் செய்து வந்தான். அவனுக்கு ஸம்ஸ்கிருதப் பயிற்சி குறைவாயினும் ஆளவந்தார் ஸ்தோத்திரம், சிவானந்த லஹரி போன்ற நூல்களைப் பண்டிதர்களிடம் ஆர்வத்துடன் தான் கற்றுக் கொண்டு பின் மாணவர்களுக்குச் சொல்லிக்

# அதிகப் பளுவான சாமான்களை மிகக் குறைந்த செலவில்

## பயர்ஸ்டோன்

# Firestone

டயர்களை உபயோகித்துக் கடத்தலாம்







கொடுத்தது வியக்கத்தக்கது. இல்லத்தின் சுவர்களிலோ, தரையிலோ சிறிதும் அழுக்குப்படாமல், தன் உடல் போல ராமு கவனித்து வந்தான். தூசியோ, ஒட்டடையோ இருக்கச் சகிக்கமாட்டான். அறையிலாயினும் சரி, உடையிலாயினும் சரி, மனத்தின் மூலை முடுக்குகளிலாயினும் சரி பரிசுத்தமே அவன் போற்றிய பிரத்தியக்ஷ தெய்வம் எனலாம். 1926ம் வருஷம், 54வது வயதில் ராமுவுக்குக் குடும்ப வியாதியான வாத நோய் ஏற்பட்டு வலது பக்கம் முடங்கிப் போயிற்று. உறுப்புகள் வசமில்லாமல் பேச்சும் குழறிப் போன பின்பும், மாணவரில்லப் பணியிலிருந்து விலகிவிட எண்ணாமல் கடைசி மூச்சுள்ள வரை அங்கேயே இருக்க விரும்பினான். என்னைக் கூட்டுக் காரியதரிசியாக்கி வெளியலுவல்களைக் கவனிக்கும் பொறுப்பை ஒப்பித்துவிட்டு, உள் பராமரிப்பை ராமு தானே கவனித்து வந்தான்.

கடைசி நாட்களில், ராமுவின் அறையிலிருந்த பிரியமான படங்கள் அவனுடைய சமரச லட்சியத்திற்கும், ஆழ்ந்த பக்திக்கும் அறிகுறிகளாயிருந்தன. குரு ராமகிருஷ்ணானந்தர் படம் எதிரிலிருக்கும். "ஸ்ரீகுரு, ஸத்குரு, ஸனாதன குரு, பரம குரு" என்று ராமகிருஷ்ணானந்தர் தன் பரம குருவை வணங்கும் முறையைத் தானும் அனுஷ்டித்து வந்தான். இதைத் தவிர புத்தருடைய துறவுப் படமும், இயேசுநாதர் தன் சீடர்களின் பாதத்தைக் கழுவும் படமும் ராமுவின் மனத்தைக் கவர்ந்தவை.

1932-ல் மரணத்திற்குச் சில நாட்களுக்கு முன் பிறந்த ஊராகிய கொளத்தூர் சென்று உறவினரைப் பார்த்துவிட்டு காஞ்சி சென்று வரதராஜப் பெருமாளையும், திருவல்லிக்கேணியில் பார்த்தசாரதியையும் சேவித்து விட்டு வந்தது, கடைசி பிரயாணத்திற்கு முன் விடை பெற்றுக் கொள்வது போலிருந்தது. மரணத்திற்கு நான்கு நாட்களுக்கு முன் ராமு பங்கெடுத்துக் கொண்ட பொதுக் காரியம் தியாகராய நகரில் ஆரம்பித்த பள்ளிக் கூடம். அவன் ஞாபகார்த்தமாகவே ராமகிருஷ்ண மிஷன் ஹைஸ்கூலில் "ராமு ஞாபகார்த்தப் பிரார்த்தனை மண்டபம்" பின்னர் அவன் பெயரால் வழங்கப்படலாயிற்று. 1932 ஜூன் 17ல் ராமு விண்ணுலகேகினான்.

ராமு காலமான சமயமும், நான் சர்க்கார் உத்தியோகத்திலிருந்து விலக வேண்டிய ஓய்வு காலமும் ஒத்துக் கொண்டன. அவன் காட்டிய வழியில் சென்று அவன் போற்றி வளர்த்த இல்லத்தின் பணிக்கே, என் மிகுதி நாட்கள் முழுவதும் அர்ப்பணிக்கப்பட வேண்டும் என்பதும், குருதேவருடைய ஸங்கல்பமாக இருந்தது.

ராமு காலமாகிப் பன்னிரண்டு வருஷங்களுக்குப் பின், 1944ல் அவனுடைய வெண்கல உருவச் சிலை ஒன்று மாணவரில்லத்தின் முன் அன்பர்களால் திறவப் பெற்றது. ஞாபகார்த்தக் கமிட்டியின் தலைவரான ஸ்ரீ அல்லாடி கிருஷ்ணஸ்வாமி அய்யர் "இந்த இச் சிலையின் மூலம் ராமுவை எதிர்கால மக்களுக்கு அறிமுகப்படுத்துகிறோம். ஜாதி, மதம் முதலிய எல்லைகளைக் கடந்து சமரசமான ஆன்ம வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டு விளங்கிய ராமுவின் வாழ்க்கை பல இளைஞர்களுக்கு ஊக்கமளிக்க வல்லதாயிருக்குமென்று நம்புகிறோம்" என்று கூறினார். உருவச் சிலையின் பீடத்தில் பின் வரும் சுலோகம் எழுதப்பட்டுள்ளது:

ந த்வஹம் காமயே ராஜ்யம்
ந ஸ்வர்க்கம் நாபுனர்ப்பவம்
காமயே துக்க தப்தானாம்
ப்ராணினாம் ஆர்த்தி நாசனம்

"ஆண்டவனிடம் நான் அரசையோ, ஸ்வர்க்கத்தையோ, பிறவாமையையோ வேண்டவில்லை. துன்பத்தில் தவிக்கும் பிராணிகளின் துன்பத்தைத் தவிர்ப்பதையே வேண்டுகிறேன்" என்பது தான் மேற்படி சுலோகத்தின் கருத்து.

ராமுவை நினைக்குந்தோறும் அவனை அறிந்தவர்கள் மனத்தில் எழும் எண்ணமும் இதுவே. அங்ஙனம் வாழ விரும்புவதே ராமுவின் ஞாபகத்தைப் போற்றுவதாகும்.

### இல்லத்து மாணவன் ஒருவன்
### ராமுவின்மேல் பாடிய இரங்கற்பா

அழியாத கல்வி அறிவே புகட்டும்
அறமே வளர்த்த பெரியோய்!
பழிபாவமற்ற வழிகாட்டு மன்பர்
பணியே புரிந்த உரவோய்!
வழுவாத அன்பு மறையாத சிந்தை
வருமாண்பி னின்ப மொழியாய்!
எழுவாதை எங்கள் உளமே பொருந்த
எதுநீ புகுந்த பதியே!
உலகோர் கொடுக்கும் உயர்வே விரும்பி
உறு வேடமிட்டு விழுவார்
பலபேர்; அமைந்து மனமொன்ற நின்று
பற்றற்ற தொண்டு புரிவார்
சிலரே; அவர்க்கோ ரணியென்ன மல்கு
திகழ்வே படைத்த திருவே!
நிலைநோய் வருத்து முடலை விடுத்து
நெடுவா னடைந்த ஒளியே!

# இரு நண்பர்கள்

நீதிபதி. ஏ. எஸ். பி. ஐயர்



ஒரு நாள் காலை இரு நண்பர்கள் ஒரு தன்னந் தனியான பாதையில் நடந்து சென்று கொண்டிருந்தனர். அப்போது, ஒரு புதரிலிருந்து ஒரு தத்துவப் பேராசிரியர் பயமடைந்து ஓடுவதைப் பார்த்தனர். அவர்கள், அவரைப் பார்த்து "ஏன் அப்படிப் பயந்து ஓடுகிறீர்கள்?" என்று கேட்டார்கள்.

"அதோ அந்தப் புதரில் நான் ஒரு மனிதர்களைக் கொல்லக்கூடிய..." என்று நாக்குழற, பயந்து கூறினார்.

"என்ன? புலியைக் கண்டீரா?" என்று அந்த இரண்டு நண்பர்களும் கேட்டனர்.

"இல்லை; புலியை விடப் பயங்கரமானதைப் பார்த்தேன். அந்தப் புதரில் நான் மருந்துக்காக வேர்களைத் தோண்டிக் கொண்டிருந்தபோது பார்த்தேன்" என்றார் அந்தத் தத்துவப் பேராசிரியர்.

"அது என்ன?" என்று மறுபடியும் அவ்விருவரும் கேட்டனர்.

"பொன் நாணயக் குவியலைத்தான் பார்த்தேன்" என்றார் தத்துவாசிரியர்.

"எங்கேயிருக்கிறது? எங்கேயிருக்கிறது?" என்று அவ்விருவரும் ஆவலுடன் கேட்டனர்.

"அங்கே! அதோ - அந்தப் புதரில்" என்று சுட்டிக் காட்டிவிட்டு, அவ்விடத்தை விட்டு ஓட்டம் பிடித்தார் தத்துவ ஆசிரியர்.

★

அந்த இரண்டு நண்பர்களும், தத்துவ ஆசிரியர் காண்பித்த இடத்தை நோக்கி விரைந்து ஓடினார்கள். தத்துவாசிரியர் கூறியபடியே, அங்கே குவியலாகப் பொன் நாணயங்கள் இருப்பதைப் பார்த்தனர்.

உடனே அவர்களில் ஒருவன், "இந்தத் தத்துவ ஆசிரியர்கள்தான் எப்படிப்பட்ட பைத்தியங்கள்! உயிர் கொடுக்கும் பணத்தைப் பார்த்து 'ஆட் கொல்லி' என்று பயந்து ஓடுகிறார்களே! அசடுகள்!!" என்று கூறினான்.

மற்றவன், "சரி, இனி மேற்கொண்டு என்ன செய்ய வேண்டும் என்பதைப் பற்றி யோசிப்போம். புதையலை இந்தப் பட்டப் பகலில் நம் ஊருக்குத் தூக்கிச் செல்வது உசிதமில்லை. ஏனென்றால் இந்த விஷயம் ஊராருக்கெல்லாம் தெரிந்து போகும். நாம் ரகசியமாக ராத்திரி எடுத்துக் கொண்டு



"பாடச் சொல்கிறீர்களே, இரண்டு நாளாகத் தொண்டை சரியாயில்லை"

"பரவாயில்லை, பாடுங்கள்! என் காதும் சரியாக இல்லை!"



போவோம். ஆகவே, இந்தப் புதையலைக் காத்துக்கொண்டு நம்மில் யாராகிலும் ஒருவர் இங்கே இருக்க வேண்டும். இன்னொருவன் ஊருக்குப் போய்ச் சாப்பாடு கொண்டுவர வேண்டும்" என்று திட்டம் வகுத்தான்.

இதற்கு இருவரும் சம்மதித்தனர். கடைசியாக ஒருவன் புதையலைக் காவல் காத்துக் கொண்டு நின்றான்; மற்றவன் சாப்பாடு கொண்டுவர ஊருக்குப் போனான்.

★

புதையலைக் காத்துப் பின் தங்கியவன் யோசிக்கலானான். 'சே! என்ன துரதிர்ஷ்டக்காரன் நான்! இன்றைக்கு நான் தன்னந்தனியாக உலாவ வந்திருக்கக் கூடாதோ! இரண்டு பேராக வந்ததனால்தானே, என் சினேகிதனுக்கும் இந்தப் புதையலில் பாதி கொடுத்துத் தொலைக்க வேண்டியிருக்கிறது. இங்கேயிருக்கும் பொன்னும் அப்படியொன்றும் அதிகமாக இருப்பதாகக் கூற முடியாது. என் குடும்பம் பெரிய குடும்பம். அதற்கேற்ப இங்கிருக்கிற பொன் அத்தனையும் இருந்தால் தான் சரியாக இருக்கும். அதனால் ஒரு காரியம் செய்கிறேன். அவன் வந்ததும், அவன்மேல் பாய்ந்து, என் கத்தியால் குத்திக் கொன்று விடுகிறேன். இது யாருக்கும் தெரியவும் தெரியாது. புதையல் முழுதும் எனக்கே கிடைத்து விடும்' இப்படி யோசித்துக் கொண்டே தன் கத்தியைத் தீட்டத் தொடங்கினான்.

சாப்பாடு கொண்டுவரச் சென்றவன் "நான் எதற்காகப் பாதிப் பொன்னை மற்றவனுக்குக் கொடுக்க வேண்டும். எனக்கோ கடன் தொல்லை சொல்லி முடியாது; மேலும் கிழவயதில் நிம்மதியாக வாழ்வதற்கான எந்த ஏற்பாடும் இதுவரை செய்து கொள்ளவில்லை. ஆனால் அவனுக்கோ கடன் தொல்லை கிடையாது; மேலும் நல்ல பணக்கார உறவினர்கள் வேறு அவனுக்கு இருக்கின்றனர். ஆகவே, நான் நன்றாகச் சாப்பிட்டு விட்டு அவனுக்காக எடுத்துச் செல்லும் சாப்பாட்டில் கொஞ்சம் விஷம் கலந்து கொண்டு போகிறேன். அதை அவன் சாப்பிட்டுவிட்டு இறந்து போவான். பிறகு எனக்குத்தான் புதையல் முழுதும்" என்று நிர்மானித்தான். அப்படியே விஷம் கலந்த சோற்றை எடுத்துக் கொண்டு நண்பனை நோக்கிச் சென்றான்.

புதையல் இருந்த இடத்தை அவன் நெருங்கியதும், புதையலைக் காத்துக் கொண்டிருந்தவன் அவன்மீது திடீர் என்று பாய்ந்து கத்தியால் குத்திக் கொன்றான்.

இந்தப் படுபாதகமான செயலைப் புரிந்து விட்ட பிறகு அவன் நினைத்தான். 'பாவம், புதையலின் பாதிப் பணம்தான் அவன் மரணத்துக்குக் காரணம். தொலைகிறான். எனக்கு ரொம்பவும் பசிக்கிறது. இனி நான் நிம்மதியாக வயிறு நிரம்பச் சாப்பிடுகிறேன்' என்று கூறிக்கொண்டே அவன் கொண்டு வந்த சோற்று மூட்டையை அவிழ்த்தான்.

ஒவ்வொரு கவளமாக நிதானமாகச் சாப்பிட்டான். சாப்பிடும்போது தான் சற்றும் எதிர் பாராமல் எவ்வளவு பெரிய ஐசுவரிய வானாகி விட்டான் என்று நினைத்து நினைத்துச் சந்தோஷப் பட்டுக்கொண்டே சாப்பிட்டான்.

ஆம், அவன் கொஞ்சம்கூடத் தனக்கு வந்துள்ள உணவில் விஷம் கலந்திருக்கும் என்று சந்தேகிக்க வில்லை. வயிறு நிரம்பச் சாப்பிட்டான். ஆனால் அரை மணி நேரத்தில் வயிற்றில் சொல்ல முடியாத வேதனை ஏற்பட்டு, இறந்து ஒழிந்தான். சாகும்போது "தத்துவப் பேராசிரியர் கூறியது எவ்வளவு அரிய உண்மை" என்று சொல்லிக் கொண்டே உயிரை நீத்தான்!

# ரூ 1,000

வரை கையெழுத்தின் பேரில் கடன் கொடுக்கப்படும். அநேகருக்கு இம்மாதிரி உதவியுள்ளோம். விபரங்களுக்கு ஆங்கிலத்தில் எழுதவும்:

**NATIONAL FINANCE CORPORATION**
**BORIVLI • BOMBAY.**

---

எவ்விதமாக இருக்க வேண்டுமென நீங்கள் விரும்புகிறீர்களோ அவ்விதமாக இப்பொழுதே இருக்கலாம். நூதன முறைகளின்படி உங்களை நீங்களே ஊடுருவிப் பார்த்துக் கொண்டு உங்களிடமிருந்தே யாவற்றையும் பெறலாம்.

மணமானவர்களில் நூற்றுக்கு எண்பது பேர் வாழ்க்கையில் நிம்மதியின்றித் தவிக்கிறார்கள்.

உத்தியோகஸ்தர்களில் நூற்றுக்குத் தொண்ணூறு பேர்கள், நல்ல சம்பளமும் பதவியும் பெறக் கூடியவர்கள், அன்றாட வாழ்க்கை நடத்துவதற்கே முடியாமல் திணறுகிறார்கள்.

நம்மில் அனேகர், ஒரு காரணமுமின்றி மனதை சங்கடப் படுத்திக்கொண்டு கசப்படைகிறோம்.

பதவியில் இருப்பவர்களில் அனேகர், தங்களுக்குக் கீழே வேலை பார்ப்பவர்களின் போதுமான ஒத்துழைப்பையும் உதவியையும் பெற முடியாமல் தவிக்கிறார்கள்.

இவைகளும், இன்னும் எத்தனையோ பிரச்னைகளும், முழுவதும் ஆலோசித்து மிகவும் தெளிவாகத் தீர்த்து வைக்கப் படுகின்றன. விவரமும் நம்பகமுமான ரிப்போர்ட் பிரத்தியட்சமான ஆலோசனைகளுடன் அனுப்பி வைக்கப்படும்.

உங்களை நீங்களே உணர்ந்து கொள்ளும் இந்த முற்றிலும் புதிய முறையை அறிந்து கொள்ள உங்களுக்கு நல்ல வரவு. இன்றே எழுதுங்கள். பின்னால் அப்படிச் செய்துவிட்டது பற்றி நீங்களே மகிழ்ச்சி அடைவீர்கள்.

•

**HUMAN LABORATORIES**

**P. O. Box No. 5053 :: BOMBAY - 9**

---

### வீட்டு சினிமா புரொஜக்டர்



இந்த போர்டபிள் (35 m. m.) புரொஜெக்டரால் உங்கள் வீட்டிலேயே சினிமாப் படங்களைப் பார்த்து மகிழலாம். இதை (AC or DC) மின்சாரத்தினாலும் டார்ச்சினாலும் இயக்கலாம். திரையில் படங்கள் முழு அளவிலும் (4''X3'') கலரிலும் சினிமா போலவே பார்க்கலாம். 3 அடி பிலிம் இலவசமாக அளிக்கப்படும். விலை ரூ. 12-8-0. வி. பி. பி. சார்ஜ் ரூ. 2-8-0 தனி. மேற்கொண்டு பிலிம் ஜெதும் 1-க்கு அணா 8.

### சிறிய ஸ்பிரிட் ஸ்டவ்



உங்களது சிற்றுண்டி, டீ, வெந்நீர் முதலியவைகளை தயாரித்துக் கொள்ள மிகவும் உபயோகமானது. இந்த ஸ்டவ்விற்கு கொஞ்சம் ஸ்பிரிட் செலவு செய்தால் உங்கள் வேலையை பூர்த்தி செய்யும். விலை ரூ. 6-0-0. வி. பி. பி. சார்ஜ் ரூ. 1-8-0 தனி.

### எலக்ட்ரிக் & ரேடியோ கைட்

ரூ. 15 செலவில் உங்கள் சொந்த ரேடியோவை தயாரியுங்கள். இதை மின்சாரம் இல்லாமலேஇயக்கலாம். வீட்டில் எலக்ட்ரிக்ஒயரிங்,ரேடியோ ரிப்பேர் முதலிய எலக்ட்ரிக் சம்பந்தமானவைகள் எல்லாம் கற்றுக்கொண்டு அதிக வரும்படி சம்பாதியுங்கள். விலை. ரூ. 4-0-0. தபால் செலவு அணா 12 தனி.

### தானே இயங்கும் ஆறு ரவை பிஸ்டல்கள் (லைசென்ஸ் தேவை இல்லை)



இந்த பிஸ்டல் தானே இயங்கும் ஆறு தோட்டாவுடன் பொருத்தப்பட்டது. லைசென்ஸ் அவசியமில்லை. டிராமா, சர்க்கஸ், பணத்தைக் காப்பாற்றிக் கொள்ள, உயிரைக் காப்பாற்றிக் கொள்ள இதற்கு மிஞ்சிய சிநேகிதனில்லை. சுட்டபொழுது நிஜமான பிஸ்டல்மாதிரி பயங்கரமான சப்தம் உண்டாகி நெருப்பு ரவைகள் வெளிவரும். விலை ரூ. 8-8-0. வி.பி.பி. சார்ஜ் ரூ. 1-12-0. 12 தோட்டாக்கள் இலவசம். தனியாக தோட்டாக்கள் வேண்டுமானால் டஜன் ரூ. 1-4-0. பிஸ்டல் கேஸ் ஒன்று ரூ. 2-8-0.

தொழில் புத்தகம்: புதிதாகக் கண்டு பிடித்துள்ள இங்கிலீஷ் எம்பிராய்டரி மிஷின். அழகிய வர்ணக் காட்சிகள், புஷ்பங்கள் முதலியவற்றை இதனால் துணியில் போடலாம். ஒவ்வொரு வீட்டுக்கும், ஒவ்வொரு பெண்ணுக்கும் ஏற்ற அருமையான பரிசு. விலை ரூ. 5-4-0. வி. பி. பி. சார்ஜ் ரூ. 1-8-0.

எம்பிராய்டரி டிசைன் புத்தகம்: நூற்றுக்கணக்கான டிசைன்களைக் கொண்ட புஸ்தகம் விலை ரூ. 2-8-0.

பிலிம் & ஸ்டுடியோ கைட்: சினிமா ப்ரொஜக்டர்கள் உபயோகப்படுத்தும் விதம், ஒலிப்பதிவு, ஒளிப்பதிவு முதலியவற்றைப் பற்றி விரிவாகக் கூறும் புஸ்தகம். விலை ரூ. 4. ஆர்ட் ஆப் போட்டோகிராபி: போட்டோக் கலையைப் பற்றிக் கூறும் புஸ்தகம் ரூ. 3. ஸோப் செய்யும் விதம்: ரூ. 3. வாசனைத் திரவியங்கள் செய்யும் விதம்: ரூ. 3. தையல் தொழில் ரூ. 4. தபால் செலவு அணா 12.

கடிதங்கள் ஆங்கிலத்தில் எழுதவும். மலாயாவிலிருந்து வரும் ஆர்டர்கள் பிரிட்டிஷ் போஸ்டல் ஆர்டருடன் அனுப்பவும்.

**LUCKY COMPANY (KL) KANWARIGANJ, ALIGARH U. P. (INDIA)**



அன்றைக் கொரு நாள் சாம்புவுக்கு என்ன செய்வது என்று தெரியவில்லை. தலையைத் தடவினான். மூக்கைச் சொறிந்தான். மேலும் கீழும் நடந்தான். அப்படியும் அவனுக்கு ஒன்றும் தோன்றவில்லை.

அன்று விடுமுறை நாளாக இருந்தமையால் தான் அப்படிக் கஷ்டப்பட்டுப் போய்விட்டான். காலையிலிருந்து வீட்டுக்குள்ளேயே அடைந்து கிடந்தான். சாயங்காலம் ஆக ஆக அவனுக்கு இருப்புக் கொள்ளவில்லை. எங்கேயாகிலும் போக வேண்டும்போல் தோன்றியது. எங்கே போவது என்றும் புரியவில்லை. சினிமாவுக்குப் போகலாம். ஆனால் ஒரு தியேட்டரில் ஓடும் படமாகிலும் நல்ல படமாகத் தோன்றவில்லை. பீச்சுக்குப் போகலாம் என்றாலும் பீச்சில் கூட்டம் தாங்க முடியாமலிருக்கும். அதனால் பீச்சுக்குப் போகவும் பிடிக்கவில்லை. பின் வேறு எங்கே தான் போவது? எப்படித்தான் இந்தச் சாயங்கால நேரத்தைக் கழிப்பது? இதுதான் அவன் கவலையாக இருந்தது.

அந்தச் சமயத்தில், "என்ன, சாம்பு ஸார்! வெளியில் எங்கேயும் போகவில்லையா?" என்று கேட்டுக் கொண்டே வந்து சேர்ந்தார் நரஸிம்மய்யர்.

"எங்கே போகிறது என்று தெரியாமல் தான் தவிக்கிறேன்!" என்றான் சாம்பு.

"வாருமே, மௌண்ட் ரோடு வரைக்கும் தான் போய் விட்டு வருவோம்!" என்று கூப்பிட்டார் ஸ்ரீமான் நரஸிம்மய்யர்.

"மௌண்ட் ரோடுக்குப் போய் என்ன செய்வதற்கு இருக்கிறது?"

"வெறும் நாளிலேதான் காரியத்தோடு மௌண்ட் ரோடுக்குப் போகிறோம். லீவு நாளிலே சும்மா தான் போய்விட்டு வருவோமே!" என்று இறுதக்காகப்பேசினார் ஸ்ரீமான் நரஸிம்மய்யர்.

எஸ்.வி.எஸ்

"அதுவும் ஒரு யோசனை தான்" என்று பரிபூரணமாக ஒப்புக் கொண்டான் சாம்பு.

பிறகு இருவருமாகச் சேர்ந்து பஸ் ஸ்டாண்டை நோக்கிப் புறப்பட்டனர்.

பத்து கஜ தூரம் போயிருக்க மாட்டார்கள். அவர்களுக்கு எதிரில் அரட்டை அருணாசலம் வந்துகொண்டிருந்தான்.

"எங்கே ஸார், போறேள்?" என்று கேட்டு வைத்தான் அருணாசலம்.

"ஏண்டா? உனக்கு எத்தனை தரமடா சொல்கிறது, போகும்போது 'எங்கே போறே என்று கேட்காதே, கேட்காதே' என்று?" இப்படிக் கேட்டுக் கொண்டே அவன் காதைத் திருகினார் நரஸிம்மய்யர்.

"இல்லை ஸார்! இல்லை ஸார்! இனிமேல் அப்படிக் கேட்க மாட்டேன்...... நீங்கள் என்ன முக்கியமான காரியமாகப் போகிறீர்களோ!" என்று வாய் குழறி மறுபடியும் கேட்டு வைத்தான் அருணாசலம்.

"பார்த்தாயா? பார்த்தாயா? இனிமேல் கேட்கவில்லை என்று சொல்லிவிட்டு மறுபடியும் அதே கேள்வியைத்தானே சுற்றி வளைத்துக் கேட்கிறே?" என்று அவன் முதுகில் ஒரு 'ஷொட்டு' வைத்தார் நரஸிம்மய்யர்.

அது அருணாசலம் முதுகில் ஒரு அணுகுண்டு போட்டாற் போலிருந்தது. "ஐயோ! அம்மா!" என்று அலறியபடியே "என்ன ஸார், சினிமாவுக்கா?" என்றான்.

"ராஜாஜி சினிமாவுக்குப் போகாதே என்கிறார். அதனால் நாங்கள் சினிமாவுக்குப் போகப் போவதில்லை" என்று இத்தனை நாழிகை பேசாதிருந்த சாம்பு இப்போது திமிர் என்று பேசினான்.

"நாங்கள் எங்கே போனால் என்ன? நீ எங்கள் கூட வர இஷ்டமிருந்தால் வந்து தொலையேன். 'எங்கே போறேள்? எங்கே வரேள்?' இதெல்லாம் என்ன கேள்வி?" என்றார் நரஸிம்மய்யர் மேலும் அவன் காதைத் திருகிக் கொண்டே.

"இதை அப்போதே சொல்லித் தொலைப்பதுதானே, ஸார்? நீங்கள் ஏதாகிலும் முக்கியமான காரியமாக எங்கேயாவது போகிறீர்களோ என்று பயந்து கொண்டே அல்லவா இத்தனைக் கேள்விகள் கேட்டுத் தொலைத்தேன்......சரி, நானும் உங்களோடே வருகிறேன்" என்று கூறி விட்டு அவர்களுடன் சேர்ந்து கொண்டான் அருணாசலம்.

சென்னையில் லீவு நாட்களில் சாயங்கால நேரங்களில் பஸ் புறப்படும் இடத்திற்கே போனாலன்றி வேறு எந்த 'ஸ்டாண்டி'லும் நின்றாலும் பஸ் கிடைக்காது. அதுபாட்டுக்கு ஸ்டாண்டில் நிற்கும் பிரயாணிகளைப் பார்த்து ஏளனம் செய்து கொண்டே போகும்.

அப்படி ஒரு பஸ், இரண்டு பஸ், மூன்று பஸ் கோட்டைவிட்டபிறகு சாம்புவுக்கு ஒரு யோசனை 'பளிச்' சென்று உதயமாயிற்று. "ஏன், ஸார்! நமக்கோ மௌண்ட் ரோடுக்குப் போய்ச் செய்யப் போகிறகாரியம் ஒன்றுமில்லை. அதனால் இந்த பஸ்ஸை லட்சியம் செய்யாமல் நடந்தே போய்விட்டால் என்ன?" என்று கேட்டான்.

"சரியான யோசனை" என்று மற்ற இருவரும் ஆமோதிக்கவே மூவருமாக ராணுவ நடை போட்டு நடக்கலாயினர்.

வழியெல்லாம் ஏதேதோ ஹாஸ்யமாகப் பேசிக்கொண்டே சென்றனர். அருணாசலம் பேசுவதற்கு விஷயமும் நரஸிம்மய்யர் கைக்கு வேலையும் கொடுத்துக் கொண்டே வந்தான். ஆம், அவன் ஏதாகிலும் பேசினானால், அதற்குப் பதில் அவன் முதுகில் ஷொட்டு வைத்துக் கொண்டே பேசிக் கொண்டு வந்தார். ஒவ்வொரு தடவை முதுகில் குத்து விழும் போதும் "ஐயோ!" "அம்மா!" "அப்பாடியோ!" என்று அருணாசலமும் அருளிக் கொண்டே வந்தான்.

இப்படி அவர்கள் மௌண்ட் ரோடை அடைந்தனர்.

ஒரு பெரிய ஹோட்டல் தன் பிரும்மாண்டமான வாயிலைத் திறந்து வைத்துக் கொண்டு 'வா வா' என்று அழைத்தது. "ஸார்! ஹோட்டலுக்கு வேண்டுமானால் போகலாமா?" என்றான் சாம்பு.

"பேஷாக!" என்று ஆமோதித்து, மூவருமாக ஹோட்டலுக்குள் நுழைந்தனர். கூட்டம் தாங்க முடியவில்லை. ஒரு மேஜையாகிலும் காலியில்லை. சுற்று முற்றும் பார்த்தனர். கடைசியில் ஒரு மேஜையில் மூன்று பேர் காப்பிச் சாப்பிட்டுக் கொண்டிருந்தனர். விழுந்தடித்துக் கொண்டு ஓடிப் போய் அவர்கள் பின்னால் இந்த மூவரும் நாற்காலியைப் பிடித்துக் கொண்டு நின்றனர்.

இவர்கள் தங்கள் இடத்துக்காகத் தான் அப்படிப் பழியாக நிற்கிறார்கள் என்று அறிந்த அந்தக் காப்பிக் காரர்கள், காப்பியை மெள்ள ஆற்றி நிதானமாக, ஒவ்வொரு மடக்காக வேண்டு மென்றே குடித்தார்கள். இதைப் பார்த்த அருணாசலம் மனசுக்குள் சபித்துக் கொண்டேயிருந்தான்.

எப்படியோ ஒரு விதத்தில் அவர்கள் எழுந்து போனவுடன் இந்த மும்மூர்த்திகள் உட்கார்ந்தார்கள். வெகுநேரம் வரைக்கும் மேஜை துடைப்பவனைக் காணோம். அவனைத் தேடிப் பிடித்து மேஜையைத் துடைக்க ஏற்பாடு பண்ணினார்கள்.

அருணாசலம் ஆரம்பித்தான்: "இவ்வளவு சிரமப்பட்டு என்ன புண்ணியம்? இந்த ஹோட்டலில் நல்ல டிபனா கிடைக்கப் போகிறது! முத்தியால் பேட்டைக்குப் போனாலாவது நல்ல இட்லி சட்னி கிடைக்கும்!"

"ஏண்டா, பழி! அப்பவே சொல்லித் தொலைக்கிறதுக்கு என்ன? நேரே அங்கேயே போயிருக்கலாம் அல்லவா?" என்றார் நரஸிம்மய்யர் அவன் முதுகில் பலமாக ஒன்று வைத்துக் கொண்டே!

"ஐயோ!" என்று குத்தைத் தாங்கிக் கொண்டே, "சொன்னதற்கு என் தலையிலேயா வந்து விடிந்தது! அட ராமா!" என்று அங்கலாய்த்தான் அருணாசலம்.

"இப்பத்தான் என்ன ஸார்! எழுந்திருந்து போய் விட்டால் போச்சு!" என்றான் சாம்பு.

"சே, சே, ஹோட்டலுக்குள் நுழைந்து, ஒரு நாழி உட்கார்ந்து விட்டு ஒன்றும் சாப்பிடாமல் போனால் ஹோட்டல்காரர்கள் என்ன நினைத்துக் கொள்வார்கள் நம்மைப் பற்றி!" என்றார் நரஸிம்மய்யர்.

"என்ன வேண்டுமானாலும் நினைத்துக் கொள்ளட்டுமே. அதைப்பற்றி நமக்கென்ன!" என்றான் சாம்பு.

"ரொம்ப அழகாக இருக்கிறதே!"

"பில் கொடுக்காமல் வெளியே போவதற்குக் கூச்சமாக இருக்கிறது என்றால் ஒன்று செய்வோமே, ஆளுக்கு ஒரு 'ஐஸ் வாட்டர்' சாப்பிட்டு விட்டு வெளியே போவோமே!" என்றான் அருணாசலம்.

"அது சரியானயோசனை!" என்றான் சாம்பு.



"மூன்று பேராக வந்து விட்டு 'ஒண்ணரை அணா' பில் கொடுத்து விட்டு வெளியே போவதா? வெட்கக்கேடு!" என்று சொன்னார் நரஸிம்மய்யர்.

இதற்குள் 'ஸர்வர்' வந்து விட்டான்.

"என்ன ஸார் வேண்டும்? ஸ்வீட் பாதாம் ஹல்வா, பாஸந்தி, குலாப்ஜாமூன் ......" என்று வழக்கப்படி அடுக்கிக் கொண்டே போக ஆரம்பித்தான்.

"கூ. கூ! அதெல்லாம் வேண்டாம்! மூன்று ஐஸ் வாட்டர் கொண்டு வா!" என்றான் அருணாசலம்.

ஒரு நிமிஷத்தில் கொண்டு வந்து வைத்து விட்டு, "அப்புறம் என்ன ஸார்? காரம் மஸாலா தோசை, பூரி பொடாட்டோ, பகளாபாத், சூடா மைசூர் போண்டா..." என்றான்.

"அதெல்லாம் ஒன்றும் வேண்டாம், அப்பா! 'பில்' கொடு, அதுவே போதும்" என்றான் அருணாசலம்.



ஸர்வருக்கு ஒரே வியப்பாக இருந்திருக்க வேண்டும். மூன்று பேர் வாட்ட சாட்டமான ஆட்கள் வந்து விட்டு ஒன்றுமே சாப்பிடாமற் போவதாவது என்று நினைத்தானோ என்னவோ! 'பில்' கொண்டு வந்து கொடுத்ததும், வாங்கிக் கொண்டு, பெரிய காரியம் சாதித்து விட்டாற் போன்ற பெருமிதத்துடன் அருணாசலம் நாற்காலியை விட்டு எழுந்திருந்து ஸ்டைலாகத் திரும்பினான். அவன் திரும்பிய வேகத்தில் அவன் புறங்கை அவன் குடித்து விட்டு மேஜைமீது வைத்திருந்த ஐஸ் வாட்டர் டம்ளர் மீது பட்டு, அது சுக்கு நூறாக உடைந்தது!

உடனே ஸர்வர் வந்து விட்டான். "ஸார்! ஸார்! பில்லைக் கொடுங்கள். கண்ணாடி டம்ளர் கிரயம் எட்டணாவையும் அதில் சேர்த்து விடுகிறேன்" என்று சொல்லிப் பில்லை வாங்கிக்கொண்டான். அப்பொழுது பார்க்கவேண்டுமே அருணாசலத்தின் முகத்தை, அசடு கலம் கலமாக வழிந்தது. சாம்புவின் முகம் இன்னும் விகாரமாக மாறியது. நரஸிம்மய்யருக்கானால் சிரிப்புத் தாங்கவில்லை.

* * *

"இங்கிருந்து முத்தியால் பேட்டைக்கு எப்படிப் போவது? நடந்தா? டிராமிலா? பஸ்ஸிலா?" என்று கேட்டார் நரஸிம்மய்யர்.

"ஹோட்டலில் எட்டணா நஷ்டப்பட்டு விட்டு இன்னும் பஸ்காரனுக்கும் டிராம்காரனுக்கும் அழ வேண்டுமா? அதெல்லாம் முடியாது. இங்கிருந்து நடந்தே போவோம்! இன்றைக்கு நடப்பது என்று தான் முதலிலேயே தீர்மானித்து விட்டோமே. இன்றைக்கு முழுவதும் நடந்தே தீர்த்துவிடுவது!" என்றான் சாம்பு.

"நான் தயார்" என்றார் நரஸிம்மய்யர்.

"நானும் தயார்" என்றான் அரட்டை அருணாசலம்.

மௌண்ட்ரோடு முழுதும் போய், சென்டிரல் ஸ்டேஷன் போய், நேத்தாஜி ரோடு முழுதும் நடந்து, முத்தியால் பேட்டை அடைந்தனர். அதற்குள் அவர்கள் கால்கள் கெஞ்சு கெஞ்சு என்று கெஞ்சத் தொடங்கிவிட்டன. இன்னும் பத்து கஜ தூரம் நடந்தால் ஹோட்டலை அடைந்து விடலாம். ஹோட்டலுக்கு அவ்வளவு அருகில் வந்தவுடன் மூவரும் இட்டிலியை உருவெளித் தோற்றத்தில் கண்டனர். இட்டிலிக்குப் பக்கத்தில் அருமையான தேங்காய்ச் சட்னியைக் கண்டனர். கம கம என்ற சாம்பார் வாசனையை நுகர்ந்தனர். ஆம்; அவர்கள் தெருவில் வருவோர் போவோரைப் பார்க்கவில்லை. எதிரில் வந்த கை வண்டிகளையும் மோட்டார் வண்டிகளையும் காணவில்லை. இட்டிலி ஞாபகத்திலேயே நடந்து ஹோட்டல் வாசலை யடைந்தனர். அந்தோ பரிதாபம்! அன்று அந்த ஹோட்டலுக்கு விடுமுறைநாள்!

பசி காதை அடைத்தது. கால் வலி பொறுக்க முடியாமற் போய் இன்னும் ஒரு அடி எடுத்து வைப்பது சிரம சாத்தியமாகப் போய் விட்டது! என்ன செய்வார்கள்?

"ஏண்டா பழி, அருணாசலம்! இட்டிலி எப்படியிருக்கிறது!" என்று சொல்லி அருணாசலத்தின் முதுகில் ஒன்று வைத்தார்.

"ஸார், சும்மா அடிக்காதீங்க ஸார்! வயிற்றிலே பசி குடை குடை என்று குடையறது. நீங்கள் வேறு வயிற்றெரிச்சல் கொட்டிக் கொள்கிறீர்கள்......" என்றான் அருணாசலம்.

"சரி, வாங்க போவோம் வீட்டுக்கு" என்றான் சாம்பு.

"எப்படி? இங்கிருந்து மாம்பலத்துக்கு நடந்தே போய்விடுவதாகப் பிளானா?" என்று சிரித்துக் கொண்டே கேட்டார் நரஸிம்மய்யர்.

"ஏன் ஸார்! உங்களாலே சும்மா இருக்க முடியவில்லையா? எரியற கும்பியிலே எண்ணெய் ஊற்றுகிறீர்களே" என்றான் சாம்பு.

"நீங்கள்தானே ஸார்! இன்று முழுவதும் நடந்தே தீர்த்து விடுவது என்றீர்கள். அதனால்தான் கேட்டேன்."

"ஏதோ, அந்த எட்டணா அழுத எரிச்சலில் அப்படிச் சொன்னேன். இப்போ இந்த வயிற்றுப் பசியுடன் நடக்கவாவது! நேரே பீச்சு ஸ்டேஷனுக்கு நடந்து போய்விட வேண்டியது. அங்கிருந்து மாம்பலத்துக்கு டிரெயினிலே போய் விடலாம்" என்று திட்டம் வகுத்துக் கொடுத்தான் சாம்பு.

* * *

மாம்பலம் அடைந்த பின்னர் மூவரும் அவரவர்கள் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தார்கள். நாம் சாம்பு வீட்டிலிருந்து புறப்பட்டோமாகையால் நாமும் சாம்புவுடன் அவன் வீட்டுக்குப் போவோம்.

சாம்பு வீட்டை அடைந்தபோது மணி சரியாக ஒன்பது அடித்து விட்டது.

"அம்மா! தட்டை எடுத்து வை! பசிக்கிறது!" என்றான் சாம்பு.

"இதென்னடா, கூத்தாக இருக்கிறது! மணி எட்டரைக்கு மேல் ஆகி விட்டதே. வழக்கம்போல் நீ எங்கேயாகிலும் சாப்பிட்டு விட்டு வருவாய் என்று குழம்பு, ரஸத்தையெல்லாம் சற்று முன்னாலேதான் வேலைக்காரி வந்து கேட்டாள் கொடுத்தேன். சாதம் மட்டும், 'எதுக்கும் இருக்கட்டும்' என்று ஜலம் கொட்டி வைத்திருக்கிறேன்" என்றாள்.

"பேஷ்! பேஷ்!! சாதமாகிலும் வைத்திருக்கிறாயே, அதுவே போதும், அம்மா!"

"ஏண்டாப்பா, ஜலம் விட்ட சாதம் என்றால் உனக்குப் பிடிக்காதே! அந்தக் காலத்திலே பழையது என்றால் சாப்பிட மாட்டேன் என்று நாலு தெருவிலேயும் சுற்றிச் சுற்றி வருவாயே! வேண்டுமானால் கும்மட்டியில் அரிசி களைந்து வைச்சுடறேன். அரை மணி நேரத்திலே சாதம் ஆயிடும்."

"இன்னும் அரை மணியா? நன்றாகச் சொன்னாய் போ! என் பசி உனக்கு என்ன தெரியும்! இருக்கிற சாதத்தைப் பிழிந்து வை!" என்று சொல்லிக் கொண்டே இலையைத் தானே எடுத்துப் போட்டுக் கொண்டு சாப்பிட உட்கார்ந்து விட்டான்.

எத்தனையோ நாள், எத்தனையோ வியஞ்சனங்களுடன் சாப்பிட்டிருக்கிறான். அன்றைக்கெல்லாம் 'இதிலே உப்பு, அதிலே புளி' என்று குறைப்பட்டுக் கொண்டே சாப்பிடுவான். இன்றைக்கு அந்த மாதிரி குறையெல்லாம் அவன் சொல்லவில்லை. அதற்கு மாறாக ஜலம் விட்ட சாதமும் மோரும் ஊறுகாயும் இன்று பிரம்மானந்தமாக இருந்தன.

"உன் வயிற்றில் பசியில்லை என்றால், நீ சாப்பிடும் உணவுப் பண்டத்தைக் குறை சொல்வானேன்?" என்று ரவீந்திரநாத்தாகூர் கூறிய மணி மொழியை அன்று அவனுக்கு யாராகிலும் நினைவுறுத்தியிருந்தால் அதைப் பற்றி மூக்கால் மணி நேரம் ஒரு மாபெரும் சொற்பொழிவே நிகழ்த்தியிருப்பான்!

## வட்ட மேஜை

### ஏமாறுதீர்கள்!

நவம்பர் ஒன்பதாம் தேதி "கல்கி" இதழில் "அறிவு எங்கே போகிறது!" என்ற பகுதியைப் படித்தேன். தென்னாட்டினர் சில சமயம் அறிவிழந்து விடுகின்றனர் என்பதற்குச் சில உதாரணங்களும் காட்டியிருக்கிறீர்கள். இதைப் படித்த பிறகாவது அறிவிழக்காமல், ஏமாறாமல் இருப்பார்கள் என்று எண்ணுகிறேன்.

நான் எஸ். எஸ். எல். ஸி. பாஸ்செய்து இரண்டு வருடங்கள் ஆகின்றன. மேலே படிக்க முடியாதபடியால் வேலை தேடும் வேட்டையில் இறங்க வேண்டியதாயிற்று. அதாவது, தினந்தோறும் தினச்செய்திப்பத்திரிகைகளை, குறிப்பாக ஆங்கிலத் தினப் பத்திரிகையின் இரண்டாம் பக்கத்தை ஒரு முறை பார்த்து விடுவேன். என் படிப்புக்குத் தகுந்தவாறு ஏதேனும் "தேவை" வந்திருந்தால் [விளம்பரப்படுத்தியிருந்தால்] உடனே ஒரு மனு போட்டு விடுவேன்.

ஒரு சமயம் டில்லியிலிருந்து வேலை தேடிக் கொடுப்பதாக ஒரு கம்பெனி விளம்பரம் செய்தது. அடிக்கடி விளம்பரம் செய்து கொண்டும் வருகிறது மேலே சொன்ன கம்பெனி. உடனே மனு போட்டேன். ஒரு வாரம் கழித்து ஒரு தபால் வந்தது. அதில் கண்ட விஷயங்கள். "அவசரம், உன்னை மதராஸில் ஒரு கம்பெனியில் ஒரு கிளார்க்காகப் போடப்படும். ரிஜிஸ்ட்ரேஷன் பணம் ரூ. 4 உடனே அனுப்பவும். வேலையில் உடனே சேரத் தயாராக இருக்கவேண்டும்" என்று வந்தது. எப்படியாவது வேலை கிடைத்தால் போதும் என்று கேட்ட தொகையை அனுப்பிவிட்டேன். இன்னும் அக் கம்பெனியிலிருந்து ஒரு தபாலும் வரவில்லை. இது ஏமாற்றம் என்று பின்னால் அல்லவா தெரியும். இம்மாதிரி இன்னும் ஓரிரண்டு இடத்தில் ஏமாற்ற மடைந்தேன்.

பிழைக்கும் வழியில் இதுவும் ஒன்று என்று இப்பொழுதுதான் தெரிகிறது. என்மாதிரி எத்தனைபேர் அறிவிழந்தனரோ!

இனிமேலாவது, என் போன்ற வேலை தேடும் படித்த இளைஞர்களே! வேலை கொடுப்பதாகச் சொல்லி அந்த 'பீஸ்' இந்த 'பீஸ்' என்று ஏதாவது சொல்லிப் பணம் கேட்கும் கம்பெனிகளுக்குப் பணம் அனுப்பி ஏமாறுதீர்கள்!

பாலக்கோடு
8—11—52

ஆர். எஸ். மணி

### இளைஞர் முன்னணி

தங்கள் 2—11—52 'கல்கி' இதழில் "தேசிய இளைஞர் முன்னணி" என்ற தலைப்பில் தாங்கள் வரைந்துள்ள தலையங்கத்தைக் கண்ணுற்று மகிழ்வு கொண்டேன். இளைஞர்களை ஒன்று சேர்க்கக்கூடிய ஸ்தாபனம் ஒன்று இருத்தல் அவசியம் என்ற உங்கள் வலியுறுத்தல் மிகுந்த ஆர்வமளிக்கும் ஓர் விஷயம்.

காங்கிரஸின் எதிர்கால திட்டத்தை இளைஞர்கள் கூடி ஆலோசிக்க வேண்டியது மிக்க அவசியம். அதற்காக மாகாண முழுதுமுள்ள யுவர் காங்கிரஸ் அங்கத்தினர்களும் பிரதிநிதிகளும் கலந்து ஒரேவிதமான, சீரான, ஒரு மாகாண ஸ்தாபனத்தை நிறுவ வேண்டும். அதன் உதவியுடன் காந்தியடிகளின் கொள்கைகளைப் பரப்பவேண்டும். குறுகிய மாகாண வாதம் பேசியும், நம் கலை, பண்பாடு, மதம் முதலியவற்றை இகழும் கட்சிகளின் பிரசாரத்தைக் குலைக்க இளைஞர்கள் முன் வரவேண்டும். ஆனால் ஸ்தாபனத்தில் சிறிதும் பூசல் தோன்ற இடமளிக்கக் கூடாது. மேலும் இந்த மத்திய ஸ்தாபனம் தமிழ் நாட்டிலுள்ள எல்லா தேசிய ஆர்வமுள்ள சங்கங்களையும் இணைத்துக் கொள்ள வேண்டும். இளைஞர் காங்கிரஸ் இயக்க வளர்ச்சிக்காகவே ஓர் பத்திரிகை வேண்டும். அதில் கூடியவரையில் இளைஞர் முன்னணி பற்றிய செய்திகளே இருத்தல் வேண்டும்.

தற்போது பள்ளிகளிலே மாணவர்களிடை காங்கிரஸ் பிரசாரம் இல்லை. யுவர்கள் முயற்சி செய்து பள்ளி தோறும் மாணவர் காங்கிரஸைத் துவக்கி நடத்த வேண்டும்.

இவை யாவும் எனது சொந்தக் கருத்துக்களே எனக்கு இது பற்றிப் பல யுவர் காங்கிரஸ் பிரதிநிதிகளின் கருத்தறிய அவாவுண்டு. அவர்கள் எனக்கு, (துணைத் தலைவர், இளைஞர் காங்கிரஸ், தொச்சியம், திருவாசி போஸ்ட், திருச்சிமாவட்டம்) எழுதி அறிவிப்பார்களென நம்புகிறேன்.

தொச்சியம்
12—11—52

வி. வி. சீனிவாஸன்


நீண்ட காலத்திற்கு உழைக்கும் 'விஸ்டம்' டூத் ப்ரஷ் சிறிய சைஸில் குழந்தைகளுக்கும் இருக்கிறது!


There's a LONG-LASTING 'WISDOM' TOOTHBRUSH in a smaller size for children!






Wisdom REGD.
Wisdom
Wisdom
made with tufu

43



# மனித இதயம்

ராமப்பிரியா

சந்திரன் அன்று தன்னுடைய ஆபீஸில் உட்கார்ந்து கொண்டு ஆபீஸ் தபால்களைப் பார்வையிட்டுக் கொண்டிருந்தான். அவன் அந்தச் சிற்றூரில் தன்னுடைய பரிவாரங்களோடு சென்ற ஒரு வாரமாகக் 'காம்ப்' செய்திருந்தான். அந்தக் குக் கிராமத்தில் இன்னும் நான்கு நாட்கள் தங்க வேண்டிய நிர்ப்பந்தத்தை எண்ணி ஒவ்வொரு நாளையும் ஒரு யுகமாகக் கழித்துக் கொண்டிருந்தான். அது சமயம் ஆபீஸ் பியூன் சந்திரனுக்கு வந்திருந்த தபால்களை பயபக்தியோடு மேஜை மீது வைத்துச் சென்றான். வெகு அலட்சிய பாவத்துடன் ஒவ்வொரு தபாலையும் ஆராய்ந்து கொண்டிருந்த சந்திரனின் முகம் முத்துக் கோத்தாற்போல் எழுதப் பட்டிருந்த கடிதத்தைப் பார்த்தவுடன் பிரகாச மடைந்தது. மகிழ்ச்சியும் ஆவலும் மேலிட அந்தக் கடிதத்தின் உறையைக் கிழித்துக் காகிதத்தைப் பிரித்துப் படித்தான். அவனுடைய மனைவி விஜயாவினிடமிருந்துதான் அந்தக் கடிதம் வந்திருந்தது. படித்து முடித்த பின்னும்கூட அந்தக் கடிதத்தைக் கீழே வைக்க மனமில்லாதவனாய்க் கையிலேயே வைத்துக் கொண்டிருந்தான் சந்திரன். காற்றில் அக் கடிதம் அவன் நெஞ்சைப் போலவே பட பட வென்று அடித்துக் கொண்டது. அவள் எழுதியிருந்த கடிதத்தின் ஒரு பாகம் அதற்குள் சந்திரனுக்கு மனப்பாடமாகி விட்டது. அவள் எழுதி யிருந்தாள் :

"உங்களைப் பிரிந்து ஒரு வாரம்தான் ஆன போதிலும் எனக்கென்னவோ ஒரு யுகமாகி விட்டது போல் இருக்கிறது. தீபாவளிக்கு இன்னும் சரியாக ஆறு நாட்களே இருக்கின்றன. இரண்டு மூன்று நாள் முன்னதாகவே 'காம்ப்'பை முடித்துக்கொண்டு வந்துவிடுங்கள். இந்தத் தீபாவளி நம்முடைய தலை தீபாவளி யல்லவா? இதை ரொம்பவும் விமரிசையாகக் கொண்டாடத் திட்டம் போட்டிருக்கிறேன். கலியாணம் ஆகி நான்கு வருஷமாகிறது! நாலாவது தீபாவளியைத் தலை தீபாவளி என்று சொல்கிறேனென்று சிரிக்கிறீர்களா? தலை தீபாவளி என்றால் என்ன? தம்பதிகள் கலியாணமாகி முதன் முதலாக ஆனந்தமாகக் கொண்டாடும் தீபாவளிக்குத்தானே தலை தீபாவளி என்று பெயர்? அப்படிப் பார்த்தால் நமக்குக் கலியாணமாகி நான்கு வருஷங்களில் நாம் மனச் சந்துஷ்டியுடன், ஆரோக்கியத்துடன், சந்தோஷத்துடன் கொண்டாடப் போகும் முதல் தீபாவளி இந்தத் தீபாவளிதானே? அதற்கு நான் தலைதீபாவளி என்று சொன்னதில் தவறில்லை யல்லவா? ஆகையால் இதுதான் நம்முடைய தலை தீபாவளி! நீங்கள் கண்டிப்பாக நாலு நாள் முன்னதாக வந்து விடுங்கள்.

—விஜயா."

சந்திரனின் நெஞ்சம் விம்மித் தணிந்தது இத்தனை காலமும் ஓய்வெடுத்துக் கொண்டிருந்த சிந்தனை வண்டு அவன் இதய மலரில் சேகரித்து வைத்திருந்த நினைவுத் தேனை நாடிப் பறந்தது.

* * *

அப்பொழுதுதான் சந்திரனுக்கும் விஜயாவுக்கும் கலியாணமாகி யிருந்தது. கண்டவுடன் காதல் கொண்டு நடந்த கலியாணமில்லை. பெரியவர்கள் பார்த்து நிச்சயம் செய்து நடத்தி வைத்த கலியாணம்தான். கலியாணம் முடிந்து ஊருக்குப்போகுமுன் விஜயாவினிடம் தனியே சொல்லிக் கொள்ளப் போனான்.

தாழம் பூ நிறமேனியளாய், கருங் கூந்தலின் சுருண்ட குழற்கற்றைகள் நெற்றிமீது லேசாகப் புரளத் துரு துருவென்ற அகன்ற மையிட்ட கண்கள் அவனை நோக்கி வட்டமிட லஜ்ஜையுடன் நின்று கொண்டிருந்த

விஜயாவின் அழகிலே தன்னை மறந்து சொக்கிப் போய் நின்று விட்டான் சந்திரன்.

சந்திரன் எதிரே நிற்கையில் அவளும் வெட்கம் மேலிட்டுத் தடுமாறிக் கொண்டு பூமி தேவியைப் பார்த்த வண்ணம் கால் கட்டை விரலால் தரையைக் கீறிக்கொண்டிருந்தாள். "விஜி!" என்றான் சந்திரன் செல்லமாக. மௌனமாகத் தலை நிமிர்ந்தாள் விஜயா. "விஜயா! ஏன் பேசமாட்டேனென்கிறாய்? பட்டணம் போனவுடன் வீடு பார்த்து விடுகிறேன். உடனே வந்துவிடு!" என்றான், அவள் மோவாயை நிமிர்த்தியவாறு. ஆகட்டும் என்பது போலத் தலையை அசைத்தாள் விஜயா. சந்திரன் எங்கெங்கேயோ அலைந்து திரிந்து ஒரு மாதத்திற்குள் வீடு பார்த்து விஜயாவை அழைத்துக் கொண்டான். புதுக் குடித்தனமல்லவா? விஜயா தன்னுடைய அழகினாலும், சாதுர்யத்தினாலும் சந்திரனை அப்படியே ஸ்வீகரித்துக் கொண்டு விட்டாள். சந்திரனும் விஜயாவின் அழகிலே சொக்கி, மயங்கிப் போய்க் கிடந்தான். நாட்கள் பறந்தன. தம்பதிகள் ஆனந்த வாழ்க்கையில் தங்களையும், தங்களுடைய சூழ்நிலையையும் மறந்தவர்களாகவே இருந்தனர்.

விஜயா சில நாட்களாக அடிக்கடி இருமத் தொடங்கினாள். முதலில் உஷ்ணத்தினால் என்று நினைத்துக் கவனிக்காமலிருந்து விட்டாள். ஆனால் வர வர இருமல் அதிகமாயிற்று. அவளுடைய பொன்னிற மேனியின் நிறம் குன்ற ஆரம்பித்தது. தளதளப்பான அன்றலர்ந்த ரோஜா புஷ்பம் போலிருந்த உடம்பும் கொஞ்சம் கொஞ்சமாக வாடத் தொடங்கியது. சந்திரன் அவள் உடம்பு இளைப்பதைக் கண்டு பதறிப் போய் மிதமிஞ்சிய அக்கறை எடுத்துக் கொண்டு விஜயாவை நகரத்திலுள்ள பிரபல டாக்டர்களிடம் காண்பித்தான். டாக்டர்கள் தங்களுக்குரிய பீஸ்களை வாங்கிக்கொண்டு அவரவர்க்குத் தோன்றிய மருந்துகளை எழுதிக் கொடுத்தனர். விஜயாவுக்கு நோயுற்ற நிலைமையில் சந்திரனின் கவலை படர்ந்த முகத்தைப் பார்க்கக் கஷ்டமாக இருந்தது. முன்பு இருந்த குதூகலம் அவன் முகத்திலிருந்து மறைந்து விட்டது. கொஞ்ச நாள் பிறந்தகத்திலிருந்து உடம்பைத் தேற்றிக் கொண்டு வருகிறேன் என்று சொல்லி விஜயா பிறந்தகம் போனாள்.

விஜயா போய் நாலு மாதமாகியும் உடம்பு குணமாகவில்லை. இதற்குள் தலை தீபாவளிக்கு மாமாவிடமிருந்து சந்திரனுக்கு அழைப்பு வந்தது. தீபாவளிக்குப் போய் விஜயாவையும் பார்த்துவிட்டு வரலாமென்று போனான். அங்கே போய் விஜயாவைப் பார்த்த அவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. எலும்பும் தோலுமாய், ஈர்க் குச்சியாய்க் கட்டிலோடு கட்டிலாகக் கிடந்தாள் விஜயா! சந்திரனைப் பார்த்ததும் அப்படியே குலுங்க, குலுங்க அழுதுவிட்டாள் விஜயா. "என்னை உங்களோடு பட்டணத்துக்கு அழைத்துப் போய் விடுங்கள், உங்களைப் பார்க்காத ஏக்கமே என்னை ரொம்பவும் மோசமாகச் செய்து விட்டது. எனக்கு இன்ன வியாதி என்றே இன்னும் ஒருவராலும் கண்டு பிடிக்க முடியவில்லை. நான் உங்கள் காலடியில் செத்துப் போனாலும் பரவாயில்லை. உங்களோடு என்னையும் அழைத்துப் போய் விடுங்கள்!" என்று தேம்பினாள். அழகு பிம்பமான விஜயா இந்த குறுகிய நாட்களுக்குள் இவ்வளவு மோசமான நிலையை அடைவாள் என்று கனவிலும் கருதாத சந்திரன் பெருமூச்செறிந்தான். இந்த அழகான நிலையில் தலை தீபாவளியை எவ்வாறு அந்தத் தம்பதிகள் சந்தோஷமாகக் கொண்டாடுவார்கள்? ஊருக்குத் திரும்பும் பொழுது விஜயா ஒரே பிடிவாதமாக, அவள் பெற்றோர் என்ன சொல்லியும் கேட்காமல், சந்திரனுடன் வந்து விட்டாள். ஆரம்பத்தில் சந்திரன் விஜயா மீது அளவற்ற அக்கறை எடுத்துக் கொண்டு, தன்னால் முடியுமளவும் பார்த்து விடுவதென்று கங்கணம் கட்டிக் கொண்டு பணத்தைப் பணமென்று பாராமல் செலவு செய்து அவளுக்கு வைத்தியம் பார்த்தான்.



எனினும் காலப் போக்கில் அவனையறியாமல் விஜயாவின் மீது வெறுப்பு உண்டாக ஆரம்பித்தது. அவனுடைய நடத்தையில் கண்ட மாறுதல்கள் விஜயாவைத் திகைக்க வைத்தன. சந்திரனின் மனத்தில் தான் நோயாளி என்ற வெறுப்பு

பட ஆரம்பித்ததைக் கண்டு மனம் அதிர்ச்சியுற்ருன் விஜயா. அதிலிருந்து விஜயா தன்னுடைய உடல் ஆரோக்கிய மடைந்து கொண்டு வருவது போலவே காட்டிக் கொண்டு உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு சந்திரனுக்குச் சிசுருஷை செய்ய ஆரம்பித்தாள்.

இந்த இடத்தில் சந்திரனின் சிந்தனைத் தொடர் அறுந்தது. பழைய ஞாபகங்கள் அவன் மனதைக் கிளறுவதால் ஏற்பட்ட சங்கடத்தைத் தவிர்க்கும் பொருட்டு நாற்காலியினின்றும் எழுந்து சற்று நேரம் ஜன்னல் வழியாக நீல வானத்தைப் பார்த்துக் கொண்டு நின்ருன். அங்கே யெல்லாம் விஜயாவின் முகமாகவே காட்சியளித்தது அவனுக்கு. ஒரு டம்ளர் தண்ணீரைச் சாப்பிட்டு விட்டு மறுபடி நாற்காலியில் உட்கார்ந்து பைல்களைப் புரட்டிக் கொண்டு நினைவை மறக்க முயன்ருன். அவன் அந்த நினைவுகளை மறக்க முயன்ருலும், நினைவுகள் இவனைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு விட்டன.

விஜயாவின் உடல் நிலை, வர வர மோசமாகாமல் ஒரே நிலையில் இருந்தது. அதுவே ஒரு சிறு அபிவிருத்திதானே? பழைய அழுகை வரவேயில்லை. மாதத்தில் ஒரு தடவை அல்லது இரண்டு தடவை அந்தக் கொடுமையான இருமல் வந்துவிடும். அப்பப்பா! அப்போது விஜயாவைக் கண் கொண்டு பார்க்கச் சகிக்க முடியாமல் இருக்கும். அவ்வளவு கஷ்டப்படுவாள். இந்தச் சமயத்தில் இரண்டாவது தீபாவளி வந்து போயிற்று. அந்தச் சமயத்தில் விஜயாவுக்கு இருமல் வந்து கண்ணைத் திறக்காமல் கிடந்தாள். தீபாவளி சமயத்தில் ஹோட்டலிலிருந்து சாப்பாடு எடுத்து வந்து சந்திரன் சாப்பிட்டான். சந்திரனின் வெறுப்பும் உச்ச நிலைக்குப் போய்விட்டது. விஜயாவைப் பார்க்கும் பொழுதெல்லாம் அவன் மனசுக்குள் எரிச்சல் குமுறியது. காரணமில்லாமல் அவன் அவளிடம் பொருமினுன். அவள் அவனுக்கு மனைவிதான். மனைவியின் நோயைத் தீர்க்கும் பொறுப்பும், அவளைச் சந்தோஷப்படுத்த வேண்டிய அவசியமும் கணவனைச் சேர்ந்தது தான். அவனுடைய கடமையும் கூட. அதற்கு ஐயமில்லைதான். ஆனுல் அந்தக் கடமைக்கும் ஒரு எல்லை கிடையாதா என்று ஆத்திரப்பட்டான் சந்திரன்.

இளங் காளைப் பருவத்தினனை சந்திரனின் கற்பனையில் உருவாயிருந்த இளம் மனைவியோடு நடத்தவேண்டிய ஆனந்த வாழ்க்கையின் திட்டங்களென்ன? இப்போது நடப்பதென்ன? இந்த வயதில் ஜாலியாகச் சினிமாவுக்கும் பீச்சுக்கும் அவளோடு கைகோத்துக் கொண்டு போக வேண்டுமென்று எண்ணிய எண்ணங்கள் கனவாயின. அவளுக்காக டாக்டர் வீட்டிற்கும், மருந்துக் கடைக்கும் தான் அவன் போய்க் கொண்டிருந்தான். ஆபீஸிலிருந்து வீட்டிற்கு வரும்பொழுது கட்டுக்கதம்பத்திற்குப் பதில் ஒரு பாட்டில் இருமல் மருந்துதான் விஜயாவுக்கு இன்றியமையாத பொருள் என்று சந்திரன் தெரிந்து கொண்ட பிறகு அவன் மனம் உடைந்து போய் விட்டது. மண வாழ்க்கையில் இவ்வளவு சீக்கிரம் அவர்கள் ஏமாற்றமடைந்து விட்டதுதான் சந்திரனின் வெறுப்புக்குக் காரணம். இதே உணர்ச்சி விஜயாவுக்கும் இல்லாமலா இருந்தது. ஆனுல் அவள் பெண்! தன் மனசில் என்ன இருந்தாலும் வெளியே காட்டிக்கொள்ள முடியாத ஜன்மம்! மேலும் நல்ல பருவத்தினனை சந்திரனுக்குத் தன்னுல் ஒருவித சுகமும் இல்லாமல் கஷ்டத்தைக் கொடுக்கிறேமே என்று நினைத்து மனம் பொருமித் தன்னைப் படைத்த கடவுளை நோவதைவிட வேறு என்னதான் செய்ய முடியும் அவளால்? இப்படியே ஒரு மாறுதலுமின்றி நாட்கள் வாரங்களாகி, வாரங்கள் மாதங்களாகிக் கொண்டிருந்தன. அவர்கள் வாழ்க்கையில் சந்தோஷமென்பது கிஞ்சித்தேனும் இல்லாமல் போய் விட்டது. இயந்திரங்கள் போல இருவரும் இயங்கிக் கொண்டிருந்தார்கள். சந்திரனுக்கும் விஜயாவுக்கும் இனிவாழ்வு மலரும் நாளும் வரப்போகிறதா?

சந்திரனின் சிந்தனை மறுபடி கலைந்தது. நிமிர்ந்து நேரே உட்கார்ந்து கொண்டான். தன்னுடைய தாம்பத்ய வாழ்க்கை அடியோடு பாழாகி விட்டதென்றே திடமாக நம்பினவனுக்கு. அவன் நம்பிக்கை பொய்த்துப்போய் தன்னுடைய வாழ்க்கையில் தோன்றிய எதிர்பாராத மாறுதலைக் குறித்து அவனே ஆச்சரியப்பட்டான். மீண்டும் சந்தோஷமாகத் தன் வாழ்வு மலருமென்று அவன் கனவிலும் நினைக்கவில்லை. மறுபடியும் தன்னை மலர்ச்சியுறச் செய்த கடவுளுக்கு மானசீகமாகத் தன் வணக்கத்தைச் செலுத்தினுன். மறுபடியும் பழைய நினைவுகளில் மனம் சென்றது.

---



"என் மாமனுர் இந்தப் பக்கத்திலே நல்ல நாயாகப் பார்த்து வாங்கி அனுப்பச் சொல்லியிருக்கிருர்!"

"நல்ல நாயாக அகப்படா விட்டால்......?"

"என்னை உடனே புறப்பட்டு வரச் சொல்லி எழுதியிருக்கிருர்!"

இந்தத் தடவை விஜயாவுக்குக் கொஞ்சம் கடுமையாகவே நோய் வந்து விட்டது. சந்திரனும் எவ்வளவோ சிரமம் எடுத்துக் கொண்டு சிகிச்சை செய்து பார்த்தான். ஒன்றும் பிரயோஜனப்படவில்லை. இந்தச் சங்கடமான நிலையில் விஜயா கர்ப்பமாயிருந்தாள். ஏழாவது மாதம் அவளைப் பிறந்தகத்துக்கு அனுப்பலாம் என்று நிர்மானித்திருந்தான். நோய் காரணமாக அவளுக்குப் பலஹீனம் அதிகமாகிவிடவே, பிரசவத்தை இங்கேயே வைத்துக் கொள்வதென்ற நிர்மானத்துக்கு வந்தான், சந்திரன்.

விஜயாவை வீட்டில் வைத்துச் சிகிச்சை செய்வது சிரமமாயிருக்கவே, சந்திரன் அவளை ஆஸ்பத்திரியில் சிகிச்சைக்காகச் சேர்த்தான். தூரபந்துவான ஒரு கிழவியின் உதவியைத் தவிரச் சந்திரனுக்கு உதவிக்கு யாரும் இல்லை. விஜயாவின் தாயார் இன்னொரு பெண்ணின் பிரசவத்தை உத்தேசித்து, பம்பாய்க்குப் போய் விட்டபடியினால், விஜயாவின் உதவிக்கு அவளால் வர முடியவில்லை. மேலும் விஜயாவுக்கு நீண்ட நாளாக உடல் நலம் சரியில்லாததால் யார்தான் வந்து எத்தனை நாளைக்கு உதவி செய்ய முடியும்? ஆகவே சந்திரன் அவளுக்கு ஆஸ்பத்திரியிலேயே ஸ்பெஷல் வார்டு ஏற்பாடு செய்து விட்டான். ஆஸ்பத்திரிக்குப் போய் விஜயாவைப் பார்த்துப் பெருமூச்சு விடுவது சந்திரனின் தினசரி வேலைகளில் முக்கியமான வேலையாகி விட்டது.



வீட்டின் சொந்தக்காரர் (ஒரு சின்ன அறையைக் காட்டி):— இந்த அறைக்குப் பதினைந்து ரூபாய் வாடகை. எப்படிப்பட்ட அறை தெரியுமா? இந்த அறையைப் பார்க்க வந்தவர்களெல்லோரும் ஒரே குதியாய்க் குதிக்கிறார்கள்!

பார்க்க வந்தவர்:—ஆமாம், ஆமாம்! எனக்குக் கூட அறையின் வாடகையைக் கேட்டவுடனே என்னை யறியாமல் தூக்கி வாரிப் போட்டது!

இன்பத்தின் எல்லையைக் காணப்போகிறோமென்று எவ்வளவு ஆசையுடன் விஜயாவுடன் சந்திரன் தனிக் குடித்தனம் வைத்தான்! ஆனால் அவன் இப்பொழுது பிரத்தியட்சமாகக் காண்பது துன்பத்தின் எல்லைக் கோட்டையல்லவா? தன்னுடைய வாழ்வு இந்த ஜன்மத்தில் இனி மலரப் போவதேயில்லை என்று திடமான முடிவுக்கு வந்து விட்டான். நோயாளியான மனைவியுடன் மூன்று வருஷகாலம் தள்ளினதே அவனுக்குப் பெரும்பாடாகப் போய் விட்டது. ஜன்மம் முழுவதும் இந்த மனைவியுடன் எப்படிக் காலந் தள்ளுவது? அப்பப்பா! நினைத்தாலே பயமாயிருக்கிறதே!

அன்று ஆபீஸுக்குப் போன ஒரு மணி நேரத்துக் கெல்லாம் சந்திரனுக்கு ஆஸ்பத்திரியிலிருந்து டெலிபோனில் செய்தி வந்தது. விஜயாவின் உடம்பு நிலைமை மிகவும் அபாயகரமான நிலையை அடைந்துவிட்டது. உடனே புறப்பட்டு வரவேண்டும் என்ற செய்தியைக் கேட்டுச் சந்திரன் மிகவும் வேதனையுடன் டெலிபோன் ரிஸீவரை டக்கென்று வைத்தான். அவன் கால்கள் தள்ளாடின.

“மிஸ்டர் சந்திரன், உடனே புறப்பட்டு ஆஸ்பத்திரிக்குப் போங்கள். தாமதிக்க வேண்டாம். மனசைத் திடப்படுத்திக் கொள்ளுங்கள். எது வந்தால்தான் நாம் என்ன செய்ய முடியும்? ஊம், புறப்படுங்கள்!” என்றார் மானேஜர். சந்திரன் யந்திரம் போலத் தன் மேஜை டிராயரைப் பூட்டி விட்டு நகர்ந்தான்.

மூன்று வருஷ காலமாக மனைவிக்கு நோய் வந்து வாட்டி அவனைப் பெரிதும் வேதனைக்குள்ளாக்கி விட்டது ஆஸ்பத்திரியை நோக்கி நடந்த அவன் கால்கள் தாமாகச் சோர்ந்து விட்டன. மனம் எங்கெல்லாமோ அலைபாய்ந்து என்னத்தை யெல்லாமோ நினைத்தது. இன்னும் சில நிமிஷங்களில் அவள் இறந்து விடுவாள். இந்தத் தடவை அவள் பிழைப்பது துர்லபம். அவள் பிழைக்காவிட்டால்தான் என்ன! இன்பம் அனுபவிக்க வேண்டிய இந்த இளம் வயதில் சதா நோயாளியான மனைவியைக் கட்டிக்கொண்டு எத்தனை நாளைக்குத்தான் போராடுவது? துன்பத்திலிருந்து விடுதலை கிடைக்கிறது என்றால் யார்தான் வரவேற்க மாட்டார்கள்? ஐயோ! இதென்ன இன்றைக்கு இப்படி விபரீத எண்ணம் தோன்றுகிறது!

நடந்துகொண்டேயிருந்த அவன் கால்கள் தாமாக நின்றுவிட்டன. ஆஸ்பத்திரிக்குப் போய்த் தன் மனைவியைப் பார்க்கவும் அவனுக்குத் தோன்றவில்லை; போகாமல் இருக்கவும் அவன் மனச்சாட்சி இடந் தரவில்லை. தயங்கித் தயங்கி நடந்து கொண்டே, தன் வசம் இழந்து ஆஸ்பத்திரிக்கு அருகில் சென்றான் சந்திரன். மீண்டும் அவன் மனசில் போராட்டம் எழுந்தது. திரிசங்கு நிலையின் பிரமை பிடித்தவன் மாதிரி நின்று விட்டான்.

கொஞ்ச தூரத்தில் ஒரே கும்பலாக ஜனங்கள் சூழ்ந்துகொண்டிருந்தனர். அங்கே ஒரே சத்தமாகவும் இருந்தது. மனதை அங்கே செலுத்தினான் சந்திரன். ஒரு ரிக்ஷாக்கார வாலிபன் அங்கிருந்த ஆஸ்பத்திரி சிப்பந்தி ஒருவனை நோக்கி, "ஐயா, என் பெண்சாதி பிரசவ வேதனையில் தவித்துக் கொண்டிருந்தாள். சாகும் தறுவாயில் நேற்று இங்கே கொண்டு வந்து போட்டேனய்யா! அவளுக்கு எப்படி யிருக்கிறதென்று தெரியவில்லை. அவள் பெயர் காளியம்மாள். கொஞ்சம் உள்ளே போய் விசாரித்து வந்து அவள் பிழைத்து விட்டாளா இல்லையா, என்பதைச் சொன்னால் உங்களுக்கு ரொம்பப் புண்ணியமுண்டு. ஐயா! இந்த ஏழைக்கு இரங்குங்கய்யா!" என்று கைகூப்பிய வண்ணம் கதறிக் கொண்டிருந்தான்.

அந்தச் சிப்பந்தி அந்த ஏழை வாலிபனைச் சற்றும் லட்சியம் செய்யாமல், "போடா, போ! பெரிய பணக்கார துரை நீ, உன் பெண்சாதியைப் பற்றி விசாரித்து உன்னிடம் சொல்ல வேண்டியது அவசியமோ! பெண்டாட்டி செத்தால் புது மாப்பிள்ளை!" என்று வெடுக்கென்று கூறி விட்டு உள்ளே சென்று விட்டான்.

அந்த ரிக்ஷாக்கார வாலிபன் அங்கு நின்று கொண்டிருந்த சந்திரனிடம் நியாயத்திற்கு வந்தான். "ஐயா, அந்த ஆள் பேசினதைக் கேட்டீங்களா? அவரு மனுசனா! ஏழைங்கன்னா அவங்களுக்குப் பெண்டாட்டிங்க ஆசை கிடையாதா? என்னையே நம்பி, தாய் தகப்பன், கூடப் பிறந்தவங்க, சொந்த ஊர், எல்லாத்தையும் விட்டு விட்டு வந்த நானே கதின்னு நினைக்க இருக்கும் என் பெண்சாதி சாக எனக்கு மனசுவருமா ஐயா? அவ பிழைச்சா ரிக்ஷா இழுத்தாவது அவளைக் காப்பாத்துவேனே! பெண்டாட்டி செத்தா புது மாப்பிள்ளையாம்! மிருகம் மாதிரியில்லே பேசிட்டுப் போறான் அந்த மனுசன்! இவன் பெண்சாதிக்கு வந்தாலல்ல இவனுக்குத் தெரியும்?" என்று என்னென்னவோ கத்தினான்.

சந்திரனுக்கு உடம்பெல்லாம் வியர்த்து விட்டது. அதற்கு மேல் அவனால் அங்கு இருக்க முடியவில்லை. தனக்காக அசரீரி வாக்குப் போலல்லவோ அந்த ஏழை வாலிபன் கதறினான்! படிக்காத ரிக்ஷாக்காரனுக்கு இருக்கும் விவேகம்கூடத் தனக்கு இல்லாமல் போய்விட்டதே யென்று மனம் புழுங்கினான். 'என்னையே நம்பியிருக்கும் விஜயாவை நான் கைவிடுவதா? ஊஹூம், மாட்டேன்! ஒருகாலமும் மாட்டேன். இதே உடம்பு எனக்கு வந்திருந்தால் விஜயா முகம் கோணாமல் எனக்குச் சிசுருஷை செய்வாள்! என்ன பாவமான செயலைச் செய்ய இருந்தேன்! பகவான்தான் அந்த ரிக்ஷாக்கார வாலிபன் மூலம் என்னைக் காப்பாற்றினார்!" என்று எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணிக் கொண்டு ஆஸ்பத்திரியை நோக்கி ஓடினான் சந்திரன். விஜயா பிரக்ஞையற்றுக் கிடந்தாள். சந்திரன் ஒன்றும் தோன்றாமல் நின்றான். மறு நாள்தான் விஜயா கண்ணைத் திறந்தாள். அதுவரை அன்ன ஆகாரமின்றி விஜயாவின் பக்கத்திலேயே இமை கொட்டாமல் உட்கார்ந்திருந்தான் சந்திரன். "விஜயா! என்ன வேண்டும்? இதோ என்னைப் பார்!" என்று ஆதரவாக அவளுடைய மெலிந்த கைகளைப் பிடித்துக் கொண்டு கூறினான். அப்பொழுதும் தன் கணவரின் வார்த்தைகளைக் கேட்ட மாத்திரத்திலேயே பாதி தெம்பு வந்துவிட்டது விஜயாவுக்கு. தன்னையறியாமல் அவள் கண்களில் நீர் பெருகிற்று. "விஜயா! நீ இந்தச் சமயத்தில் உடம்பை அலட்டிக்கொள்ளாதே! நான் இருக்கும்பொழுது நீ ஏன் கவலைப்படுகிறாய்? உன் உடம்பைக் குணமாக்கும் பொறுப்பு என்னைச் சேர்ந்தது. நீ நிம்மதியாகத் தூங்கு!" என்றான். உணர்ச்சி மிகுதியால் அவன் தொண்டை கரகரத்தது.

அவனுடைய மனம் எப்படி மாறிற்று என்பது அவளுக்கு விளங்காத புதிராகவே இருந்தது. நீண்ட நாட்களாக அவளுக்குள் கனிந்து கொண்டிருந்த துக்கமென்னும் சுமையை அவளுடைய கண்ணீர் ஒரு விநாடியில் இறக்கிவிட்டது. குறைப் பிரசவத்தில் கரு சிதைந்து போய்விட்டதால் உடம்பைத் தேற்றிக்கொள்ள விஜயா ஆஸ்பத்திரியில் பதினைந்து நாட்கள் இருக்க வேண்டியதாயிற்று. அவள் ஆஸ்பத்திரியில் இருக்கையில் அவர்களுடைய மூன்றாவது தீபாவளியும் வந்து போயிற்று. "நமக்குக் கலியாணமாகி மூன்று தீபாவளியும் நாம் சந்தோஷ

மாகக் கொண்டாடவே யில்லை!" என்று சொல்லி விஜயா அழுதுக் கொண்டாள். "அடுத்த வருஷம் உன் உடம்பு நன்றாகத் தேறிவிடும். அடுத்த தீபாவளியை நன்றாகக் கொண்டாடுவோம்!" என்று சந்திரன் விஜயாவுக்கு ஆறுதல் கூறினான்.

விஜயா ஆஸ்பத்திரியி லிருந்து வீட்டிற்கு வந்த பிறகு அவள் உடம்பு படிப்படியாகத் தேறி, பலம் பிடிக்க ஆரம்பித்தது. ஆறு மாதத்திற்குள் விஜயாவின் உடம்பு வியக்கத் தக்க முறையில் பழைய தளதளப்பும் ஆரோக்கியமும் உண்டாகிக் கலியாணத்தின் போது இருந்ததை விட அழகாக ஆகிவிட்டாள். இருமல் முதலிய நோய் இருந்த இடம் தெரியாமல் போயிற்று. கலியாணமான புதிதில் இருந்தது போல் அவர்கள் வாழ்வு மலர்ச்சி யடைந்தது. சந்தோஷ சூரியன் உதயமானான். தம்பதிகள் வாழ்க்கை ஒரு இடையூறு மின்றி நடந்து கொண்டிருந்தது.

சிந்தனை கலைந்து விடுபட்டான் சந்திரன். அன்று அவனுடைய பழைய நினைவுகளினால் ஆபீஸ் வேலையில் கவனம் போகவில்லை. விஜயாவுக்கு அவசரமாகத் தபால் எழுதிக் கட்டில் சேர்த்துவிட்டான். அந்தக் கடிதத்தில் ஒரு பகுதி அப்படியே அவன் மனசில் ஒலித்துக் கொண்டிருந்தது: "விஜயா! நீ எழுதிய படி வாஸ்தவமாகவே இதுதான் நம்முடைய தலை தீபாவளி! அதை விமரிசையாக, ஆனந்தமாகக் கொண்டாடுவோம். கிடைத்தற்கரிய மாணிக்கமாகிய உன்னை நான் இழந்து விடாமல் காப்பாற்றிய தெய்வத்திற்கு நம் வணக்கத்தைச் செலுத்தி விட்டு, சந்தோஷத்தோடு தீபாவளியைக் கொண்டாடுவோம். நான் நாளை மறுநாள் அங்கு வருகிறேன். -சந்திரன்."

# படித்துப் பாருங்கள்!

## உதய பானு

"பூதலம் உற்றிடும் வரையும்—அறப்
பேரிறல் யாவும் மறப்புறும் வரையும்
மாதர்கள் கற்புள்ள வரையும்—பாரில்
மறைவரும் கீர்த்திகொள் ரஜபுத்ரவீரர்"

என்று மகாகவி பாரதியார் கூறியுள்ளபடி என்றும் குன்றாத தங்கள் வீரத்தினால் பொன்றாத புகழுடம்பு பெற்றவர்கள் ராஜபுத்திரர்கள். அவர்களுடைய வீரதீரங்களைப் பற்றியும், காதலைப் பற்றியும், அந்தக் காதலுக்காக அவர்கள் செய்த வீரத் தியாகங்களைப் பற்றியும் எண்ணிறந்த கதைகள் வட நாட்டு வரலாறுகள் கூறுகின்றன.

அவற்றுள், உதயபானுவின் வீரமும் தீரமும் பிரசித்தி வாய்ந்தவை. அவன் ஔரங்கசீப்பின் சேனாபதியான நூர் அலி என்பவனைப் புறமுது கிடச் செய்தான் என்பது சரித்திரத்தில் இடம் பெற்றிருக்கிறது. இந்தச் சம்பவத்தையும், ஔரங்கசீப்பின் ஆட்சி ஆட்டங் கண்ட காலத்தில் நிகழ்ந்த இன்னும் சில சம்பவங்களையும் சேர்த்துக் கொண்டு "சாண்டில்யன்" புதியதோர் கதை புனைந்திருக்கிறார். மொகலாயச் சேனாபதி அநீதியாகத் தூக்கிச் சென்ற சகோதரிகளை மீட்பதற்கு உதயபானு பல சாகசச் செயல்களை மேற்கொள்ள வேண்டி வந்தது. மேற்படி சகோதரிகளுக்குள் அழகி அருணா உதயபானுவைக் காதலிக்கிறாள். உதயபானுவுக்கும் அருணாவிடம் காதல் உதயமாகிறது. அந்தக் காதலுக்குப் போட்டி முளைக்கிறது; அதிலிருந்து பொறாமை பிறக்கிறது; பொறாமையிலிருந்து போர் மூள்கிறது. இடை இடையே சதிச் செயல்களுக்கும் குறைவில்லை. கடைசியில் உதயகுமாரன் வெற்றி யடைகிறான். அவன் காதல் வெற்றி பெறுகிறது.

"இளையராணி" என்னும் இரண்டாவது கதையில், இரண்டு பெண்டாட்டிக் காரனான ராஜா ஜெயசிம்மனின் சங்கடமும், அவனது இளைய ராணி கமலா தேவியினால் ராஜ்யத்தில் நிகழ்ந்த விபரீதங்களும், அரசனின் முதல் மனைவியின் புத்திரனான அமரசிம்மனின் வீரமும், அவனிடம் ரஜனி கொண்ட காதலும் மிக அழகாகக் கூறப்பட்டிருக்கின்றன. அமர சிம்மன் தன் சிறிய தாய்க்கும் தகப்பனுக்கும் எதிராக நடத்திய புரட்சிப் போரும் அபலைப் பெண் ரஜனிக்காகச் செய்த வீர சாகசங்களும் விரிவாக இடம் பெற்றிருக்கின்றன. நல்ல விறுவிறுப்போடு செல்லும் இந்த இரண்டு ராஜபுத்திரக் கதைகளும் படிப்பதற்குச் சுவாரஸ்யமா யிருக்கின்றன.

ஆசிரியர்: ஸ்ரீ சாண்டில்யன்; பிரசுரம்: அமுத நிலையம் லிமிடெட், சென்னை-18; விலை: ரூ. 1-10-0

## ஏழை பங்காளன்

புத்தகத்தின் தலைப்பைக் கண்டதும் என்னமோ ஏதோ என்று நினைக்கக் கூடியவர்கள், 'ஏழைபடும் பாடு' என்ற கதைதான் இது என்று சொன்னால், "அப்படியா, அந்தப் புஸ்தகத்தைச் சற்று இப்படிக் கொடுங்கள்" என்று எழுந்து உட்கார்ந்து கேட்பார்கள் என்பதில் ஐயமில்லை.

தமிழர்களை அவ்வளவு தூரம் ஆட்கொண்ட அந்தக் கதையை விக்டர் ஹ்யூகோ என்ற பிரசித்தி பெற்ற பிரெஞ்சு மொழி நாவலாசிரியர் 'லே மிஸரா பிள்' என்ற தலைப்பில் எழுதினார். அவருடைய நாவல்களில் எல்லாம் தலை சிறந்த நாவல் அது என்று உலகம் இன்றும் பாராட்டி வருகிறது. அப்படி உலகப் புகழ் பெற்ற நாவலைத்தான் ஸ்ரீ எம். எஸ். சபரிராஜன் சுருக்கித் தமிழில் மொழி பெயர்த்திருக்கிறார். அவருடைய மொழி பெயர்ப்பைப் பற்றி ஒரே ஒரு வார்த்தை. புஸ்தகத்தைப் படிக்கும்போது விக்டர் ஹ்யூகோ எப்பொழுது தமிழில் இந்தக் கதையை எழுதினார் என்ற சந்தேகம் எழுகிறது.

பிரசுரம்: நவயுகப் பிரசுராலயம், 135, பவழக்காரத் தெரு, சென்னை; விலை: ரூ. 1—12—0.

## ஸ்ரீ தேவி ஸ்தோத்திரங்கள்

அன்னை பராசக்தியின் லீலா விபூதிகள் கணக்கில் அடங்காதவை. தேவியின் அனந்த கல்யாண குணங்களையும் அழகாக எடுத்துக் கூறும் ஸ்தோத்திரங்கள் இந்நூலில் அடங்கி யிருக்கின்றன. நாகர எழுத்தில் மூல ஸ்லோகங்களும், பிறகு பதவுரையும், விரிவுரையும் சேர்ந்து தேவி மஹாத்மியத்தை நன்கு அறிந்து கொள்ளப் பெரிதும் உதவியா யிருக்கிறது.

ஆக்கியவர்: வாதூல வே. ராமச்சந்திர சர்மா: பிரசுரம்: B. S. & F. Mart, 113, Armenian Street, G. T, Madras. விலை: ரூ. 1-4-0.



# வரப்பிரசாதி

**பி. எஸ். மணி**

ஸ்ரீனுவாசய்யர் மத்திய சர்க்காரில் பெரிய உத்தியோகமொன்றில் இருந்தார். புது டெல்லியில் அவருக்குச் சொந்தமாகப் பெரிய பங்களா இருந்தது. கூப்பிட்டவுடன் அவர் இட்ட கட்டளையை நிறைவேற்ற நாலைந்து வேலைக்காரர்கள் இருந்தார்கள். பெரிய உத்தியோகமும், நிறைந்த செல்வமும், சகல வசதிகளுமிருந்தும் அவர் நிம்மதியில்லாமலிருந்தார். அதற்குக் காரணம் நகர வாழ்வும், அயலிடமும், படாடோப வாழ்க்கையும் அவருக்குச் சிறிதும் ஒத்துக் கொள்ளாததுதான். அவர் நிம்மதியும் எளிமையும் நிறைந்த கிராம வாழ்வையே விரும்பினார்.

அவர் பிறந்த ஊரை விட்டு வந்து இருபத்தைந்து வருஷங்களுக்கு மேலாகி விட்டது. அவர் சொந்த ஊருக்குப் புறப்பட வேண்டும் என்று திட்டமிடும் போதெல்லாம் ஏதாவது வேலை குறுக்கிட்டுப் போக முடியாமல் ஆகி விடும். காரியாலய வேலையை மீறிச் செல்ல முடியாமல் திணறுவார். இப்படியே பல வருஷங்கள் பல தடங்கல்களினால் சொந்த ஊரைப் போய்ப் பார்க்க முடியாதது ரிடயரானதும் தன் பிறந்த ஊரிலேயே போய்க் குடியேறி விட வேண்டும் என்பதற்கு அடிகோலியது. அதற்காகத் தம் பிறந்த ஊரில் ஒரு அழகிய பங்களா கட்டுவதற்கு ஏற்பாடு செய்தார். அந்தப் பங்களா கட்டி முடிந்து விட்டதாகத் தகவல் வந்ததிலிருந்து அவர் மனம் பெரிதும் நிம்மதியில்லாமல் தவிக்கத் தொடங்கியது. பிறந்த ஊரின் மண்ணை என்றைக்கு மிதிக்கப் போகிறோம் என்கிற சிந்தனையிலேயே அவர் நாட்களை விரல் விட்டு எண்ணிக் கொண்டிருந்தார்.

அந்த நாளும் வந்தது. ரிடயரானதும் அவர் தன் சொந்தக் கிராமத்தில் குடியேறினார். பிறந்த ஊரில் அவர் காலடி எடுத்து வைத்தபோது ஊரில் எங்கும் பலத்த மாறுதல்கள் தென்பட்டன.

இருபத்தைந்து வருஷங்களுக்குள் அக் கிராமத்தில்தான் எத்தகைய மாறுதல்! ஐம்பது பெரிய வீடுகளும், முந்நூறு சிறு வீடுகளும் அழகழகாக அமைந்திருந்த கிராமத்தில் இப்போது ஒன்றிரண்டு பெரிய வீடுகளும், பத்து சிறிய வீடுகளுமே காட்சி யளித்தன. அவைகளும் சிதிலமாகிப் பல இடங்களில் இடிந்து பெயர்ந்து காணப்பட்டன. மற்றவைகளெல்லாம் கவனிப்பாரற்றுப் போய் மழையிலும் காற்றிலும் தரை மட்டமாகி, அவற்றில் புல்லும், கத்தாழைகளும், காட்டுச் செடிகளும் படர்ந்து பயங்கரமாகக் காட்சியளித்தன. விவசாயத்திலேயே உழன்ற மக்கள் மழையின்மையால் நகரத்தை நோக்கி வேலை தேடிச் சென்று விட்டனர் போலும்!

கிராமம் இடிந்து பாழடைந்தது தவிர அக் கிராமத்தில் எஞ்சியுள்ளவர்களில் பலர் அவருக்குத் தெரியாதவர்களாகவே இருந்தார்கள். அப்படித் தெரிந்தவர்கள் ஒன்றிரண்டு பேர்கள் இருந்தாலும் அவர்கள் இவர் வகித்த பெரும் பதவியைக் கருதி அருகில் நெருங்குவதற்குக் கூசினார்கள்.

முதலில் ஸ்ரீனுவாசய்யருக்குப் புது வீட்டில் செடிகள் வைப்பதிலும் வீட்டை அலங்காரப் படுத்துவதிலும் பொழுது போய்க் கொண்டிருந்தது. ஆனால் வரவரத் தனிமை என்னும் நோய் வாட்டி வதைக்க ஆரம்பித்தது. அதனால் அவருக்கு வடநாட்டை விட்டு ஏன் புறப்பட்டு வந்தோம் என்ற எண்ணங்கூட எழுந்தது. திரும்பவும் கிராமத்தை விட்டுப் போய்விடலாமா என்று கூடத் தோன்றியது.

* * *

ஒரு நாள் ஸ்ரீனுவாசய்யர் மாலையில் காலார நடந்து வரப் புறப்பட்டார். ஆற்றங்கரைக்கு அருகில் வந்ததும் அவர் அப்படியே திகைத்து நின்று விட்டார்.

ஆம்! அந்தக் கிராமத்தில் சிறிதும் மாறுதல் அடையாமல் இருந்தது, அவர் சின்னஞ் சிறு வயதில் துள்ளிக் குதித்து விளையாடிய இடந்தான். அரச மரத்தடிப் பிள்ளையார் அன்று பார்த்தது போலவே இன்றும் எவ்வித மாறுதலுமின்றி இருந்தார்.

திடீரென்று அவருக்கு அந்த அரசமரத்தில் தாம் விளையாட்டாகச் செதுக்கி வைத்த பெயர் இருக்கிறதா என்று பார்க்கத் தோன்றியது. உடனே அவர் தம் முதுமைப் பருவத்தையும் மறந்து துள்ளி யெழுந்து அரச மரத்தின் அருகில் சென்றார். அவர் பால்ய வயதில் விளையாட்டாகச் செதுக்கிய "ஸ்ரீனு" என்ற எழுத்துக்கள் அப்படியே இருந்தன. அதைக் கண்டதும் அவர் அடைந்த ஆனந்

தத்துக்கு அளவில்லை. அப்படியே மெய் மறந்து போய் நின்றார் அவர். கடந்த கால நிகழ்ச்சிகள் கனவில் நிகழும் காட்சிபோல் தொடர்ச்சியாக நிகழத் தொடங்கின.

நாற்பது வருஷங்களுக்கு முன் சீனு தன் தகப்பனாரை இழந்து தாயினால் பராமரிக்கப்பட்டு வந்தான். அவன் தாய் அவனைக் கண்ணின் மணியெனப் பாதுகாத்தாள். ஏழைக் குடும்பத்தில் பிறந்த சீனு ஒரு கஷ்டமுமின்றி இருக்க வேண்டுமே என்பதற்காக அவன் தாயார் பல வீடுகளில் உழைத்துப் பாடுபட்டு அவனை முன்னுக்குக் கொண்டு வர முயன்றாள். சீனுவும் தன் நிலையறிந்து அக்கறையுடன் படித்து வந்தான். அவன் தாயார் அடிக்கடி அவனிடம், "அப்பா, சீனு! நீ நன்றாக வாசிக்க வேணும். அரச மரத்தடிப் பிள்ளையார் வரப் பிரசாதி. அவர் மீது நம்பிக்கை வைத்துத் தவறாது வணங்கி வா. அவர் உனக்குக் கட்டாயம் நல்ல நிலைமையை அளிப்பார்!" என்று கூறுவாள். சீனுவும் தன் தாய் சொல்லில் நம்பிக்கை வைத்துப் படித்து வந்தான். அந்த நம்பிக்கை அவனுக்கு ஊக்கமும் உற்சாகமும் அளித்தது. அந்த உற்சாகத்தில் அவன் படிப்படியாக முன்னேறி எம். ஏ., பரீக்ஷையும் மாகாணத்திலேயே முதன்மையாகத் தேறினான். தேறினவுடனே அவனுக்குப் புதுடெல்லி சர்க்கார் காரியாலயத்தில் வேலையும் கிடைத்து விட்டது. பரீக்ஷையில் முதல்மையாக வெற்றியடைந்ததையும், வேலை கிடைத்து விட்டதையும் கண்டு அவன் சந்தோஷமடைய முடியவில்லை. அவன் மகிழ்ச்சியடைய முடியாதபடி, அவன் சந்தோஷத்தில் பங்கு பெறுதபடி அவன் தாயாரைக் காலன் பிரித்து விட்டான்.

மிகுந்த வேதனையோடு தான் சீனு தன் உத்தியோகத்தை ஒப்புக் கொண்டான். தாயாரைப் பிரிந்த பிறகு, தனக்காக அல்லும் பகலும் அனவரதமும் அல்லல்பட்ட தன் அன்னையை இழந்தபிறகு, வாழ்க்கை அவனுக்குச் சிறிதும் இன்ப மளிக்கவில்லை. வேப்பங்காயாகத்தான் கசந்தது. தன் வாழ்நாள் முழுவதும் பிரம்மச்சாரியாகவே கழித்து விடுவது என்று முடிவு செய்து விட்டான் சீனு. அவன் முடிவு வெறும் எண்ணத்தோடு நிற்கவில்லை; காரியத்திலும் நிறைவேறியது.

காலதேவனின் ஏட்டில் பல வருஷங்கள் புரண்டன. வேலையில் சீனுவாசய்யருக்குப் பதவி உயர்ந்து கொண்டே போயிற்று. அதைக் கண்டு அவர் சிறிதளவாவது கர்வமோ, பெரு மகிழ்ச்சியோ அடையவில்லை. அதற்குப் பதிலாக அவர் துன்பத்தையும் இன்பத்தையும், சந்தோஷத்தையும் துக்கத்தையும் ஒரே மாதிரி கருதும் ஞானியைப் போலாகி விட்டார்.

கடந்த கால நினைவுகளில் ஒன்றிப் போன சீனுவாசய்யர் நேரம் போவதே தெரியாமல் அரச மரத்தடியில் உட்கார்ந்திருந்தார். அவர் உள்ளம், "பிள்ளையாரே! உம் மீது நம்பிக்கை வைத்து என் படிப்பைத் தொடர்ந்தேன். என் நிலை உயர வேண்டும் என்று பாடுபட்



டேன். உம்முடைய அருளினால் என் நிலை உயர்ந்து விட்டது. இன்று தனிமை என்னும் நோயினால் தவிக்கிறேன். அதையும் நிவர்த்தி செய்ய வேண்டும்'' என்று அரச மரத்தடிப் பிள்ளையாரை வேண்டிக் கொண்டது.

மாலைக் கதிரவன் மங்கும் சமயத்தில் நாலைந்து சிறுவர்கள் பிள்ளையாருக்கு முன்னால் வந்து நின்றார்கள்.

அச்சிறுவர்களில் சிறியவன் கன்னத்தில் போட்டுக் கொண்டு, ''சுவாமி, பகவானே! உன்னைக் கிராமத்தில் வரப்பிரசாதி என்று சொல்கிறார்கள். நாங்கள் தினம் கிட்டிப்புள் ஆடுகிறோம். அது அலுத்து விட்டது. பட்டணத்திலுள்ள பிள்ளைகளைப்போல் பந்து விளையாட ஆசைப்படுகிறோம். ஏழையான எங்களுக்கு அதை வாங்க முடியவில்லை. நீ எப்படியாவது எங்கள் ஆசையை நிவர்த்தி செய்ய மாட்டாயா?'' என்றான்.

"போடா! கல்லுப் பிள்ளையார் கண்ணைத் திறப்பாரா? நீ வேண்டினால் உடனே பந்து கொடுத்து விடுவாரா?'' என்று கேலியாகக் கூறிச் சிரித்தான் சிறுவர்களில் பெரியவன்.

"ஏன் கொடுக்க மாட்டார்? கடவுளிடம் நம்பிக்கை வைத்தால் ஆகாதது ஒன்றுமில்லை என்று எங்கள் பாட்டி சொல்லியிருக்கிறாளே? பெரியவர்கள் பொய் சொல்லுவார்களா?'' என்றான் சிறிய பையன்.

அச்சிறுவர்கள் தர்க்கம் செய்து கொண்டே வீடு நோக்கிச் சென்றனர். சீனுவாசய்யரும் அந்தப் பச்சிளம் பாலகர்கள் போவதையே சிறிது நேரம் கண் கொட்டாது பார்த்திருந்து விட்டுப் பின் எழுந்து தம் இல்லத்தை நோக்கி நடந்தார். அவர் கால்கள்தான் நடந்து கொண்டிருந்தன. ஆனால் அவர் மனம் மட்டும் பிரிந்து சென்று அந்த விளையாட்டுச் சிறுவர்களின் பேச்சிலேயே லயித்து நின்றது. அவர்கள் விளையாடுவதற்குப் பந்து இல்லையே என்று ஏக்கத்துடன் பிள்ளையாரின் சன்னதியில் பேசிக்கொண்டது அவருடைய நிராத ஏக்கத்தையும் ஓரளவு மீறி எதிரொலி யிட்டது. அவர் உள்ளத்தில் ஏதோ எண்ணம் எழுந்து அதை நிறைவேற்ற வேண்டும் என்று முடிவு செய்தது.



"நான் ஒன்று உங்களைக் கேட்பேன் இல்லை என்று சொல்லமாட்டீர்களே?''

"போடி பைத்தியக்காரி! உனக்கு இல்லை என்று சொல்லாமல் வேறு யாருக்கு நான் இல்லை என்று சொல்லப் போகிறேன்! பேஷாய்க் கேளு!''

அடுத்த நாள் மாலை. நாலைந்து சிறுவர்கள் சேர்ந்து அரச மரத்தடிப் பிள்ளையாருக் கருகிலிருந்த மைதானத்தில் கிட்டிப்புள் ஆடிக் கொண்டிருந்தனர். அச்சமயத்தில் தான் சீனுவாசய்யர் கையில் பந்துடன் வந்து சேர்ந்தார். சிறுவர்கள் அவர் வருவதைக் கண்டதும் கிட்டிப்புள் ஆடுவதை நிறுத்தி விட்டு அவரையே திகைத்து நோக்கினர்.

சீனுவாசய்யர் அவர்களுக்கு அருகில் வந்து, "இந்தாருங்கள்! நீங்கள் விரும்பிய பந்து. இனி நீங்கள் கவலைப்பட மாட்டீர்கள் அல்லவா?'' என்றார் சிரித்துக் கொண்டே.

சிறுவர்கள் பந்தைக் கண்டதும் அப்படியே ஆச்சரியக் கடலில் மூழ்கிப் போய் வியப்புற்று நின்றனர்.

''பார்த்தாயா? அரச மரத்தடிப் பிள்ளையார் நம் ஆசையை நிறைவேற்றி விட்டார். நாம் விரும்பிய பந்தைக் கொடுத்து விட்டார்'' என்று கூறிக் குதித்தான் சிறுவர்களில் சிறியவன்.

"அரச மரத்தடிப் பிள்ளையார் ஒன்றும் கொடுக்கவில்லை. இந்த மாமாதான் நமக்குப் பந்து கொடுத்திருக்கிறார்'' என்றான் சிறுவர்களில் பெரியவன் இடைமறித்து.

"இல்லை, இல்லை! அரசமரத்தடிப் பிள்ளையார்தான் உங்கள் ஆசையை நிறைவேற்றியிருக்கிறார். என் ஆவலையும் பூர்த்தி செய்திருக்கிறார். நான் தனிமை நோயினால் தவிப்பதை நிவர்த்தி செய்து எனக்கு நண்பர்கள் கிடைக்கும்படி செய்து விட்டார்'' என்று சீனுவாசய்யர் கூறி அவர்களைச் சமாதானப் படுத்தினார்.

இப்பொழுது இளைஞர் புட்பால் சங்கத்தின் தலைவர் சீனுவாசய்யர்தான். இப்பொழுதெல்லாம் நாள் முழுதும் அவர் வீட்டில் பையன்களின் கேலிச் சிரிப்பும் அட்டகாசமும் கேட்டுக்கொண்டே யிருக்கும். அச்சிறுவர்களின் ஆனந்தத்திலும் மகிழ்ச்சியிலும் அவரும் கலந்து கொள்வார். அந்தக் கிராமத்தை விட்டே போய்விட வேண்டும் என்ற எண்ணம் இப்பொழுது அவரிடமிருந்து விடை பெற்றுக்கொண்டு விட்டது. தனிமை என்னும் நோய் அவரிடமிருந்து விடுதலை பெற்றுச் சென்று விட்டது.

## உலகெங்கும், வெற்றிபெற்ற மனிதர்கள்

# ஜில்லெட்

## உபயோகிக்கிறார்கள்...



சிறந்த பொருள் வாங்கினால்தான் சிறந்த பலனைப்பெறலாம் என்பது வெற்றிபெற்ற மனிதர்களுக்குத் தெரியும். அதனாலேயே மிக மிருதுவானதும், நேர்த்தியானதுமான க்ஷவரத்திற்கு மிகவும் கூராகத் தீட்டப்பட்ட ப்ளு ஜில்லெட் பிளேடுகளை அவர்கள் தேர்ந்தெடுக்கிறார்கள். இந்த பிளேடுகள் மிகவும் கூராயிருப்பதோடு நல்ல உறுதியாயிருக்கின்றன. பல நேர்த்தியான க்ஷவரங்களை அளித்து நீண்ட காலம் உழைக்கின்றன. அதனால் உலகத்திலேயே சிறந்த சுகபோக க்ஷவரத்தை குறைந்த செலவில் யாவரும் பெற முடிகிறது.



**சிறந்தவைகளுக்கிடையே மிகச் சிறந்ததைப் பெறுங்கள்—**

அதற்காக தயாரிக்கப்பட்ட ரேசரையும் பிளேடையும் தான் எப்பொழுதும் உபயோகிக்க வேண்டும். ப்ளு ஜில்லெட் ரேசரும் ஒன்றோடொன்று ஒத்துழைத்து உங்களுக்கு மிக நேர்த்தியான க்ஷவரத்தை அளிப்பதற்காகவே செய்யப்பட்டுள்ளன.

ஜில்லெட் ரேசர் செட் ரூ. 1-8-0 இருந்து

# ப்ளு ஜில்லெட் பிளேடுகள்

**5 பிளேடுகளுக்கு அணா 14**

# இந்தியக் குடும்பங்களின் இருமல் நிவாரணி




இந்தியாவில் லக்ஷக்கணக்கான மக்கள் 'ஸிரோலின்' ரோஷ் உபயோகிப்பதற்குக் காரணம் என்னவெனில்:

ஸிரோலின் இருமல்களை துரிதமாக சமனப்படுத்துகிறது

ஸிரோலின் குறைந்த நேரத்தில் இருமல்களை நிறுத்துகிறது

ஸிரோலின் இனிய ருசியுள்ளது

ஸிரோலின் குழந்தைகளுக்கும் பயமின்றி கொடுக்கலாம்–
அதில் ஹானி தரும் வஸ்துக்கள் யாதொன்றும் இல்லை

## உங்கள் வீட்டில் ஒரு பாட்டில் 'ஸிரோலின்' வைத்திருங்கள்

பரிசுக் கதை




கென்னத் கிரேன்வில் மயர் (பிரிட்டன்)

மொழி பெயர்ப்பு: வாஞ்சி

விமான கூடத்தில் வைக்கப்பட்டிருந்த கூண்டுக்குள் கம்பீரமாக நின்று கொண்டிருந்த புலியை, காப்டன் மார்ட்டின் புல்லர் உற்றுப் பார்த்தார். அதுவும் பதிலுக்கு அவரை வெறிக்கப் பார்த்தது. அதன் பார்வை புல்லரை என்னவோ செய்தது. இருவரும் ஒருவரை ஒருவர் வெறுக்கின்றனர் என்பது அவர்களுடைய பார்வையிலிருந்து சந்தேகமின்றித் தெரிந்தது!

வெளியே வெய்யில் தாங்க முடியவில்லை. எனவே புல்லரின் உடைகள் வியர்வையால் நனைந்திருந்தன. அவரது முகத்திலிருந்து வியர்வை வழிந்து கொண்டிருந்தது.

ஆனால் கூண்டுக்குள் இருந்தபுலி வெய்யிலைச் சிறிதும் லட்சியம் செய்யவில்லை. அது சுறுசுறுப்பாகவே காணப்பட்டது. வெளியே பாய்வதற்குச் சந்தர்ப்பம் எப்போது கிடைக்கும் என்பதை, அது ஒரு நிமிஷம் கூடக் கண் கொட்டாமல் கவனமாக எதிர் பார்த்துக் கொண்டிருப்பது போல் தோன்றியது. தனக்கும் புலிக்கும் இடையே எஃகுக் கம்பிகள் தடையாக இருப்பது நல்ல காலம்தான் என்று எண்ணினார் புல்லர்!

ஐரோப்பாவில் உள்ள மிருகக் காட்சி சாலைகளுக்காகச் சிறுத்தைகள், ஹிமயமலைக் கரடி, ஒரு பெரிய வேங்கைப் புலி, இரண்டு கழுதைப் புலிகள், மயில் கோழிகள், நரி வகைகள், செந்நாய்கள், குரங்குகள், பட்சி வகைகள் முதலியவை கல்கத்தாவிலிருந்து இங்கிலாந்துக்கு விமானத்தின் மூலம் அனுப்பப்பட்டிருந்தன.

பெட்ரோல் ஊற்றிக் கொள்வதற்காக விமானம் கராச்சியில் இறங்கியபோது மேற்படி மிருகங்கள், பட்சிகளுக்கெல்லாம் உணவு அளித்தனர். அப்போதுதான் புல்லர் புலியை நிதானமாகக் கவனித்தார்.

சிலிகுரிக்கு வட கிழக்கே உள்ள காட்டிலிருந்து இரண்டு வாரங்களுக்கு முன்தான் பத்து அடிக்கு மேல் நீளமுள்ள அந்தப் புலி பிடிக்கப்பட்டது. எனவே, அதன் மூர்க்கத்தனம் யாரையும் கதிகலங்க வைப்பதாக இருந்தது. அதன் உடல் பள பளவென்று மின்னியது. புலியின் மேலேயுள்ள கருப்பு வரிக்கோடுகள் அசாதாரணமாக அடி வயிறு வரையில் சென்றிருந்தன.

காப்டன் புல்லர் இரண்டாவது விமானியான ஸ்மூவைக் கூப்பிட்டு, "இந்தப் புலியின் பார்வை பயங்கரமாக இருக்கிறது. இது மற்றப் புலிகளைப்போல் இருக்கவில்லை. சாதாரணமாகப் புலிகளும் சரி, மற்ற மிருகங்களும் சரி முதல் தடவையாக லாரியையும் விமானத்தையும் கண்டு பயப்படுவது வழக்கம். ஆனால் இந்தப் புலியோ எதையும் லட்சியம் செய்யாமல் அமைதியாக இருக்கிறது. இத்தகைய மிருகங்களை நம்பவே கூடாது. மனிதனின் தந்திரங்களையெல்லாம் நன்கு அறிந்த மிருகங்கள்தான் இப்படி இருக்கும்" என்றார்.

"இதைத் தூண்டி விட்டுப் பார்க்கட்டுமா?" என்று கேட்டார் ஸ்மூவ்.

உடனே அவர் அப்பால் கிடந்த சிறிய சிமெண்டுப் பாறை ஒன்றை எடுத்துக் கூண்டுக்குள் வீசி எறிந்தார்.

அவ்வளவுதான்! அமைதியாக நின்று கொண்டிருந்த அந்தப் புலி மின்னல் வேகத்தில் பாய்ந்து அந்தப் பாறையைக் கவ்விக் கொண்டது. பிறகு அதைக் கீழே போட்டு விட்டது. அப்போது அது செய்த அட்டகாசத்தில் கூண்டு அதிர்ந்து ஆடியது.

"பார்த்தீர்களா? இதன் மூர்க்கத்தனம் இப்போது தெரிகிறது அல்லவா?" என்று கேட்டார் புல்லர் ஸ்மூவைப் பார்த்து.

* * *

விமானம் புறப்படுவதற்குத் தயாராகியது. மிருகங்களை மீண்டும் விமானத்தில் ஏற்றுவதற்காக வந்த லாரிகள் திரும்பிச் சென்று கொண்டிருந்தன.

காப்டன் புல்லர், விமானி, ரேடியோ நிபுணர் முதலிய அதிகாரிகள் விமானத்தில் ஏறிக் கொண்டார்கள்.

விமானம் யாதொரு இடையூறுமின்றிப் பாஸ்ரா வரையில் சென்றது. அது கராச்சியிலிருந்து ஆறு மணி நேரத்தில் பாஸ்ராவுக்குச் சென்றுவிட்டது.

பாஸ்ராவில் விமானம் இறங்கியபோது, காப்டன் புல்லர் மிருகங்கள் அடைக்கப்பட்டிருக்கும் கூண்டுகள் எல்லாம் சரியாக இருக்கின்றனவா என்று பரிசோதித்துப் பார்த்தார்.

புலி அடைக்கப்பட்டிருக்கும் கூண்டையும் உற்றுப் பார்த்தார். அந்தக் கூண்டுதான் அடியில் வைக்கப்பட்டிருந்தது. அதற்கு மேல் புறத்திலும் பக்கங்களிலும் மற்றச் சிறிய கூண்டுகள் வைக்கப்பட்டிருந்தன.

கூண்டுக்குள் படுத்துக் கொண்டிருந்த புலி புல்லரைக் கண்டதும் வாயைத் திறந்து கொட்டாவி விட்டது. அதன் பெரிய வாயும் கோரமான பற்களும் தைரியசாலியான புல்லரைக் கூடக் குலை நடுங்கச் செய்தன.

எப்போதும் போல் அன்றிரவும் விமானம் பாஸ்ராவில் தங்கியது; மறுநாள் காலையில் அங்கிருந்து கெய்ரோவுக்குப் புறப்பட்டது.

விமானம் நைல் பள்ளத்தாக்கிற்கு மேலே சென்று கொண்டிருந்த போது, வில்சன் கீழே பார்த்தார். நெடுந்தூரம் பசுமை நிறக் கடல் போல் தோன்றிய வயல்கள் கண் கொள்ளாக் காட்சியாக இருந்தன.



அங்கிருந்து வில்சனும் மற்றவர்களும் எதிரே வெகு தூரத்திலிருந்த பாலைவனப் பிரதேசத்தைப் பார்த்தபோது, அவர்களுடைய மனம் கலங்கியது. பாலைவனத்திலிருந்து ஆயிரக் கணக்கான அடி உயரத்துக்கு மேலே கிளம்பிய மணல் புழுதி மேக மண்டலங்களைப் போல் தோன்றியது. அதிலிருந்து, ஒரு பயங்கரமான புயல் தங்களை எதிர்நோக்கி வருகிறது என்பதை அவர்கள் தெரிந்துகொண்டனர்.

"இந்தப் புயலில் சிக்காமல் நாம் சுற்று வழியாகச் செல்லுவது நல்லதல்லவா?" என்று கேட்டார் ஸ்மைல்.

"எனக்கு நம்பிக்கையில்லை. மத்திய தரைக் கடல் பிரதேசத்தைச் சுற்றி நெடுகிலும் புயல் அடிப்பதாகச் செய்தி வந்து கொண்டிருக்கிறதே!" என்று கலக்கத்துடன் கூறினார் வில்சன்.

"அப்படியானால் நாம் நேராகக் கெய்ரோவுக்குப் போவதைத் தவிர வேறு ஒரு வழியும் இல்லையென்று தோன்றுகிறது."

இவ்விதம் காப்டன் புல்லர் கூறியதுதான் தாமதம், விமானம் புயலில் பயங்கரமாகச் சுழலத் தொடங்கியது.

அதனால், மிருகங்கள் வைக்கப் பட்டிருந்த கூண்டுகளைச் சேர்த்துக் கட்டியிருந்த கயிறுகள் அறுந்துவிட்டன. எனவே கூண்டுகள் ஒன்றோடொன்று மோதிக் கொண்டன.

இச்சந்தர்ப்பத்தில் விமானம் செங்குத்தாகத் தரையை நோக்கி விழத் தொடங்கியது. அது அவ்விதம் நூறு கெஜ தூரம் விழுந்த பிறகு தான் விமானி அதைச் சமாளித்து மீண்டும் உயரே கொண்டு போக முடிந்தது.

மேற்கூறிய விதம் விமானம் இரண்டு மூன்று தடவை விழுந்ததால் கூண்டுகள் அலங்கோலமாகி விட்டன. ஒன்றுக்கொன்று பலமாக மோதிக் கொண்டதால், சில கூண்டுகளின் கதவுகளும் திறந்து கொண்டன.

உடனே புல்லர் திகில் கொண்டு புலிக் கூண்டைப் பார்த்தபோது அது கண்ணுக்குத் தெரியவில்லை. புலிக் கூண்டின் மீது மற்றக் கூண்டுகள் விழுந்து அதை மறைத்துக் கொண்டிருந்ததே அதற்குக் காரணம்.

இதனால் காப்டன் புல்லருக்கு மேலும் திகில் அதிகமாயிற்று.

இறுதியில் அவர்கள் எதிர்பார்த்த சம்பவம் நிகழ்ந்தது. அதாவது திடீரென்று விமானம் அதிரும்படியாக ஒரு கர்ஜனை கேட்டது. அடுத்த விநாடியில் கூண்டுகள் எல்லாம் சிதறி விழுந்தன. அப்போது உண்டான இடைவெளி வழியாகப் புலி தலையை நீட்டிப் பார்த்தது.

அவ்வளவுதான்! விமானத்தில் இருந்த யாவரும் நடுநடுங்கி விட்டனர். புயலின் வாயிலிருந்து தப்பினாலும், புலியின் வாயிலிருந்து எவ்விதம் தப்புவது என்று அவர்கள் கதிகலங்கி விட்டனர்.

இந்தச் சமயத்தில் திடீரென்று புயல் அடங்கியது. மணல் மாரி நின்றது. மேகங்கள் சிதறிக் கலைந்தன. சூரிய வெளிச்சம் விமானத்தை ஊடுருவியது.

"இப்போது நம்மிடம் ஒரு துப்பாக்கியிருந்தால்...? விமானத்தில் துப்பாக்கி எடுத்துச் செல்லக் கூடாது என்று சர்வதேசச் சட்டம் இருக்கிறதே, அந்தச் சட்டத்தைத் தயாரித்தவர்கள் இப்போது இங்கிருந்தால் அவர்களை என்ன செய்வேன், தெரியுமா?"



இவ்விதம் கூறி, ஸ்மைல் நறநறவென்று பல்லைக் கடித்தார். எல்லோர் முகத்திலும் வர்ணிக்க முடியாத பீதி தாண்டவமாடியது.

புலி தன்னைச் சுற்றிக் கண்ணோட்டத்தைச் செலுத்தியது. அவ்வமயம் திறக்கப்பட்டிருந்த ஒரு கூண்டில் இருந்த குரங்கு, புலியைக் கண்டு பயந்து வீறிட்டுக் கத்தியது. அடுத்த க்ஷணமே புலி அதைக் கடித்து உதறிவிட்டது.

இதைக் கண்டு எல்லோரும் நடுங்கினர். இனி எந்த வினாடியிலும் புலி அவர்கள் மீது பாயலாம். அவ்வாறு பாய்ந்தால் விமானம் பாதாளத்தில் விழுந்து புலி உள்பட எல்லோரும் அதோகதியாக வேண்டியதுதான்.

காப்டன் புல்லர் விமானத்தில் இருந்த ஒரே ஆயுதமான கோடரியைக் கையில் எடுத்துக் கொண்டார். புலி அவரையே வெறிக்கப் பார்த்துக் கொண்டிருந்தது.

புலி குரங்கைக் கடித்துக் கொன்றதால் பெருகிய உதிரத்தை மோப்பம் பிடித்த மிருகங்களும், கரடியும் கூண்டுகளுக்குள் இருந்து கொண்டே, அங்குமிங்கும் பாய்ந்து அட்டகாசம் செய்தன.

புலி பாயும்போது தன் கையில் உள்ள கோடரியால் அதன் கழுத்தை ஒரே வெட்டாக வெட்டினாலன்றி, தங்கள் எல்லாருடைய உயிருக்கும் ஆபத்துதான் என்பதைப் புல்லர் உணர்ந்தார்.

புலி காயத்துடன் தப்பிவிட்டால், அது செய்யும் ஆர்ப்பாட்டத்தில் விமானம் கீழே விழுந்து நொறுங்கி விடும்.

உடனே அவர், "விமானத்தைச் செங்குத்தாக உயரே விட்டுச் செல்லுங்கள்" என்று விமானியிடம் கூறினார். விமானியும் அவ்விதமே விமானத்தை மேலும் மேலும் உயரே கொண்டு போனார்.

விமானம் உயரே சென்று கொண்டேயிருந்ததால் பட்சிகள் வைக்கப் பட்டிருந்த கூண்டு நகர்ந்து நகர்ந்து புலியின் மூக்குக்கு அருகில் வந்தது. புல்லர் கையிலிருந்த கோடரியால் அதை அடித்ததில், அது புலியின் முகத்தில் படீரென்று மோதியது.

அதனால் ஆத்திரமடைந்த புலி பயங்கரமாக உறுமியது. அது தன் முன்னங்கால்களால் அந்தக் கூண்டின் உச்சியில் அடித்ததில் மேற்படி கூண்டு நொறுங்கி விட்டது. அதிலிருந்த பட்சிகள் புலியின் கால்களுக்கும் வாய்க்கும் இரையாயின.

இதற்குள் மற்றொரு கூண்டு புலிக்கு எதிரே விழுந்ததால் புலி புல்லரைச் சரியாகப் பார்க்க முடியவில்லை.

புல்லரின் மூளை வெகு தீவிரமாக வேலை செய்து கொண்டிருந்தது.

"நாம் இப்போது எங்கு இருக்கிறோம்?" என்று அவர் விமானியைக் கேட்டார்.

"பதினெட்டாயிரம் அடி உயரத்தில் இருக்கிறோம். இங்கிருந்து கெய்ரோ இன்னும் ஐம்பது மைல் தூரம் இருக்கிறது. மேலும் உயரே விமானத்தை விடுவதற்கில்லை. கீழே இறக்கட்டுமா?" என்றார் விமானி.

"வேண்டாம், வேண்டாம்! நான் சொல்லும் வரையில் அதன் காற்றாடி வானத்தை நோக்கிய வண்ணமே இருக்க வேண்டும்" என்று அலறினார் புல்லர்.

அந்த ஆபத்தைச் சமாளிப்பதற்கு புல்லரின் மனத்தில் ஏதோ திட்டம் உருவாகியிருக்கிறது என்று எண்ணிய விமானி, அவரது கட்டளைக்கு இணங்க விமானத்தை மேலும் மேலும் உயரே செலுத்தினார்.

இதற்குள் புலி கூண்டைத் தள்ளிக்கொண்டு மறுபடியும் புல்லருக்கு நேர் எதிராக வந்து ஆக்ரோஷத்துடன் நின்றது.

* * *

அந்த நெருக்கடியான சமயத்தில் புல்லரின் நம்பிக்கையும் திட்டமும் நிறைவேறத் தொடங்கின. அவரது பிரார்த்தனை பலனைக் கொடுக்கத் தொடங்கியது!

அதாவது அவருக்கு நெஞ்சை அடைத்தது—சரியாக மூச்சு விட முடியவில்லை. இந்த நிலைமையைத்தான் அவர் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்.

அவருக்குப் பின்னால் நின்று கொண்டிருந்த வில்சன் பிராண வாயு முகமூடியை அணிந்து கொண்டார். மற்றொரு முகமூடியை மெதுவாகப் புல்லரிடம் கொடுத்தார்.

புல்லர் புலியின் மீது வைத்திருந்த கண்களை வாங்காமலேயே இடது கையால் முகமூடியை வாங்கி அணிந்து கொண்டார்.

அவர் இதுதான் சமயம் என்று, "இன்னும் உயரே போங்கள், இன்னும் உயரே போங்கள்" என்று மூச்சைப் பிடித்துக்கொண்டு உரக்கக் கத்தினர்.

அப்போது விமானம் பூமியிலிருந்து இருபத்தையாயிரம் அடிக்கு மேலே வந்துவிட்டது!

அதுவரையில் விமானத்துக்கு உள்ளே காதைத் துளைத்துக் கொண்டிருந்த மிருகங்களின் உறுமலும் பட்சிகளின் சப்தமும் மெதுவாகக் குறைய ஆரம்பித்தன. அதுவரையில் ஆக்ரோஷத்துடன் பாய்வதற்குத் தயாராக இருந்த புலி நிற்க முடியாமல் தள்ளாடியது. அதன் கண்கள் மூடிக்கொண்டன. கடைசியில் ஏதோ மந்திரசக்தியினுல் கீழே சாய்வது போல அந்தப் புலி தடாலென்று கீழே விழுந்து விட்டது.

அதைக் கண்டதும் புல்லருக்கும் மற்றவர்களுக்கும் போன உயிர் திரும்பி வந்தது!

அவ்வளவு உயரத்தில் பிராண வாயு முகமூடி யின்றி யாரும் மூச்சுவிட முடியாது. புலியும் மற்றப் பிராணிகளும் பிரக்ஞை இழந்ததற்கு அதுதான் காரணம்.

புல்லர் கோடரியை ஓங்கிக் கொண்டு புலியின் அருகில் சென்ருர்.

ஒரே வெட்டில் அதன் கழுத்தை வெட்டி விட வேண்டும் என்பது அவரது நோக்கம். ஆனுல் கோடரியை ஓங்கியதும் அவரது மனம் மாறிவிட்டது.

பிறகு புல்லர் விமானத்தில் இருந்த ஆபத்து உதவி 'பெல்டு'க் கயிறுகளை அவசரம் அவசரமாக எடுத்தார். புலியின் நாலு கால்களையும் சேர்த்துக் கட்டினர். அது வாயைத் திறக்க முடியாமல் தலையிலிருந்து முகவாய்க் கட்டையைச் சுற்றிக் கயிற்றினுல் இறுகக் கட்டினர்.

"விமானத்தைக் கீழே இறக்கி அதிவேகமாகக் கெய்ரோவுக்குச் செல்லுங்கள்" என்று விமானிக்கு உத்தரவிட்டார்.

சில நிமிஷ நேரத்தில் விமானம் கெய்ரோவுக்கு வந்துவிட்டது.

விமான ரேடியோ நிபுணர் ஏற்கெனவே விமான நிலையத்துக்குச் செய்தி அனுப்பியிருந்ததால், பலர் இரும்பு வலைகளுடனும், துப்பாக்கிகள், ஈட்டிகளுடனும் விமானத்தைக் கவலையுடன் எதிர்பார்த்து நின்று கொண்டிருந்தார்கள்.

ஆனுல் காப்டன் புல்லரின் சமயோசித யுக்தி காரணமாக அந்த ஆயுதங்களை உபயோகிக்க வேண்டிய அவசியமே ஏற்படவில்லை.

கெய்ரோவில் மீண்டும் புலி கூண்டில் அடைக்கப்பட்டது. கூண்டுகளில் இருந்த விசித்திரப் பிரயாணிகளுடன் விமானம் மேற்கொண்டு எவ்வித அசம்பாவிதமுமின்றிக் கெய்ரோவிலிருந்து லண்டனுக்குப் புறப்பட்டது.

## நீதியின் பரிதாப நிலே !




பிரிவி கவுன்ஸிலின் தீர்ப்புக்கு எதிராக, இலங்கைப் பிரஜாவுரிமைச் சட்டத் திருத்த மசோதாவை ஜனப் பிரதிநிதி சபையில் ஸ்ரீ டட்லி சேனநாயகா பிரேரேபித்துள்ளார்.

# மேனி அழகிற்கும்

## யௌவன

## எழிலுக்கும்




# காந்தி

தரத்தில் சிறந்த ஸோப்

அளவில் பெரிய ஸோப்

ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிமிடெட், வடாலா, பம்பாய்.

SOM 176-Tamil




## 13. பரிச விருந்து

அன்று பகல் முழுவதும் அந்த நாடோடிகள் இரவு நடக்கப்போகும் பரிச விருந்திற்கான ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருந்தனர். அந்தக் குடிசைகளுக்குச் சமீபமாக ஐந்தாறு பெரிய அடுப்புக்கள் எரிந்து கொண்டிருந்தன. ஆண்களும் பெண்களும் அவற்றைச் சுற்றி நின்று சமையல் வேலைகளைக் கவனித்துக் கொண்டிருந்தனர். அந்த இடத்தைச் சுற்றிலும் வேப்பிலை மாவிலை முதலியவைகளால் தோரணம் கட்டி அலங்கரித்திருந்தனர். எல்லோரும் விசேஷமான உடைகளணிந்து காட்சியளித்தனர்.

அந்த மைதானத்திற்கிடையே வட்டமாக ஒரு இடம் அமைக்கப்பட்டுக் கொஞ்சம் விசேஷமாகவே அலங்காரம் செய்யப் பட்டிருந்தது. அந்த இடத்திற்கு நடுவே துணி விரிக்கப்பட்டிருந்த உயரமான ஆசனம் ஒன்று போடப் பட்டிருந்தது. அதுதான் அவர்களுடைய ராணியும் மணப் பெண்ணுமான தங்கம் அமருவதற்காகப் போடப் பட்டிருந்த ஆசனம்.

இரவு நெருங்கிக் கொண்டிருந்தது. நேரம் செல்லச் செல்ல அவர்களிடையே பரபரப்பும் அதிகமாகிக் கொண்டிருந்தது. பல ஊர்களிலும் பிரிந்து வாழ்ந்து வந்த அவர்கள் சமூகத்தினரெல்லாம் விசேஷ அழைப்பின் பேரில் அங்கு வந்து கூடியிருந்தனர். பல வருடங்களாக ஒருவரை ஒருவர் சந்திக்க முடியாத உறவினர்களும், நண்பர்களும் ஒருவரை ஒருவர் சந்திக்க இந்த விசேஷ சந்தர்ப்பம் ஒரு வாய்ப்பை அளித்தது. உறவினர்களும் நண்பர்களும் ஒன்று சேர்ந்து குதூகலமாகப் பேசுவதும், சிரிப்பதும், ஆடுவதும் பாடுவதுமாக இருந்தனர். அவர்களுடைய பேச்செல்லாம் ராணியாகிய தங்கத்தைப் பற்றியதாகவே இருந்தது. சிலர் அவளுடைய அழகைக் கண்டு வியந்தார்கள்; சிலர் அவளுடைய நடையைக் கண்டு வியந்தார்கள்; சிலர் அவளுடைய பேச்சைக் கண்டு வியந்தார்கள். அவள் ராணியானதால் சுயம் வரம்போல அன்று இரவு அவள் தனக்கேற்ற நாயகனைத் தானே தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும். பலர் அவளுக்கேற்ற புருஷன் அந்தக் கூட்டத்தில் அகப்படுவது கடினம் என்று சொல்லிக் கொண்டார்கள். பலர் அவள் யாரைப் புருஷனாக வரிப்பாள் என்பதைப் பற்றிப் பலவிதமாகப் பேசிப் பந்தயம் கட்டினர். தங்கத்தின் அத்தையாகிய வீரம்மா தங்கத்தின் தாயாகிய வள்ளி அந்த விருந்தில் கலந்து கொள்ளாததைப் பற்றி ஒவ்வொருவரிடமும் அதிசயத்தோடு சொல்லிக்கொண்டு வந்தாள்.

இரவு நெருங்க நெருங்க அந்த இடத்தில் கூட்டம் அதிகமாகியது. சப்தமும் சந்தடியும் அதிகமாயின. பெத்தண்ணன் அங்கு மிங்குமாக நடந்து எல்லோரையும் அதிகாரம் செய்து கொண்டிருந்தான். வெளியூர்களிலிருந்து அந்த விசேஷத்திற்காக வந்த மனிதர்களோடு வந்திருந்த நாய்களைக் கண்டு அங்கிருந்த நாய்கள் முதல் முதலாகத் தங்கள் விரோதிகள் என்று கருதிக் குரைத்துச் சண்டை போட்டன. பின்னர் அந்த நாய்களின் எஜமானர்களும், தங்கள் எஜமானர்களும் அன்யோன்யமாகப் பேசிக் கொள்வதைப் பார்த்ததும் அவைகளும் தாங்களும் ஒருவருக்கொருவர் உறவினர் என்று அறிந்து அன்யோன்யமாக நடந்து கொள்ளத் தலைப் பட்டன.

இரவு நெருங்கி விட்டதற்கு அடையாளமாக ஆங்காங்கு மூங்கிற்குச்சியில் பொருத்தி நட்டு வைக்கப்பட்டிருந்த எண்ணெய் விளக்குகளெல்லாம் கொளுத்தப்பட்டன. அந்த மைதானம் முழுதும் ஒரு பிரகாசம் ஏற்பட்டது. விருந்து ஆரம்பிப்பதற்கான நேரம் நெருங்கி விட்டதைப் பெத்தண்ணன் எல்லோருக்கும் அறிவித்து விட்டு எல்லோரும் அமைதியாக அமரும்படி உத்திரவிட்டான். சளசளவென்று அலைபோலெழுந்த பேச்சுச் சப்தம் சிறிது அடங்கியது. அவரவர்கள்



எங்கெங்கு நின்றார்களோ, அங்கேயே அமர்ந்தனர். அவர்கள் சாப்பிடுவதற்கான முறையில் வரிசையாகவோ ஒழுங்காகவோ அமரவில்லை. குழந்தைகள், வாலிபர்கள், வயதானவர்கள், ஆண் பெண் என்ற வித்தியாசமில்லாமல் கும்பல் கும்பலாகக் கலந்து உட்கார்ந்திருந்தனர். ஒவ்வொரு குழுவிலும் இரண்டு மூன்று நாய்களும் அவர்களுக்குச் சரிநிகர் சமானமாக விருந்து சாப்பிட அமர்ந்திருந்தன.

விருந்து ஆரம்பமாயிற்று. 'இங்கே கொண்டு வா' 'அங்கே போடு!' 'இன்னும் கொஞ்சம்' 'எனக்கு' 'உனக்கு' என்று பலவிதமான குரல்கள் எழுந்தன. விருந்தும் முடிந்தது. அடுத்த சடங்கை ஆரம்பிப்பதற்கு எல்லோரும் சித்தமானார்கள். வட்டமாகவும், சுத்தமாகவும், தோரணங்களால் அலங்காரம் செய்யப்பட்டு மேடை போடப்பட்டிருந்த இடத்தைச் சுற்றி எல்லோரும் உட்கார்ந்து கொண்டனர். எல்லோருடைய கண்களும் அந்த மேடையையே உற்று நோக்கின. பலவிதமான உடைகளால் தங்களை அலங்காரம் செய்து கொண்டிருந்த வாலிபர்களெல்லாம் அந்த மேடைக்குச் சமீபமாக, 'நான் முந்தி, நீ முந்தி,' என்று ஒருவரை ஒருவர் இடித்துத் தள்ளிக் கொண்டு உட்கார்ந்தனர். அவர்கள் முகத்தில் ஒரு சந்தோஷமும் ஆவலும் பூரித்திருந்தன. அவர்களுடைய முக ஒளியிலிருந்து ஒவ்வொருவரும் தன்னைத்தான் ராணி கணவனாகத் தேர்ந்தெடுப்பாள் என்று மனக்கோட்டை கட்டிக் கொண்டிருப்பதாகத் தெரிந்தது. ஒவ்வொரு வாலிபனும், தன்னைவிட அழகிலும் தேகதிடத்திலும் சிறந்தவர்களைக் கண்டு பொறாமை அடைந்தான். ஏனெனில் ஒருவருக்கொருவர் தங்களுக்குப் போட்டியாக வந்து விட்டதாக அவர்களுக்குள் நினைப்பு. எப்படி இருந்தாலும் தன்னையும், தன் அழகையும் அலங்காரத்தையும் கண்டு ராணி தன்னிடந்தான் ஆசை கொள்வாள் என்ற நம்பிக்கையோடு ஒவ்வொருவரும் இருந்தனர்.

"ஏன் இன்னும் ராணி வரவில்லை...!" என்று கேட்டான் ஒருவன்.

"இதோ வந்து விடுவாள், பாரு!" என்றான் மற்றொருவன்.

"அவள் வந்ததும் முதலில் என்னைத்தான் நோக்குவாள்" என்றான் ஒருவன்.

"அது சரி. வந்தவுடனே உன்னைத்தான் நோக்குவாள். ஆனால் உன்னை அவள் மனதிற்குப் பிடிக்காது. உடனே என்னை நோக்க ஆரம்பித்து விடுவாள்" என்றான் மற்றொருவன்.

பலவிதமான வாத்தியங்களுக்கிடையே ஆண்களும் பெண்களும் சேர்ந்து பாட ஆரம்பித்தனர். நடீரென்று 'ராணி வருகிறாள்' என்றான் ஒருவன். எல்லோரும் பரபரப்போடு பார்த்தனர். பலர் பல விதமாகக் கோஷமிடத் தொடங்கினர். உட்கார்ந்திருந்தவர்களில் பலர் எழுந்து நின்றனர். சில நிமிடங்கள் எங்கும் ஒரே ஆரவாரமாயிருந்தது.



பெத்தண்ணன் மேடைக்குச் சமீபமாகப் போய் எல்லோரையும் அமைதியாக இருக்கும்படி வேண்டிக் கொண்டான். வீரம்மா முன்னால் வந்து கொண்டிருந்தாள். அவளுக்குப் பின்னால் தங்கம் மெதுவாகத் தலை குனிந்த வண்ணம் நடந்து வந்து கொண்டிருந்தாள். ஏதோ ஒரு தேவதை நடந்து வருவது போல! அவளுக்குப் பின்னால் இரண்டு பெண்கள் வந்து கொண்டிருந்தனர், சேடியர் போல! மங்கிய விளக்கின் ஒளியில் என்று மில்லாத புது அலங்காரத்தோடும் இயற்கையாக அமைந்த பேரெழிலோடும் அவள் நடந்து வந்தது ஏதோ சொப்பன உலகத்தில் நடந்து வருவது போலத்தான் இருந்தது. மஞ்சள் நிறமான அவள் பாவாடை தரையில் புரண்டு கொண்டிருந்தது. பாவாடையில் தைக்கப்பட்டிருந்த தொய்யா விளக்கின் ஒளியில் பள பள வென்று மின்னிக் கண்ணைப் பறித்தது. அவளுடைய நெற்றியில் சாதாரணக் கண்ணாடி மணிகளாலும் ஜிகினாவாலும் தைக்கப்பட்ட பட்டயம் ஒன்று கட்டப்பட்டிருந்தது. கையில் நிறைய அணிவிக்கப்பட்டிருந்த வெள்ளி வளையல்களும், கண்ணாடி வளையல்களும் அவள் கையை அசைக்கும் போதெல்லாம் கலகலப்பான சப்தத்தை எழுப்பின. கழுத்தில் பல வர்ணங்களால் பல விதமாகக் கோக்கப்பட்டிருந்த மணி மாலைகளை அணிந்து கொண்டிருந்தாள். கன்னங்களிலும் கழுத்திலும் சந்தனம் பூசப்பட்டு, கண்களில் மையிடப் பட்டிருந்தது.

கழுத்தில் ஒரு பூமாலையும், அதைப்போல் கையில் ஒரு பூமாலையையும் சுமந்து கொண்டு வந்தாள். இவைகளெல்லாம் அவளுடைய அழகை மிகவும் சோபிக்கச் செய்யாவிடினும், இயற்கையாக அவளுக்குள்ள அழகைக் குலைத்து விடவில்லை.

வீரம்மா அவளுடைய மெல்லிய கரத்தைப் பற்றி அழைத்துக் கொண்டு வந்து அந்த மைதானத்தின் நடுவே போடப்பட்டிருக்கும் ஆசனத்தில் உட்கார வைத்தாள்.

தங்கத்தின் பொன் போன்ற மேனியையும் அழகையும் கண்டு எல்லோரும் பிரமித்தனர். வாலிபர்களெல்லாம் ஆர்வத்தோடு அவளையே பார்த்துக் கொண்டிருந்தனர். தங்கம் ஆசனத்தில் வந்து அமர்ந்ததும் மெதுவாகத் தலை நிமிர்ந்து சுற்றிலும் பார்த்தாள். எல்லோருடைய கண்களும் அவளையே நோக்கிக் கொண்டிருப்பதை அவள் அறிந்து கொண்டாள். அவளுடைய அத்தையான வீரம்மா மெதுவாக அவளுடைய காதில், "நீ இப்பொழுது என்ன சொல்ல வேண்டும், தெரியுமா! எனக்குப் பின் உங்களை ஆளுவதற்காக, எனக்கு நல்ல சந்ததிகளை ஏற்படுத்துவதற்காக, நான் என் மனத்திற்குப் பிடித்த ஒரு புருஷனைக் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறேன்' என்று சொல்ல வேண்டும்" என்றாள்.

தங்கத்திற்கு இந்த வார்த்தைகளைச் சொல்ல வெட்கமாகவும் வெறுப்பாகவும் இருந்தது. அவள் மெதுவாக எழுந்து நின்றாள். ஆனால் அவள் நெஞ்சிலிருந்து வார்த்தைகள் எழும்பவில்லை. அவள் எழுந்து நின்றதும் அவளுடைய வார்த்தைகளைக் கேட்க எல்லோரும் அமைதியாகவும் ஆவலாகவும் இருந்தனர். அவள் கடைசியில் தடுமாறியபடியே ஏதோ சொன்னாள். அவள் சொல்லிய வார்த்தைகளை எல்லோர் காதிலும் விழும்படியாக வீரம்மா மறுமுறை எடுத்துக் கூறினாள். உடனே கரகோஷம் எழுந்தது; பலவிதமான வாத்தியங்கள் முழங்கின. பலர் உரத்த குரலில் சந்தோஷத்தோடு பாடத் தொடங்கினர்.

வீரம்மா அந்தக் கூட்டத்தின் முன் வரிசையில் உட்கார்ந்திருந்த வாலிபர்களை எல்லாம் பார்த்தாள். சட்டென்று அவள் முகத்தில் ஒரு கலவரம் ஏற்பட்டது. அவள் பெத்தண்ணனைக் கூப்பிட்டு ஏதோ கேட்டாள். பெத்தண்ணன் அந்தக் கூட்டத்தைச் சுற்றித் தன் பார்வையைச் செலுத்தி விட்டுத் திகைப்போடு வீரம்மாவைப் பார்த்தான்.

வீரம்மா சட்டென்று அந்த இடத்தை விட்டுக் கிளம்பி அந்தக் கூட்டத்தில் ஒவ்வொரு முகத்தையும் பார்த்துக் கொண்டே வெளியே வந்தாள். அந்தச் சமயத்தில் அவள் யாரோ ஒரு முக்கியமான ஆசாமியைத் தேடுகிறாள் என்பதை எளிதில் ஊகித்துக் கொள்ள முடிந்தது.

அவள் அந்தக் கூட்டத்தினரைத் தாண்டி வெளியே வந்து பார்த்த பொழுது அங்கொரு மரத்தடியில் ஒரு உருவம் உட்கார்ந்திருந்தது. வீரம்மா அந்த உருவத்திற்குச் சமீபமாக நெருங்கி நின்று பார்த்தாள். அவள் இவ்வளவு நேரமும் எந்த உருவத்தைத் தேடிக் கொண்டு வந்தாளோ, அதே உருவம்தான் அது.

"சிங்காரம்!" என்று கூப்பிட்டாள்.

ஏதோ சிந்தனையிலாழ்ந்திருந்த சிங்காரம் அவளுடைய குரலைக் கேட்டதும் திகைப்படைந்து எழுந்து நின்றான்.

சிங்காரம் வீரம்மாளுடைய பேரன். அன்று அவன் சிவப்புப் பட்டுச் சட்டையும் இடையில் ஒரு ஜரிகை வேஷ்டியும் அணிந்திருந்தான். அன்று அவன் அந்த அலங்காரங்களையெல்லாம் செய்து கொள்ளத் துளிக்கூட இஷ்டப்படவில்லை. ஆனால் வீரம்மாவின் வற்புறுத்தலினால் இவைகளையெல்லாம் செய்து கொண்டிருந்தான். அவனுக்கு இந்தக் கொண்டாட்டங்களில் கலந்து கொள்ள இஷ்டமில்லை. அவன் மனசு வேறு எதையோ எண்ணிப் போராடிக் கொண்டிருந்தது. ஆனால் வீரம்மா அவனை அப்படி விட்டு வைப்பாளா!

"சிங்காரம், என்ன இப்படி வந்து தனியாக உட்கார்ந்திருக்கே! இப்படி இருந்தால் உன் ராணியை வேறு எவனாவது கொண்டு போய் விடுவான். இன்று பகல் முழுதும் நான் சொன்னதை மறந்து விட்டாயா! இன்று ராத்திரிதான் உன்னுடைய அதிர்ஷ்டத்தைப் பார்க்க வேண்டும். இதில்தான் உன்னுடைய பெருமையே இருக்கிறது. நீதான் அவளுக்கு ஏற்ற புருஷன். இங்கே வேறு ஒருவனுக்கும் அவள் கையைத் தொட யோக்கியதை இல்லை. எழுந்திரு, சீக்கிரம்! அவள் உனக்காகத்தான் காத்திருக்கிறாள்!" என்று அவனைத் துரிதப்படுத்தினாள்.

அவன் அவளுக்கு எவ்விதப் பதிலும் சொல்லவில்லை. அவன் முகத்தில் வேதனைக் குறி தோன்றியது. அவன் ஒரு பெரு மூச்சு விட்டுக்கொண்டே, "பாட்டி, நீ போ! இதோ நான் வந்து விட்டேன்!" என்றான்.

"சரி, சீக்கிரம் வா. அதற்குள் அவளிடம் சொல்லி வைக்கிறேன். நீ நேராக முன்னே வந்து விடு. நீ அங்கே வந்ததும் மாலையை உன் கழுத்தில் போடச் சொல்லுகிறேன். எல்லாம் சரியாய்ப் போயிடும்" என்று சொல்லிவிட்டு நடந்தாள்.

சிங்காரம் மனம் குழம்பியபடி சிறிது நேரம் நின்றுவிட்டு வேறு வழியில்லாமல் அந்தக் கூட்டத்தை நோக்கி நடக்கலானான்.

சிங்காரம் அந்தத் தர்மசங்கடமான நிலைமையிலிருந்து மீள வழியில்லை. நிச்சயம் அவனைத் தவிர அந்தக் கூட்டத்தில் ராணியை மணந்து கொள்ளும் யோக்யதையும் அழகும் உடைய வாலிபர்கள் கிடையாது. அவன் அந்தப் பிடியிலிருந்து தப்பி விட முடியாது. அவன் மனம் குழம்பியவனாக அந்தக் கூட்டத்தை விலக்கிக் கொண்டு உள்ளே போக யத்தனித்தான். அந்தச் சமயம் யாரோ அவனைச் சிங்காரம் என்று பெயர் சொல்லிக் கூப்பிடுவது போலிருந்தது. அவன் திரும்பிப் பார்த்தான். சற்று நேரத்திற்கு முன்னால் அவன் உட்கார்ந்திருந்த மரத்தடியில் யாரோ ஒரு பெண் நின்று கொண்டிருந்தாள். அவள் மர நிழலில் நின்று கொண்டிருந்தாலும் அங்கு எரிந்து கொண்டிருந்த விளக்கின் ஒளியில் அவளுடைய உருவம் நன்றாகத் தெரிந்தது. அவன் அவளுக்குச் சமீபமாக நெருங்கி நின்று அவளை உற்றுப் பார்த்தான். முதலில் அவளுடைய இனிய குரல் அவளை யாரென்று அவனுக்கு ஞாபகப் படுத்தியது. ஆனால் ஆர்வத்தோடு சமீபத்தில் நெருங்கியதும் அவளுடைய உருவமும் உடையும் அவன் நினைத்ததற்கு நேர்மாறாக இருந்தன. அவள் வரி வரியாகக் கோடிட்ட பாவாடை உடுத்தியிருந்தாள். கையில் வெள்ளி வளையல்களும் கழுத்தில் கறுநிறப் பாசிமணியும் அணிந்திருந்தாள். அவள் தங்களுடைய இனத்தைச் சேர்ந்தவள்தான் என்று கருதும்படியாக இருந்தது அவளுடைய உருவம். ஆனால் கண நேரத்தில் அவளுடைய கண்களையும் குறும்பான புன்முறுவலையும் கண்டவுடன் சிங்காரம் அடையாளம் கண்டு கொண்டு விட்டான். அவன் ஆச்சரியத்தோடு அவளை அணுகி, "நீயா! பட்டக்காரர் வீட்டுப் பெண்ணா...!" என்றான்.

மாதவியின் கண்களில் ஒரு வெட்கமும் பிரகாசமும் தோன்றின. அவளுடைய சிரிப்பில் முத்துப்

போன்ற பல்வரிசை அரை குறையாக ஒளிகாட்டி மறைந்தது. "ஆமாம்" என்ருன்.

"இந்த வேளையில் இங்கே நீ எட்படி வந்தே...! உன்னை ஒருவரும் பார்க்கவில்லையா...!"

"எனக்கு இங்கே வர வழி தெரியாதா! என்னை இவர்கள் யாரென்று தெரிந்துகொள்ளக் கூடாது என்றுதான் இப்படி உடை உடுத்திக் கொண்டு வந்தேன். இந்த உடை எனக்கு அழகாய் இருக்கிறதல்லவா!" என்று கேட்டாள் மாதவி.

"ரொம்ப அழகாயிருக்கிறது. இதுதான் உனக்குப் பொருத்தமாயும் இருக்கிறது......"

பெரிய பணக்காரர் வீட்டுப் பெண் இப்படி உரு மாறி மனம் மாறித் தங்கள் கூட்டத்தினரோடு கலந்து கொள்ள இச்சைப்படுவாள் என்று அவன் கனவிலும் நினைக்கவில்லை. அவனுக்கு இத்தகைய புத்தி ஏற்பட்டது ஏதோ பைத்தியக்காரத்தன மாகத்தான் அவனுக்குப் பட்டது. அவளுடைய பைத்தியக்காரத்தனம் அவனுடைய ஆவலையும் பைத்தியக்காரத்தனமாக்கியது. அவனை நோக்கி நின்ற அதிர்ஷ்டத்தை மாதவி வந்து தடுத்துக் கெடுத்து விட்டாள். அவன் இன்னும் சிறிது நேரத்தில் அவர்களுடைய ராணியால் அவளுக்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட கணவனாக அறிவிக்கப்பட வேண்டியவன். ஆனால் அதற்கு இடையூருக வந்து நின்ருன் மாதவி. அவளைப் பார்த்த பிறகு அவனுல் ஓரடி கூட முன்னெடுத்து வைக்க முடியாது என்பதை அவன் உணர்ந்தான். அவள் அந்தச் சமயத்தில் வந்தது அவனை ஒரு தர்ம சங்கடமான நிலைமையிலிருந்து காப்பாற்றியது போலிருந்தது. ஆகவே அவளை அழைத்துக் கொண்டு ஒருவர் கண்ணிலும் படாமல் தனிமையாக எங்காவது போய்விடுவது என்று தீர்மானித்தான். "உனக்கு இந்தக் கூத்தெல்லாம் பிடிக்கிறதா!" என்று கேட்டான் மாதவியைப் பார்த்து.

"இதெல்லாம் பிடிக்காமலா இங்கே வந்தேன்! எல்லோரும் எவ்வளவு சந்தோஷமாயிருக்கிருர்கள்! எனக்கு அந்த ராணியைப் பார்த்தால் பொருமையாயிருக்கிறது. நான் அந்த ராணியாகப் பிறந்திருக்கக் கூடாதா என்றுகூடத் தோன்றுகிறது" என்ருள் மாதவி.

சிங்காரம் சிரித்தான். "அப்படியா! ஒரு பணக்கார வீட்டுப் பெண் இப்படி எல்லாம் இருப்பாளென்று நான் நினைக்கவே இல்லை. அதிருக்கட்டும். இப்போது எங்கள் ராணி என்ன செய்ய வேண்டும், தெரியுமா! தனக்கேற்ற புருஷனைப் பார்த்துப் பொறுக்கி எடுக்க வேண்டும்......" என்ருன்.

"அவள் யாரைப் பொறுக்கி எடுக்கப் போகிருள்...!" என்று கேட்டாள் மாதவி.

"அவளுக்குத் தகுதியான புருஷனே இந்தக் கூட்டத்தில் இல்லை......"

"ஏன்! நீங்கள்......" என்று இழுத்தாள் மாதவி அவன் முகத்தைக் கூர்ந்து பார்த்துக் கொண்டே.

"நானு......! ஆமாம்! என்னைத்தான் அவளுக்குத் தகுந்த புருசனுக எல்லோரும் நினைக்கிருங்க" இதைச் சொல்லும்போது அவன் முகத்தில் ஒரு சங்கடமும் அலுப்பும் தோன்றின.

"அப்படியானுல் நீங்கள் அதிர்ஷ்டசாலிதான்" என்ருள் மாதவி அவனை ஓரக் கண்களால் பார்த்துச் சிரித்துக்கொண்டே.

"எனக்குக் கல்யாணம் செய்து கொள்ள இஷ்டமே யில்லை......எனக்கும் அவளுக்கும் சரிப்படாது......" என்ருன் சிங்காரம்.

"ஏன்...!" என்ருள் மாதவி.

"அவள் எங்கள் கூட்டத்திலே பிறந்த பெண் மாதிரியே இல்லை. அவள் ரொம்ப அழகா யிருக்கிருள். அவளைப் பூப்போலப் பத்திரமா வைச்சுப் பாதுகாக்கிறவன் தான் கல்யாணம் செய்து கொள்ள முடியும். அவளுக்கும் என்னைக் கல்யாணம் செய்து கொள்றதிலே இஷ்டமில்லை என்று எனக்குத் தெரியும். என்னை மட்டும் என்ன! எங்கள் கூட்டத்தில் அவளுக்கு யாரையுமே பிடிக்கவில்லை. அதுமட்டுமா! அவளுக்கு எங்கள் பிழைப்பே கூடப் பிடிக்கவில்லை" என்ருன் சிங்காரம்.

"ஆமாம். அவளைப் பார்த்தாலே அப்படித்தான் தோன்றுகிறது..." என்ருள் மாதவி.

"எப்படியோ!...அவள் இவர்கள் சொல்வதற்கெல்லாம் பொம்மை மாதிரி ஆடுகிருளே தவிர, உண்மையான மனதோடு எதுவும் செய்வதில்லை. அப்படி இருக்கும்போது அவளை நான் கல்யாணம் செய்து கொண்டால் நிம்மதியாக இருக்க முடியுமா!" என்ருன் சிங்காரம்.

மாதவியும் சிங்காரமும் பேசிக் கொண்டிருப்பதை அங்கு போவோரும் வருவோரும் பார்த்துக் கொண்டே சென்றனர்.

மாதவியைக் கண்டு பலருக்கும் ஆச்சரியமாயிருந்தது.

சிங்காரத்தோடு பேசிக்கொண்டிருக்கும் இந்த அழகான பெண் யாரென்று அவர்களுக்கெல்லாம் சந்தேகம். ஆனல் அவள் அணிந்து கொண்டிருந்த உடையிலிருந்து அவளும் தங்கள் கூட்டத்தைச் சேர்ந்த பெண்தான் என்று அவர்கள் நினைத்தார்கள். எப்படியோ அவள் சிங்காரத்திற்கு இணையான ஜோடி தான் என்று பார்த்தவர்கள் மனத்திலெல்லாம் பட்டது.

பலருடைய கண் பார்வையும் தங்கள்மீது விழுவதைக் கண்ட சிங்காரம் அந்த இடத்தில் அதிக நேரம் நிற்பது தவறென்று உணர்ந்தான். மறுபடியும் அவனுடைய பாட்டி வீரம்மா அவனைத் தேடிக்கொண்டு வரலாமல்லவா! அவள் கண் பார்வையில் அவன் மறுபடியும் பட்டால், ஆபத்துத்தான் என்பதை உணர்ந்தான். ஆகவே, "இங்கே நின்று நாம் பேசுவது அவ்வளவு நல்லதல்ல. சந்தடியே இல்லாத இடமாய்ப் பார்த்துப் போய்விடலாமா!" என்று கேட்டான்.

மாதவிக்கும் அவனுடைய யோசனை உசிதமானதாகப் பட்டது. இருவரும் அந்த இடத்தை விட்டுச் சென்று இருளில் மறைந்தனர். (தொடரும்)



"அம்மா, நான் நல்ல பையன்தானே?"

"ஆமாண்டா, கண்ணே! சந்தேகம் என்ன?"

"என்னை நம்புவாயா, அம்மா?"

"நிச்சயம் நம்புவேனடா, தங்கம்! உன்னை நம்பாமல் என்ன?"

"அப்படியானுல் இன்னும் முறுக்கு டப்பாவை ஏன் அலமாரியின் மேல் தட்டிலேயே வைக்கிருய்?"



# டன்லப்

## வெகுகாலம்

## உழைக்கும்



DCK-6-TM

---

## Zam-Buk தசை நோவுகள்

## வலிகள், சுளுக்குகள் ஆகியவற்றை



### ஜாம்பக் எவ்வளவு விரைவாகக் குணப்படுத்துகிறது பாருங்கள்!



ஜாம் - பக் வலிகளை மாய மாய் மறையச் செய்கிறது.

ஜாம்-பக் மூலிகை ஆயிண்ட்மெண்டை உங்கள் தசைக்குள் நன்ருகத் தேய்த்து விடுங்கள். அங்கே உள்ள நோவு,வலி, பிடிப்பு இவைகளை ஜாம்-பக்கிலுள்ள சிறந்த ஔஷதத் தைலங்கள் வெளியேற்றி விடுகின்றன. சுளுக்கிலிருந்து ஜாம்-பக் உங்களை விடுவிக்கிறது. ஜாம்-பக் உங்கள் தசைகளைக் கட்டாகவும், வலுவாகவும் இருக்கச் செய்கிறது. கமைச்சல், மற்றும் இதர சரும, மண்டை நோய்கள், மூலம் ஆகியவற்றிற்கு ஜாம்-பக் அதி அற்புதமான நிவாரணியாகும். வெட்டுக் காயங்கள், நெருப்புக் காயங்கள், சேற்றுப் புண், ரணங்கள், மண்டைச் சொறி, ஆராத ரணங்கள், பூச்சிக்கடி முதலியவற்றை ஜாம்-பக் விரைவாகக் குணப்படுத்துகிறது.



**ஜாம்-பக் உலகத்தின் சிறந்த சரும ஆயிண்ட்மெண்ட் மிருகக் கொழுப்பு கலப்பற்றது என்பது உத்தரவாதம்**

FZY 2 மதராஸிற்கு ஸோல் ஏஜெண்டுகள்: நர்தா & கம்பெனி, பார்க் டவுன்




ஆபிஸை விட்டு வெளியே வந்ததும், "என்ன ராகவன்! நேரே வீட்டுக்கா? அல்லது கடைத் தெருவுக்குப் போகப் போகிறாயா?" என்று கேட்டான் ராஜன்.

"என் மனைவி முக்கியமாய் ஒரு சாமான் வாங்கிக் கொண்டு வர வேண்டுமென்று சொன்னாள்; அதனால் கடைத்தெருப் பக்கம் போய்த்தானாகவேண்டும். வாயேன் போகலாம்!" என்று சொல்லிக் கொண்டே கிளம்பினான் ராகவன்.

"ஏது! மனைவி வாங்கிக்கொண்டு வரச் சொன்னதை ஞாபகம் வைத்திருக்கிறாயே! எனக்கு மறதி அதிகம், அப்பா! என் மனைவி ஏதாவது வாங்கிக் கொண்டு வரச் சொன்னாலும் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்து அவள் அதைப் பற்றிக் கேட்ட பிறகுதான் எனக்கு ஞாபகம் வரும்!" என்றான் ராஜன்.

அவன் அப்படிச் சொன்னது, ராகவனுக்குத் தன் ஞாபகசக்தியைப் பற்றிப் பெருமையாய்ச் சொல்லிக் கொள்ள ஒரு சந்தர்ப்பத்தை அளித்தது.

"நேற்று என் குழந்தை அலமுவின் கழுத்துச் சங்கிலியைக் கழற்றிய என் மனைவி ஞாபக மறதியாய் எங்கேயோ வைத்துவிட்டாள். என்னிடம் சொன்னால் எங்கே கோபித்துக் கொள்ளப் போகிறேனோ, என்று என்னிடம் சொல்லாமலேயே அவள் வீடு முழுவதும் சல்லடை போட்டுச் சலித்துப் பார்த்திருக்கிறாள்! அது அவளுக்கு எங்கும் கிடைக்கவில்லை. சாயங்காலம் நான் ஆபீஸிலிருந்து திரும்பியதும் அவள் முகம் வெளிறிப்போயிருந்ததைப் பார்த்து விஷயம் ஏதோ இருக்கிறது என்று ஊகித்துக் கொண்டு கேட்டேன். 'ஒன்றுமில்லை' என்று முதலில் மழுப்பினாள். பின்னால் மலங்க, மலங்க அழுதபடி, "குழந்தை...குழந்தை சங்கிலியைக் காணோம்!" என்றாள்.

எனக்குத் திடுக்கிட்டது. முதல் மாசம் தான் செய்துபோட்ட இரண்டு சவரன் சங்கிலியைக் காணோம் என்றால் எப்படியிருக்கும்?

"எல்லா இடத்திலும் நன்றாகப் பார்த்து விட்டாயா? எப்போது கழற்றினாய் அதை?" என்று கேட்டேன்.

"காலையில் குழந்தைக்கு எண்ணெய் தேய்க்கும்போதுதான் கழற்றினேன். வீட்டில் அதைத் தேடாத இடம் பாக்கி யில்லை!" என்றாள் அவள் கண்ணைக் கசக்கியபடி.

நான் சில விநாடிகள் யோசித்தேன். பின்னர் பர, பரவென்று எழுந்து போய்ச் சீயக்காய்ப் பொடி வைக்கும் டப்பியைத் திறந்தேன். அங்கே பொடியில் அமுங்கிக் கிடந்தது குழந்தையின் சங்கிலி!

"இந்தா கமலா சங்கிலி...! இனி மேற்கொண்டாவது இப்படிக் கை மறதியாய்ச் சாமான்களைப் போட்டு வைக்காதே!" என்று கண்டித்து வைத்தேன்.

அவளுக்கு ஒரே ஆச்சரியமாய்ப் போய் விட்டது. கண்கள் மலர்ந்தன.

"சீயக்காய்ப் பொடி டப்பியில் சங்கிலி இருக்கிறது என்று எப்படிக் கண்டு பிடித்தீர்கள்?" என்று கேட்டாள் கமலா.

"உன்னோடு குடித்தனம் செய்பவனுக்கு ஞாபக மறதி இருந்தால் பிழைக்க முடியுமா? போன வருஷம் இப்படித்தான் ஒருநாள் எண்ணெய் தேய்த்துக் கொள்வதற்கு முன்னால் சங்கிலியை சீயக்காய்ப் பொடி டப்பியில் போட்டு வைத்துவிட்டு அப்புறம் வீடெல்லாம் தேடினாய். அது இப்பொழுது ஞாபகம் வந்தது. உடனே நேரே போய்ச் சீயக்காய்ப் பொடி டப்பியைத் திறந்து பரிசோதித்தேன்!" என்றேன்.

அவள் என் ஞாபக சக்தியைப் பற்றி எல்லோரிடமும், சொல்லிப் பெருமைப் பட்டுக் கொண்டாள்! என்று பெருமிதத்தோடு சொன்னதும் ராகவன் முகத்தில் ஒரு புன்னகை அரும்பியது.

"ஞாபக மறதிதானப்பா மனிதனுக்குப் பெரிய சத்துரு. அதை வென்று விட்டால் உலகத்தையே வென்று விடலாம்!" என்று ராஜனுக்கு ஒரு குட்டி உபதேசமும் செய்

---



"சிம்லாவிலே கொஞ்ச நாள் தங்கி இருந்தேன். உடம்புக்கு ரொம்பவும் ஆரோக்கியமாயிருந்தது. அங்கு இருந்த வரையிலும் டாக்டருக்குக் காலணாக் காசுகூட நான் கொடுக்கவில்லை. நீங்கள் இதை நம்புவீர்களா?"

"பேஷா நம்புகிறேன். அந்த டாக்டரையும் பார்த்தேன். அவரும் இதையேதான் என்னிடம் சொன்னார்."










தான். அச்சமயம் அவர்கள் இருவரும் கடைத் தெருவில் இருந்த போஸ்டாபீஸுக்கு நேராக சென்று விட்டனர்.

"இங்கேயே இரு; கடிதத்தைத் தபாலில் சேர்த்துவிட்டு வந்து விடுகிறேன்!" என்று சொல்லிப் போன ராகவன் இரண்டு நிமிஷங்கள் கழித்துத் திரும்பினான்.

"ரொம்பப் பேர் கடிதம் எழுதினால் அன்றைக்கே அதை ஞாபகமாகத் தபாலில் சேர்ப்பது கிடையாது. நாலைந்து நாட்கள் கழிந்துதான் அவர்களுக்கு அந்தக் கடிதத்தைப் பற்றிய நினைவு வரும். எனக்கு அந்தச் சங்கடமே யில்லை!" என்றான் ராகவன்.

ராஜன் தன் நண்பனின் அபார ஞாபக சக்தியை மெச்சிக் கொண்டான். அவனுடைய மேதையை மனத்துக்குள் நினைத்துப் புகழ்ந்து கொண்டான். இந்த மாதிரி சக்தி நம்மிடம் இல்லையே என்று ஏங்கினான்.

இருவரும் மார்க்கெட்டை அடைந்ததும் முதலில் அரை வீசை வெண்டைக் கத்திரிக்காய் வாங்கினான் ராகவன்.

கறிகாய்க்காரனுக்குச் சில்லறை கொடுக்கப் பையில் கைவிட்ட அவன் மணிபர்ஸுக்குப் பதில் ஒரு கவரை வெளியிலெடுத்தான். அதை அவசரம் அவசரமாகத் திறந்தான். கதவைத் திறக்க முடியாமல் போகவே அதைக் கூர்ந்து பார்த்தான்.

அவன் திரு. திரு வென்று விழிப்பதைப் பார்த்த ராஜன் "ஏண்டா! என்ன சமாசாரம்?" என்று வியப்புடன் கேட்டான்.

ராகவன் ஒன்றும் பதில் சொல்லவில்லை. தான் தபால் பெட்டியில் கடிதத்தைப் போடுவதிற்குப் பதில் ஞாபக மறதியாகப் பர்ஸைப் போட்டுவிட்ட விவரத்தை அவன் எப்படிச் சொல்ல முடியும்?

ராகவன் வீட்டுக்கு வந்ததும் வராததுமாக, அவன் மனைவி அவனிடம் வந்து, "கீரை வாங்கினேன், நாலணாவுக்கு. சில்லறை கொடுங்கள்!" என்றாள்.

"என் பொல்லாத வேளையை என்னவென்று சொல்லுவது? போஸ்டாபீஸில் தபால் பெட்டியில் கடிதத்தைப் போடுவதற்குப் பதிலாக மணிபர்ஸைப் போட்டு விட்டேன்......!" என்று முகத்தில் அசடு வழியச் சொன்னான் ராகவன்.

"இரண்டு மணிபர்ஸ் வைத்திருக்கிறீர்களா என்ன? இப்பொழுது கொஞ்ச நேரத்துக்கு முன்னாலே உங்கள் மணிபர்ஸை மேஜை டிராயரிலே பார்த்தேனே!" என்றாள் மனைவி ஆச்சரியத்துடன்.

"என்னிடம் ஏது இரண்டு மணிபர்ஸ்?" என்று கேட்டுக் கொண்டே ராகவன் மேஜை டிராயரைத் திறந்து பார்த்தான். அவன் மணிபர்ஸ் அங்கேதான் இருந்தது. எப்படி அவன் ஞாபக சக்தி!




"பல வருஷங்கள் கீல் வாதத்தினால் துன்புற்று நிலைமை வர வர மோசமாகியும் வந்தது. கடைசியில் "க்ருஷேனை" உபயோகித்துப் பார்க்குமாறு சொன்னார்கள். எனக்கு அது பூரண குணத்தை அளித்ததோடு வலி முதலியவைகளின்றி எனது வேலைகளைச் சரிவரச் செய்யுமாறும் செய்தது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன். கீல் வாயுவினால் அவதியுறும் ஒவ்வொருவருக்கும் "க்ருஷேனை"யே எப்பொழுதும் நான் சிபார்சு செய்வேன்."—W. T. A.

சாதாரணமாகக் கீல் வாயுவானது, சிறு நீரிலுள்ள வண்டல்கள் எலும்புச் சந்திகளிலும் (பூட்டுகள்) தசைகளிலும் தங்கி விடுவதாலேயே ஏற்படுகிறது. "க்ருஷேனி"ன் ஆறுவித உப்புக்கள் இத்தேக்கங்களைக் கலைத்து மூத்திர கோசங்களையும் குடல்களையும் நன்கு தூண்டி அக்கழிவு பதார்த்தங்களை வெளித்தள்ளும்படிச் செய்கிறது. தினந்தோறும் ஒரு சிறு அளவு "க்ருஷேன்", ஜலத்திலோ, டீயுடனோ உட்கொள்ளுவது உங்களைக் கீல் வாயுவினின்று விடுபட்டவராகச் செய்யும்.

**"க்ருஷேன்"** உங்களது ஆரோக்கியத்திற்கும் ஆனந்தத்திற்கும் இன்றியமையாத உதவி

KSM—4




(சென்ற வாரத் தொடர்ச்சி)

ராமூவர் தலையைக் குனிந்து தம் மார்பை ஒரு தரம் பார்த்தார். அதில் இருந்த ஒரு காயத்தின் தழும்பைக் கூர்ந்து பார்த்தார். அதை மெது வாகத் தடவிக் கொண்டே புன்னகை புரிந்தார். 'எந்த விஷயமும் ஒருவன் உள்ளத்தோடு ஒட்டும் வரையில் கஷ்டமாக இருக்கிறது. பிறகு அவன் அதை நேசிக்கக் கற்றுக் கொள்கிறான். அதுவும் உயிருள்ள ஜீவனைப் பற்றியதா யிருந்து, மனித இனத்தையும் சேர்ந்து — இளம் பெண்ணாகவும் இருந்துவிட்டால் பிறகு கேட்க வேண்டியதில்லை. அவனுக்கு உண்டாகும் உள்ளக் கிளர்ச்சியை யும், இன்பத்தையும் சொல்லி முடியாது. எல் லாமே லேசாகி விடும். உடல் பொருள் ஆவி இன்னும் ஏதாவது இருந்தால் அதையும் தியாகம் செய்யத் தயாராகி விடுகிறான்' என்று சொல்லி விட்டு என்னைப் பார்த்துச் சிரித்தார். திடீரென்று சுறு சுறுப்பு அடைந்து விட்டவர்போல நிமிர்ந்து உட்கார்ந்தார். அவர் முகம் மலர்ந்திருந்தது. குழி விழுந்திருந்த அவர் கண்கள் மினு மினுத் தன. மேலே கதையைத் தொடர்ந்தார் :

''என் காதலி அல்லியை அணைத்துப் பிடித்துக் கொண்டேன். என்னைப் பார்த்து மிரட்டிய அந்த ஆளைத் தாக்கும் நோக்கத்துடன் அவனை உற்று நோக்கினேன். அல்லி என்னைப் பேசாமல் இருக்குமாறு கை அமர்த்திவிட்டு அந்த முரட்டு மனிதனுடன் பேச முயன்றாள். அவன் என்னைப் பற்றி ஏதேதோ வாயில் வந்தபடியெல்லாம் திட்டி னான். என்னை இழி குலத்தவன், தாழ்ந்த சாதி யைச் சேர்ந்தவன் என்றெல்லாம் ஏசினான். எனக் குக் கோபம் கோபமாக வந்தது. கோபம் வந்து என்ன செய்வது! அவனுடைய பயங்கர ஆகிருதி யைப் பார்த்துப் பயந்து கொண்டு மௌனமாக நின்று கொண்டிருந்தேன். கோபத்தால் என் இத யம் வேகமாக அடித்துக் கொண்டது. என் காதில் நன்றாக விழுந்தது. என் உடல் நடுங்கிக் கொண் டிருந்தது. பயத்தால் அல்ல, ஆத்திரத்தால்தான். அல்லி அவனைச் சமாதானப் படுத்த முயன்று கொண்டிருந்தாள். அவன் அல்லியையும் தாறு மாறாகப் பேச ஆரம்பித்தான். இதை என்னால் கேட்டுக் கொண்டிருக்க முடியவில்லை. இடை வேஷ்டியை வரிந்து கட்டிக் கொண்டு, மேல் துண்டைத் தலையில் கட்டிக் கொண்டு, அவனுடன் சண்டை யிடுவதற்குத் தயாரானேன்.

''அல்லி என்னைப் பார்த்துச் சற்றுக் கடுமை யாகவே பேசினாள். 'இவர் என் அத்தை மகன். ஏதோ தவறுதலாக எண்ணிக் கொண்டு இருக் கிறார். எல்லாம் சரியாகிவிடும்' என்றாள். நான் மௌனமாகப் பேசாமல் நின்று கொண்டிருந் தேன். மீண்டும் அவன் என்னைப் பார்த்துச் சொல்லத் தகாத வார்த்தைகளைச் சொன்னான். அல்லிக்குக் கோபம் வந்து விட்டது. 'அவர் என் கணவர். அவரை ஒன்றும் சொல்லக் கூடாது. அவரைச் சொல்லுவதும் என்னைச் சொல்லுவதும் ஒன்றுதான்' என்றாள்.

'''அத்தை மகன் நான் இருக்கும்போது. அவன் யார் சாதிகெட்ட பயல் உன்னைத் தொடுவதற்கு!' என்று கூச்சல் போட்டான்.

'''கொஞ்சங்கூட அன்பே இல்லாமல் பேசுகிறீர் களே. அவர் என் கணவர். நான் மனதாரக் காதலித்து அவரையே கணவராக ஏற்றுக்கொண்டு விட்டேன். பூமி தேவி — சந்திரன் சாட்சியாகக் கல்யாணமே செய்து கொண்டோம். இனிமேல் அவரைத் தவிர வேறு யாரையும் மனத்தாலும் நினைக்க மாட்டேன்' என்றாள்.

'''உன் கழுத்தில் ஒரு மஞ்சள் கயிற்றைக் கட் டிப் போட்டிருந்தால் நீ இப்படி எல்லாம் பேசவே மாட்டாய். அவனும் உன்னைச் சுற்றிக் கொண்டு திரிய மாட்டான்' என்றான். மேலும் என்ன என்னவோ வளவளவென்று பேசினான்.

'''தயவுசெய்து நான் சொல்லுவதையும் சற்றுக் கேளுங்கள். உங்களுக்குத் தெரியாத விஷயத்தைப் பிறருக்கு உபதேசம் செய்ய முயற்சிக்கிறீர்கள். கல்யாணம் செய்து கொள்ளப் போகிறவள் நான். என் விருப்பம் இல்லாமல் நீங்கள் என் கழுத்தில் தாலியைக் கட்ட முடியுமா!' என்றாள்.

'''அதைத்தான் பார்ப்போம்' என்று அல்லி யின் கையைத் தாவிப் பிடித்தான். அடுத்த கணம் அவன்மீது புலிபோல் பாய்ந்தேன். எங் கிருந்துதான் எனக்கு அப்பொழுது அவ்வளவு டலம் வந்ததோ தெரியவில்லை. என்னால் அதை நினைத்துப் பார்க்கவே முடியவில்லை. அந்த முரடன் பொத்தென்று எருமை மாடுபோல் வயலில் விழுந்தான். பிறகு எனக்கும் அவனுக்கும் பெரிய மல் யுத்தமே நடந்தது. என்ன பண்ணியும் அவனை வீழ்த்தவே முடியவில்லை. அவன் கையில் என்னத்தை வைத்திருந்தானோ தெரியவில்லை.

ஓங்கி என் மார்பில் குத்தினான். என் மூச்சு நின்று விட்டது. என் கண்கள் சுழன்றன. எங்கேயோ மேலே மேலே போவது போலிருந்தது. அப்படியே சோர்ந்து விழுந்து விட்டேன்.

"கண் விழித்துப் பார்க்கும் போது என் தாயார் மடியில் படுத்திருப்பதை உணர்ந்தேன். சூரியன் உதித்து வெகு நேரம் ஆகியிருந்ததையும் உணர்ந்தேன். முதல் நாள் இரவு நடந்ததை எல்லாம் நினைத்துப் பார்த்தேன். என் தாயாரின் முகத்தைப் பார்த்தேன். அவள் சோகமே உருவமாக உட்கார்ந்திருந்தாள். அல்லியின் கண்கள் அழுது அழுது வீங்கிக் கிடந்தது. அம்மாவின் கண்கள் ஏக்கத்தால் விரிந்து பெரிதாகக் காணப்பட்டன. 'அம்மா!' என்றேன். நெஞ்சில் 'சுரீர்!' என்றது. மார்பில் நல்ல காயம் பட்டிருந்தது. ஏதோ பச்சிலை வைத்துக் கட்டியிருந்தார்கள். அப்படியும் இப்படியும் அசைய முடியாமல் மல்லாந்தவாறே சோர்வாகப் படுத்துக் கிடந்தேன்.

"அம்மா கவலையோடு என் அருகில் வந்தாள். 'அதிர்ந்து ஒன்றும் பேசாதே!' என்றாள். ஆகட்



டும் என்பதற்கு அறிகுறியாகத் தலையை மட்டும் அசைத்தேன். உண்மையாகவே என்னால் பேச முடியவில்லை. மூச்சு விடக் கூடக் கஷ்டமாக இருந்தது. பேசுவதற்கு முயன்றால் மார்பை வலித்தது.

"இரண்டு நாள் கழித்துக் கொஞ்சம் பேச முடிந்தது. அம்மாவின் மூலமாக அன்று இரவு நடந்த சம்பவங்களையெல்லாம் கேட்டுத் தெரிந்து கொண்டேன். அல்லி மிகவும் புத்திசாலி. உண்மையான காரணத்தை மட்டும் அம்மாவுக்குத் தெரியாமல் மறைத்து விட்டாள். பண்ணையார் கூட என் மீது பரிவு காட்டும்படி கதை கட்டி விட்டாள். அவருக்காகவே, அவர் வயலுக்குப் பாய்ந்து கொண்டிருந்த தண்ணீரை அந்த ஆள் அடைத்து விட்டதற்காகவே, நான் அவனோடு சண்டை போட்டதாகச் சொல்லி விட்டாள். நானும் அந்த ஆளும் பயங்கரமாக எங்களை மறந்து சண்டை போட்டுக் கொண்டிருக்கும் போது அல்லி எங்களுக்குத் தெரியாமல் ஊருக்குள் ஓடி, யார் யாரையோ ஆட்களை அழைத்துக் கொண்டு வயல் வெளிக்குத் திரும்பி இருக்கிறாள். அவள் ஆட்களுடன் வருவதற்கும் நான் அடிபட்டு விழுவதற்கும் சரியாக இருந்திருக்கிறது. என்னைத் தாக்கிய அந்த ஆள் ஓடிவிட்டான். என்னைத் தூக்கி வந்து என் வீட்டில் சேர்த்திருக்கிறார்கள். இதையெல்லாம் கேட்டவுடன் எனக்கு அல்லியின் மீது இருந்த அன்பு அதிகமாயிற்று. அவளை மேலும் நேசிக்க ஆரம்பித்தேன்.

"ஒரு வாரம் படுத்த படுக்கையாக இருந்தேன். அம்மாவின் அன்பு நிறைந்த உபசரிப்பினாலும், அல்லியின் காதல் நிறைந்த சேவையாலும் மார்பில் இருந்த புண் ஆறி உடம்பு தேறி விட்டது. அல்லியின் தாயாரும் என்னை அடிக்கடி வந்து பார்த்து விசாரித்து விட்டுப் போனாள்.

"அந்த ஒரு வாரத்தில் அல்லி அநேகமாக எங்கள் வீட்டில்தான் தங்கியிருந்தாள். அல்லியின் சரளமான சுபாவமும், ஓடி ஆடித் துறுதுறுவென்று அவள் செய்து வந்த சுத்தமான வேலைகளும் அம்மாவின் மனத்தை மிகவும் கவர்ந்து விட்டன. அம்மா அல்லியின் நல்ல குணத்தைப் பற்றிப் பல தடவை என்னிடம் புகழ்ந்தாள். அது எனக்கு எவ்வளவோ திருப்திகரமாக இருந்தது. அவளுக்கு நல்ல கணவன் கிடைக்க வேண்டும் என்று மாரியம்மனை வேண்டிக் கொண்டாள். அது மட்டும் எனக்குப் பிடிக்கவில்லை. அதற்கு என்ன பதில் சொல்வது என்றும் தெரியவில்லை. என் மனத்தை அது என்னவோ செய்தது.

"மாரியம்மனை நானும் தினம் தினம் வேண்டிக் கொண்டு தான் இருந்தேன். அதன் மூலம் என்னுடைய மனத்தை மேலும் மேலும் திடப்படுத்திக் கொண்டு வந்தேன். அம்மாவிடம் என் மனத்தில் உள்ளதைச் சொல்ல முடியாமல் தவித்துக் கொண்டு இருந்தேன்

'இப்பொழுது என் உடம்பு பூர்ண குணமாகிவிட்டது. பண்ணையார் வீட்டுக்கு ஒழுங்காக வேலைக்குப் போக ஆரம்பித்து விட்டேன். வேலைத்தலையில் அல்லியுடன் பழகுவதன் மூலம் வேலை செய்வதால் ஏற்படும் களைப்புத் தெரியாமல் இருந்தது. அங்கும் எனக்கு அல்லி பலவிதங்களில் வேண்டிய உதவி புரிந்து வந்தாள்.

"இப்போது எங்கள் காதல் வாழ்க்கையில் ஒரு புதுமை ஏற்பட்டது. 'உடனே நம் கல்யாணத்துக்கு ஏற்பாடு செய்யுங்கள்' என்று அல்லி அவசரப்படுத்தினாள். அம்மாவிடம் விஷயத்தைச் சொல்லும்படி என்னைத் தூண்டினாள். எனக்கோ அம்மாவிடம் இதைப் பற்றிச் சொல்லச் சங்கோசமாக இருந்தது. கூடவே பயமாகவும் இருந்தது.

"இதற்குள் எங்களைப் பற்றி ஊரெல்லாம் வம்புப் பேச ஆரம்பித்து விட்டார்கள். அம்மாவுக்கும் இது எட்டியிருக்க வேண்டும். ஆனாலும் அம்மா அதை மனத்துக்குள்ளேயே வைத்திருந்தாள். என்னை ஒன்றும் கேட்கவே இல்லை.

"கிராமத்தில் உள்ள வாலிபர்கள் எங்களைப் பார்த்துச் சிரித்தனர்; கேலி செய்தனர். வயதானவர்கள் எங்களைக் கண்டித்துத் திட்ட ஆரம்பித்தனர். அதனால் எங்கள் காதல் மேலும் பலப்பட்டது. நாங்கள் இருவரும் எங்கள் போக்கிலேயே இருந்தோம். அதுதான் புத்திசாலித் தனம்

என்பதை இப்பொழுதுகூட உணர்கிறேன்'' என்று சொல்லி என்னை ஒரு மாதிரியாகப் பார்த்தார். மீண்டும் சொன்னார்.

''தம்பி! உங்களைப் போன்ற வாலிபர்கள் நல்ல காரியங்களில் நம்பி மனத்தை ஈடுபடுத்திவிட்டால் அதை ஒருபோதும் மாற்றிக் கொள்ளவே முயலக் கூடாது. அதில் பிடிவாதமாக இருக்க வேண்டும். அதுதான் வாழ்க்கையில் முன்னேறுவதற்கு வழி'' என்றார்.

நான் அதை ஆமோதிப்பது போல மௌனமாக உட்கார்ந்திருந்தேன். கிழவர் தன் கதையைத் தொடர்ந்து சொல்லிக்கொண்டு வந்தார்:

''திடீரென்று எனக்கு ஒரு யோசனை தோன்றியது. எங்கள் ஊரில் ஒரு மாரியம்மன் கோவில் இருக்கிறது. உழமங்கலத்து மாரியம்மனைப் பற்றி அந்தப் பக்கத்தில் கேள்விப்படாதவர்களே இருக்க மாட்டார்கள். அந்த மாரியம்மன் சக்தி உள்ள தெய்வம். பக்தர்கள் அம்மனை 'உழமங்கலத்தாள்' என்று பக்தியோடு சொல்லுவார்கள். அந்தக் கோயிலில் ஒரு சாமியார் இருந்தார். அவர் மீது ஊரில் உள்ள எல்லோருக்குமே மதிப்பும் மரியாதையும் உண்டு. என் தாயார் அந்தச் சாமியார் சொல்லுவதை வேதம் என்று நினைப்பவள். நான் அவரைத் தேடிப் போனேன். அவர் காலில் விழுந்தேன். எனக்கும் அல்லிக்கும் உள்ள காதலைப் பற்றியும், அது நிறைவேறாமல் குறுக்கே தடை செய்யும் சாதிப் பிரச்னையைப் பற்றியும் சொன்னேன். பார்க்கப் போனால் அவளும் எங்கள் சாதிதான். அதில் அல்லி உயர்ந்த சாதியாம்.

''சாமியாருக்கு முதலிலேயே எங்கள் காதல் விஷயங்கள் எல்லாம் தெரிந்திருக்கிறது. அவர் என்னைப் பலப் பல கேள்விகள் கேட்டு விட்டு இதற்கு உதவி செய்வதாக உறுதி அளித்தார்.

''மறுநாளே அம்மாவைப் பார்த்து என் கல்யாண விஷயமாகப் பேசினார். அம்மாவோ அல்லியைக் கீழ் சாதியைச் சேர்ந்தவள் என்று சொல்லி விட்டாள். சாதி விட்டுச் சாதி கல்யாணம் செய்து கொள்வது சம்பிரதாயத்துக்கே விரோதம் என்று வாதாடினாள். ஏதோ விபரீதம் நடந்து விட்டது போல 'என் தலை எழுத்து இப்படியா ஆகணும்!' என்று அழ ஆரம்பித்து விட்டாள்.



''எனக்கு இதையெல்லாம் பார்க்கும்போது சிரிப்புத்தான் வந்தது. அல்லி தன்னை உயர்ந்த சாதி என்று சொல்லிக் கொள்கிறாள். அம்மாவோ தன்னை உயர்ந்த சாதி என்று சொல்லிக் கொள்கிறாள். உண்மையில் எல்லாருமே ஒரே சாதிதான். இந்தச் சாதிப் பிரிவுகளையும், சாதிக்குள் பல சாதிப் பிரிவுகளையும் யார் வகுத்தார்களோ, எதற்காக வகுத்தார்களோ! சாதியின் பெயரால் சொல்லித் தொலையாத அக்கிரமங்கள் நடந்து தொலைகின்றன. 'சாதி இரண்டொழிய வேறில்லை' என்று ஔவைப் பிராட்டியார் கூறிப்போன சாத்திரம் மக்கள் மண்டையில் எப்பொழுது ஏறித் தொலையுமோ, தெரியவில்லை. இருந்தாலும் இப்பொழுது எவ்வளவோ தேவலாம். எத்தனையோ மூடக் கொள்கைகள் சமூகத்தை விட்டு அகன்று வருகின்றன.

''மாரியம்மன் கோயில் சாமியார் அம்மாவின் மனத்தை மாற்ற முயன்று கொண்டிருந்தார். அல்லியும் அம்மாவும் ஒரே சாதியைச் சேர்ந்தவர்கள்தான் என்பதை விளக்கினார். அல்லிக்கும் எங்களுக்கும் மாரியம்மன்தான் குல தெய்வம். ஆகையால் மாரியம்மன் சன்னிதியில் விபூதி, குங்குமம் பொட்டலம் கட்டிப் போட்டுப் பார்ப்போம். அம்மன் குங்குமம் கொடுத்தால் கல்யாணத்தை முடித்து விடுவோம் என்றார். அம்மாவும் இந்த நிபந்தனைக்கு ஒப்புக் கொண்டாள்.

''அல்லிக்கும் தகப்பனார் கிடையாது. ஆகையால் அவள் தாயார்தான் இதற்குச் சம்மதம் அளிக்க வேண்டும். அந்த அம்மாளும் எத்தனையோ வாதப் பிரதிவாதங்களுக்குப் பிறகு இதற்கு ஒருவாறு சம்மதம் அளித்தாள்.

''ஒரு வெள்ளிக் கிழமை. மாரியம்மன் சன்னிதியில் நான், என் தாயார், அல்லி, அவள் தாயார் எல்லாரும் கூடினோம். சாமியார் மாரியம்மனை வேண்டிக் கொண்டு விபூதி, குங்குமப் பொட்டலங்களைக் குலுக்கிப் போட்டார். உலகம் தெரியாத பச்சிளம் பாலகன் ஒருவனை விட்டு எடுக்கச் சொன்னார். மாரியம்மன் குங்குமத்தையே கொடுத்தாள். மூன்று முறை எடுக்கும்படி அல்லியின் தாயார் கேட்டுக் கொண்டாள். மூன்று முறையும் அம்மன் குங்குமத்தையே கொடுத்தாள். நானும் அல்லியும் மகிழ்ந்து போனோம். மாரியம்மனுக்கும் அந்தச் சாமியாருக்கும் சேர்ந்து வணங்கினோம். எங்கள் திருமணத்தை விரைவில் முடிப்பதற்குச் சாமியாரே சிரத்தை எடுத்துக் கொண்டார்.

''எங்கள் கல்யாணத்துக்கு இன்னொரு இக்கட்டு வந்து சேர்ந்தது. உற்றாரும் உறவினரும் இதை ஏற்றுக் கொள்ளவில்லை. மீறிக் கல்யாணம் நடந்தால் தாங்கள் ஒருவரும் கலந்து கொள்ள மாட்டோம் என்று கண்டிப்பாகச் சொல்லி விட்டனர்.

''பெண்ணைப் பெற்ற என் சொந்தக்காரர் ஒருவர் என்னிடம் வந்தார். என் மனத்தை மாற்ற முயன்றார். 'நீ அல்லியைக் கல்யாணம் செய்து கொள்வது முட்டாள்தனம். உன்னிடமோ அவளிடமோ ஒரு காணி நிலம் கூடக் கிடையாது.



"கழுத்தை அசைக்கவே முடிய வில்லை. அசைந்தால் வலிக்கிறது."

"அசைக்காமல் இருந்து விடுங்கள். சரியாய்ப் போய்விடும்."

"அசைக்காமல் இருந்தால் வலி இருக்கிறதா, போய்விட்டதா என்று எப்படி தெரிந்துகொள்ள முடியும்!"

---

சோற்றுக்கு இன்னொருவன் கையை எதிர்பார்த்துக் கிடக்கிறவர்கள். எதிர் காலத்தை நினைத்துப் பார்த்து முடிவு பண்ணு' என்றார்.

"அவர் சொன்னது முழுக்க முழுக்க உண்மை தான். அவளிடமும் ஒன்றும் கிடையாது; என்னிட மும் ஒன்றும் கிடையாது. ஆனால் காதல் கொண்டு விட்ட இளம் காதலர்களுக்கு வேண்டியது என்ன! காதல்தானே! உண்மைக் காதலுக்கு ஆடம்பரத் தேவைகள் ஒன்றுமே கிடையாது. வயிற்றுப்பாடு கூட அப்புறம்தான். 'அல்லியைவிடச் சிறந்த செல் வம் எனக்கு ஒன்றும் கிடையாது' என்றேன்.

"நான் சொன்னதை அவர் ஒத்துக்கொண் டாரோ என்னவோ, பேசாமல் போய் விட்டார். எனக்கும் அல்லிக்கும் உழமங்கலத்து மாரியம்மன் சன்னதியில் திருமணம் நடந்தது. திருமணத்துக்கு யாருமே வரவில்லை. என் தாயாரும், அல்லியின் தாயாரும்தான் வந்திருந்தார்கள். சாமியார் எங் கள் திருமணத்தை முடித்து வைத்தார். எங்களை 'இன்று போல் என்றும் சந்தோஷமாக இருங்கள்' என்று ஆசீர்வதித்தார். இன்று உங்கள் திருமணத் துக்கு யாரும் வராவிட்டாலும் எதிர்காலத்தில் உலகம் உங்களைப் பாராட்டும் என்றார். மாரியம் மன் உங்களுக்குப் பக்கத் துணையிருப்பாள் என்றார்.

"நாங்கள் சாமியாருக்கு நன்றி கூறிவிட்டுக் கோயிலை விட்டுப் புறப்பட்டோம். சாமியார் என்னை மட்டும் தனியே அழைத்தார். ஒரு உண் மையைச் சொன்னார். அடாடா, சாமியார் எனக்குச் செய்த உதவியை நான் எப்படி மறப்பேன்! 'மாரி யம்மன் சன்னிதியில் அன்று குலுக்கிப் போட்ட எல்லாப் பொட்டலங்களுமே குங்குமம்தான்' என்றார். இதை யாரிடமும் சொல்லி விடாதே என்று கேட்டுக் கொண்டார். ஆகட்டும் என் றேன். ஆனால் முதன் முதலாக இந்த ரகசியத்தை உங்களிடம் தான் மனம் விட்டுச் சொல்லு கிறேன்" என்று சொல்லிக் கதையைச் சற்று நிறுத்தி விட்டு மேலே அண்ணாந்து பார்த்தார்.

நான் அவர் முகத்தைப் பார்த்தேன். அவரது பழைய இன்ப நினைவுகளினாலே கண்களில் பிரகா சம் தோன்றியது. ரயில் வேகமாக ஓடியதால் அடித்த காற்றில் அவர் தோளில் கிடந்த துண்டு பட படவென்று ஆடிக் கொண்டிருந்தது. அது ஏதோ ஒரு உற்சாகமான விஷயத்தைச் சொல்லத் துடி துடிப்பது போலக் காணப்பட்டது

தம்முடைய கம்பீரமான குரலில் மீண்டும் அந்த உழமங்கலத்து உழவர் பேச ஆரம்பித்தார்.

"எங்கள் கல்யாண இரவை எங்கு எப்படிக் கழிப்பது என்று சற்று நேரம் நானும் அல்லியும் யோசித்தோம். அல்லி 'வயல் வெளிக்கே போவோம்' என்றாள். 'ஏன் கூடாது! பேஷாகப் போகலாம். நாம் எங்கிருந்தாலும் மாரியம்மன் நம்முடனேயே இருப்பாள்' என்றேன். பூமியே எங்கள் படுக்கையாக, வானமே மேல் விதானமாக உள்ள பரந்த வெளியை நாடிப் போனோம்.

"வழியில் ஒரு பூந்தோட்டம் இருந்தது. அதி லிருந்து மலர்ந்த மலர்களின் வாசனை கம்மென்று வீசியது. அது எங்களுக்காகவே மலர்ந்து மணம் வீசுவதாக எண்ணிக் கொண்டு தோட்டத்துக்குள் போனோம். அப்பொழுது அல்லியைப் பார்த்துச் சொன்னேன். 'அல்லி! இந்தப் புஷ்பங்களின் அருமையான மணத்தை அனுபவிக்கக் கற்றுக் கொள்ள வேணும். இதில் பேதம் பாராட்டி மனத் தைக் கெடுத்துக் கொண்டால் புஷ்பங்களின் அருமையான மணத்தை அனுபவிக்க முடியாது. இது போல்தான் எல்லா விஷயங்களிலும்' என் றேன். 'நீங்கள் சொல்லுகிறீர்கள். நான் அதைக் கேட்கிறேன். ஜனங்கள் எல்லாரும் இதை உணர்ந் தால் அல்லவா நல்லது' என்று சொல்லி விட்டுக் கலீர் என்று சிரித்தாள். மல்லிகை மொக்குகளோ வெண் முத்துக்களோ என்று எண்ணி வியக்கும் படி அவள் வெண் பற்கள் தெரிந்தன.

"எங்கள் பேச்சுக்குச் சுருதி கூட்டுவது போலப் பூந்தோட்டத்தில் உள்ள இரவுப் பூச்சிகள் 'கய்...ய்...ய்' என்று இரைந்து கொண்டிருந்தன. புஷ்பச் செடிகளின் தலைகளை ஆட்டி அசைத்து மகிழ்வதுபோல் சுழன்று சுழன்று அடித்தது காற்று. அல்லி பாட ஆரம்பித்தாள். நானும் அவளுடன் சேர்ந்து பாட ஆரம்பித்தேன்.

"தம்பி! கவனமாகக் கேளுங்கள். எங்களுக்குப் பாடுவதில் அலாதி பிரியம். உயர்ந்த பண்புகள் நிறைந்த மனிதர்கள்தான், வாழ்க்கையை நன்றாக அநுபவிக்க வேண்டும் என்று விரும்பும் நாகரிக மக்களால்தான் பாட முடியும். எங்களுக்கு வாழ்க் கையிலே பற்று அதிகம். நாங்கள் பகல் எல்லாம் வேலை செய்து மிகவும் களைத்துப் போய் விடு வோம். ஆனால் சந்திரன் உதித்து விட்டால் பாட ஆரம்பித்து விடுவோம். வாழ்க்கையை அநுபவிக் கத் தெரியாதவர்கள்தான் தூங்கப் போய் விடு வார்கள். நல்ல நிலவை அனுபவிக்க மாட்டார்கள். வாழ்க்கையை இன்பமாக அனுபவிப்பவர்கள் ஆடு வார்கள், பாடுவார்கள்.

"சில பேர் சொல்லுவார்கள், இரவில் கண் விழித்து வந்தால் உடல் நலம் கெட்டுவிடும் என்று. அது சோம்பேறிகளுக்கும் உழைக்காமல் இருக்கும் பணம் படைத்தவர்களுக்குந்தான். ஏழை மக்க ளுக்கு, பகல் எல்லாம் உழைப்பவர்களுக்கு இரவில் கொஞ்ச நேரம் இன்பமாக இருப்பதால் உடல் நலம் மேலும் வளரும். இளமையில், உடல் நலம் கெடாதபோது வாழ்க்கையை இன்பமாக அனுபவிக்கத் தெரிந்து கொள்ள வேண்டும். அப் பொழுது மேலே கீழே பார்க்கக் கூடாது.

"அல்லியும் நானும் எங்கள் கல்யாணமான முதல் இரவில் மலர் குலுங்கும் அந்தப் பூந்தோட்

# ஒரே தடவையில் 4 வித வேலைகள்



- உழுதல்
- பயிரிடுதல்
- நிலம்வெட்டிக் கிளைத்தல்
- கொழுக்களால் குத்தித்தோண்டுதல்

# பெர்குஸனுடன்

இணைக்கப்பட்ட

## ஹோவார்டு

## ரோடாவேட்டிருல்

இந்தியன் பேட்டெண்ட் நெ. 145449

"ரோடா வேட்", எளிதில் மாற்றி உபயோகிக்கக்கூடியதும், சிக்கனமானதும், திறன்வாய்ந்ததுமான பலவித உழவுத் தொழில் சாதனங்கள் ரோடா வேட்டரும் ஒன்று. அது வேலி, புதர்களின் ஓரமாகச் செல்லவேண்டிய எல்லாவித வேலைகளுக்கும் ஓரங்களிலுள்ள சிறு நிலங்களுக்கும் ஏற்ற லட்சிய சாதனம். புதர்களைக்களைந்து, இச்சிறு நிலப்பாகங்களையும், செங்குத்தான இடங்களையும் பயிரிடுவதற்கு ஏற்றவையாகச் செய்கிறது. கருங்கல்சோலியில் "ரோடாவேட்" நீங்கள் பயிரிடும் நிலப்பரப்பை அதிகமாக்குகிறது. இதுவே அதிக விளைச்சலுக்கும், அதிக லாபத்திற்கும் ஆன வழிகாட்டி.

## கமாணி எஞ்சினியரிங் கார்ப்பொரேஷன் லிட்.

சமாணி சேம்பர்ஸ், பலார்டுஎஸ்டேட், பம்பாய்

விற்பனையாளர்கள் :

கமானி என்ஜினியரிங் கார்ப்பொரேஷன் லிட்., 2, ஜோன்ஸ் தெரு, பிராட்வே, மதராஸ்-1

ஸ்டாக்கிஸ்டுகள் : காமினேனி பார்மிங் கார்ப்பொரேஷன், வாரகப்பட்டணம் & குடிவாடா; S. பாபண்ண ஷெட்டி, ஹாஸ்பெட்; சுந்தரம் சன்ஸ், 42, கிருஷ்ணராவ் குளத்தெரு, மதுரை; பார்மிங் மிஷினரி & ஸர்விஸஸ், பெஸண்ட் ரோடு, பக்கிங்ஹாம்பேட் போஸ்ட், விஜயவாடா.

ஸ்டேன்ஸ் மோட்டார்ஸ் (சௌத் இந்தியா) லிமிடெட்
கோயமுத்தூர் - கோழிக்கோடு - உதகமண்டலம் - திருவனந்தபுரம்

வெப்ஸ் பார்ம் மெகானிஸேஷன், 30, மகாத்மா காந்தி ரோடு, பெங்களூர் & மைசூர்
அருண் ஆடோமோபைல்ஸ், 103, அலெக்ஸாண்ட்ரா ரோடு, செகந்திராபாத்

டத்திலேயே கழித்தோம். நிலவொளியில் அந்தப் பூந்தோட்டம் செல்வர்களின் சிங்கார மாளிகையாக எங்களுக்குத் தோன்றியது. இன்பம் நிறைந்த அந்த முதல் இரவை இப்பொழுது நினைத்துப் பார்த்தால்கூட எனக்கு இன்பமாக இருக்கிறது.

"மறு நாள் பண்ணையார் வீட்டு வேலைக்குப் போனேன். எனக்கு ஒரு அதிசயம் காத்துக் கொண்டிருந்தது. தம்பி! இப்பொழுது வேறு கதை ஆரம்பமாகிறது. எனது நீண்ட கால வாழ்வின் திருப்பம் என்று கூடச் சொல்லலாம். சாதி விட்டுச் சாதி கல்யாணம் செய்து கொண்டேன் என்று சொல்லி என்னை வேலையிலிருந்து நீக்கிவிட்டார் பண்ணையார்.

"இப்பொழுது அப்படிச் செய்ய முடியுமா! விவசாயப் பாதுகாப்புச் சட்டம் அப்பொழுது இருந்திருந்தால் திடீரென்று நிறுத்துவதற்கு ஈடாகக் கொஞ்சம் பணமாவது கிடைத்திருக்கும். அதைக் கொண்டு வேறு தொழிலாவது ஆரம்பித்துப் பிழைத்துக் கொள்ளலாம்.

"என் இஷ்டத்துக்கு, என் தாயாரின் சம்மதத்துடன் செய்து கொண்ட கலியாணத்தை எடுத்துக் காட்டி என்னை வேலையிலிருந்து நீக்கிவிட்டார் பண்ணையார். பண்ணையாளுக்கு அந்தக் காலத்தில் இந்தமாதிரிச் சுதந்திரம்கூடக் கிடையாது. என்னை வேறு எந்தப் பண்ணையிலும் வேலையில் வைத்துக் கொள்ள மறுத்து விட்டார்கள்.

"என் வாழ்க்கை திடீரென்று அஸ்தமித்து விட்டது. பல இரவுகள் ஒன்றாகக் கூடிவிட்டது போல ஒரேயடியாக இருண்டு விட்டது என் வாழ்க்கை. என்னைச் சுற்றிலும் இருப்பவர்கள் மனிதர்கள்தானா! இல்லை அரக்கர்களா என்று நினைத்தேன். என் உடலில் இருந்த சக்தியெல்லாம் வற்றி விட்டது போலிருந்தது. அல்லியோ அமைதியாக உற்சாகத்துடன் இருந்தாள். என் வாழ்க்கைக்கு வழி காட்டுவது போல எனக்கு முன்னே நின்று கொண்டிருந்தாள். 'மாரியம்மன் கோயில் சாமியாரிடம் போவோம். அவர் கட்டாயம் நமக்கு ஏதேனும் உதவி செய்வார்' என்றாள்.



"ஏண்டா பிள்ளை! ஒரு விசேஷமும் இல்லாமல் திடீர்னு உன் மனைவி 150 ரூபாய்க்கு ஒரு புடவை வாங்கிக் கட்டிண்டு இருக்காளே என்ன காரணம்?"

"என்ன காரணம், என் பாக்கட்டிலே 150 ரூபாய் இருந்ததுதான் காரணம்."

"மாரியம்மன் கோயில் சாமியாரிடம் நானும் அல்லியும் சென்றோம். அவர் எங்களுக்கு அபயம் அளித்தார். 'பயப்படாதீர்கள், நான் உங்களுக்கு ஏற்பாடு செய்கிறேன்' என்று சொல்லி அவருடைய சொந்த நிலத்தில் பத்து மா நிலத்தைக் கொடுத்து உழுது பயிரிட்டுக் கொள்ளச் சொன்னார். அதற்கு வேண்டிய ஏரும் மாடும் விதை நெல்லும்கூடக் கொடுத்தார்.

"சாமியாருக்கு ஏது நிலம் என்று யோசிக்கிறீர்களா! அவரைச் சாமியார் என்று எல்லாரும் அன்போடு கூப்பிடுவார்களே ஒழிய அவர் சாமியாரே இல்லை. அவருக்கு வீடு வாசல் நிலபுலன் எல்லாம் உண்டு. வயலில் இறங்கிப் பாடு படுவார். ஏழைக்கு இரக்கம் காட்டுவார். நிறைய படித்தவர். பல விஷயங்களைத் தெரிந்தவர். கர்வமில்லாதவர். கல்யாணம் செய்து கொள்ளாமல் இருந்தார். மாரியம்மன் கோயிலிலேயே விபூதியைப் பூசிக்கொண்டு எதையாவது பாடிக்கொண்டு உட்கார்ந்திருப்பார். அதனால்தான் அவரை எல்லாரும் 'சாமியார்' என்று கூப்பிடுவார்கள்.

"நான் சாமியார் கொடுத்த பத்து மா நிலத்தில் சுதந்திரமாக உழுது பயிரிட ஆரம்பித்தேன். நானும் அல்லியும் சேர்ந்தே பாடுபட்டோம். இனிமேல் எங்கள் வாழ்க்கை சிறக்கும் என்று நம்பினேன். என் தந்தையார் ஒரு தரம் சொல்லியிருக்கிறார். 'தான் செய்கிற காரியத்தில் மனிதன் நம்பிக்கை கொள்ள வேண்டும். வெற்றி பெறுவோம் என்று நம்ப வேண்டும். அப்படி நினைத்துப் பாடுபட்டால் கடவுள் அதற்குத் துணை புரிவார்' என்று. அது என் நினைவுக்கு வந்தது. நிலத்தில் பாடுபட்டேன். நல்ல பலன் கிடைத்தது. அந்த வருஷம் நூறு கலம் நெல் கிடைத்தது. சாமியாரிடம் சென்றேன். சாமியார் 'எனக்கு அறுபது கலம் கொடு. நீ நாற்பது கலம் எடுத்துக் கொள்' என்றார். இப்பொழுது ராஜாஜியும் விவசாய சட்டத்தின் மூலம் இதே ஏற்பாட்டைத்தான் செய்திருக்கிறார். இது நல்ல ஏற்பாடு அல்லவா! மனிதரை மனிதராக மதிக்கும் உயர்ந்த ஏற்பாடு என்றுதான் சொல்ல வேண்டும்.

"நான் என் வாழ்நாளில் அதுவரையில் நாற்பது கலம் நெல்லைச் சொந்தமாக அனுபவித்ததே இல்லை. இதைப் பெற்றவுடன் எனக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியைச் சொல்லுவதற்கு வார்த்தைகளே இல்லை. நான் சாமியாரைத் தெய்வமாக நினைக்க ஆரம்பித்து விட்டேன். அல்லியோ சாமியார் எதைச் சொன்னாலும் அதையே வேதமாக நினைத்து வழிபட ஆரம்பித்து விட்டாள்.

"சாமியாருக்கு அல்லியை மிகவும் பிடித்திருந்தது. அவளுக்கு நன்றாகப் பாடத் தெரிந்ததால் சாமியார் அவளைப் பாடச் சொல்லிக் கேட்பார். திருப்பாவை, திருவெம்பாவை முதலிய பாட்டுகளை நிறையச் சொல்லிக் கொடுத்தார். அல்லியும் அதை ஆசையோடு கற்றுக் கொண்டாள். ஓய்வு கிடைக்கும் போதெல்லாம் உற்சாகமாகப் பாடுவாள். அவளுடைய குணம் இப்பொழுது மிகவும் பண்பட்டு விட்டது. எதையுமே பதட்டமில்லாமல் நிதானமாகச் செய்து வந்தாள்.

'இப்பொழுது அல்லி இரண்டு குழந்தைகளுக்குத் தாயாகி விட்டாள் நாங்கள் பத்து மா நிலத்துக்குச் சொந்தக்காரர்களாகி விட்டோம். எல்லாம் சாமியாரின் உதவிதான் நாங்கள் உழுது பயிரிட்டு வந்த நிலத்தை எங்களுக்கே சொந்தமாகச் சாஸனம் செய்து கொடுத்துவிட்டு வருஷா வருஷம் இருபது கலம் நெல்லை அதிகமாகப் பெற்

றுக் கொண்டார். இனிமேல் நாங்கள் சாமியாருக்கு நெல் அளக்க வேண்டியதில்லை. நிலம் எங்களுக்குச் சொந்தமாகி விட்டது. நிலம் சொந்தமான வருஷத்தில் நானும் அல்லியும் ஏதோ புது உலகத்தில் இருந்தது போலவே மகிழ்ந்தோம்.

"அல்லி அந்த நிலத்தையே விழுந்து முத்தமிட்டு மகிழ்ந்தாள். ஆண் பெண்ணைக் காதலிப்பது போல நாங்கள் அந்த மண்ணைக் காதலிக்க ஆரம்பித்தோம். அதற்கு முன்பு இருந்ததைவிட இப்போது அந்த மண்ணோடு நெருங்கி உறவு பூண ஆரம்பித்தோம். காலம் தவறாமல் உழுது வேண்டிய எருப்போட்டு வந்ததால் வருஷம் முழுவதும் அதிலிருந்து ஏதேனும் பலன் கிடைத்து வந்தது.

"வயலில் சாப்பாட்டுக்கு நெல், வரப்பில் துவரை, களத்து மேட்டில் காய்கறி வகைகள் என்று எங்கள் ஜீவனத்துக்கு வேண்டிய உணவுப் பொருள்கள் எல்லாம் எங்கள் வயலிலேயே கிடைத்தது. இப்பொழுது நாங்கள் ஊருக்குள் பெரிய மனிதர்களாகி விட்டோம். எங்களை முன்பு மதிக்காதவர்கள் எல்லாம் இப்பொழுது எங்களை மதிக்க ஆரம்பித்து விட்டனர். நாங்கள் அவர்கள் கொடுமைகளை மறந்து விட்டு எங்கள் பழைய நிலைமையை மறக்காமல் இருந்து வந்தோம்.

"நான் இப்பொழுது இன்னும் கொஞ்சம் நிலங்களைக் குத்தகைக்கு எடுத்துக் கொண்டு நாலு பண்ணை ஆட்களை வைத்துக் கொண்டு விவசாயம் செய்யத் தொடங்கினேன். என்னுடைய பழைய நிலைமையை, நான் இன்னொரு பண்ணை முதலாளியிடம் வேதனைப்பட்ட நிலைமையை உணர்ந்து பண்ணையாட்களுக்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொடுத்து வந்தேன். அவர்களும் வஞ்சகமில்லாமல் உழைத்தார்கள். எல்லா விவசாயிகளையும் விட எனக்கு அதிக நெல்லே கிடைத்தது. சந்தோஷமாக நானும் வாழ்ந்தேன். என்னிடம் வேலை செய்தவர்களும் வாழ்ந்தார்கள். சாமியார் எங்களுக்கு யோசனைகள் கூறும் நல்ல மந்திரியாக இருந்தார். ஆனால் அவர் இப்பொழுது அல்லிக்கு மரியாதை செய்ய ஆரம்பித்து விட்டார். அவளைப் போன்ற பெண்கள் கிடைப்பது மிக அரிது என்றார். அவள் போன்ற உத்தமப் பெண்மணிகள் ஒருத்தர் இரண்டு பேர் இருப்பதால்தான் இந்த மழையாவது பெய்கிறது என்றார்.

"அல்லி இரண்டு குழந்தைகளுக்குத் தாயாகி விட்டாலும் அவள் உடல் கட்டுக் குலையாமல் இருந்தாள். காரணம் நாள் முழுவதும் வேலை செய்வாள். எந்தக் காரியத்தைச் செய்தாலும் அதைச் சந்தோஷமாகவே செய்வாள். ஓய்வு கிடைக்கும் போதெல்லாம் பாடுவாள். அவள் முகத்தில் கவலைக்குறி தென்பட்டு நான் பார்த்ததே இல்லை. தாங்க முடியாத கஷ்டங்கள் வந்தாலும் அதை நினைத்து வேதனைப் படாமல் அதிலிருந்து எப்படி விடுதலை பெறுவது என்பதைப் பற்றியே சிந்தித்து அதற்கு முடிவு காணுவாள். அதனால் அவள் இப்பொழுதும் அழகாகவே இருந்தாள். அவளுடைய அன்பும், அவள் வேலைத் திறனும் சேர்ந்து என்னை அவளுக்கு அடிமையாக்கி விட்டது என்றே சொல்லலாம். அவள் இனிமையான குரலில் பாடுவதைக் கேட்டால் அவள் அழகிய சரீரம் எல்லையற்ற வான வெளியில் மிதப்பதைப் போன்ற ஆடி அசைவதைப் பார்க்கலாம். அவள் மிருதுவான பேச்சும் அவள் கச்சிதமான வேலைகளும் ஒரு தனி சோபிதம்.

"ஒரு சமயம் பாருங்கள். சாமியார் அல்லியைப் பார்ப்பதற்காக வந்திருந்தார். அல்லி உள்ளே பாடிக் கொண்டே இருந்தாள். மழைத் தெய்வத்தை நோக்கிப் பிரார்த்தனை செய்யும் பாட்டு அது. மழைத் தெய்வமே! உலகில் வாழும் மக்கள் இன்பமாக வாழுவதற்குப் பெரு மழை பெய்து காப்பாயாக! என்று வேண்டுவது போல திருமாலுக்கு மழையை ஒப்பிட்டு அற்புதமாக அமைந்த பாட்டு. சாமியார் அல்லியின் பாட்டைக் கேட்டுக் கொண்டே நின்று கொண்டிருந்தார். அவர் சாந்தமான முகத்தில் ஒரு புது ஒளி தோன்றியது. அவர் கண்களில் கண்ணீர் பெருக ஆரம்பித்து விட்டது. அவர் தம்மை மறந்து பாட்டில் ஈடுபட்டு விட்டதை அவருடைய ஒவ்வொரு அவயவங்களும் காண்பித்துக் கொண்டிருந்தன. அல்லி அன்றைக்கு என்றும் இல்லாத விதமாக அற்புதமாகப் பாடிக் கொண்டிருந்தாள். சாமியார் சொல்லிக் கொடுத்த திருப்பாவைப் பாட்டுத்தான் அது.

ஆழி மழைக்கண்ணா!
　　ஒன்றுநீ கைகரவேல்
ஆழி யுள்புக்கு
　　முகந்துகொடு ஆர்த்தேறி
ஊழி முதல்வன்
　　உருவம்போல் மெய்கறுத்து
பாழியந் தோளுடைப்
　　பத்மநாபன் கையில்
ஆழிபோல் மின்னி
　　வலம்புரிபோல் நின்றதிர்ந்து
தாழாதே சார்ங்கம்
　　உதைத்த சரமழைபோல்
வாழ உலகினில்
　　பெய்திடாய்!......

என்று தன் குயிலினும் இனிய குரலில் தன்னை மறந்து பாடிக் கொண்டிருந்தாள்.

"நான் உள்ளே சென்று அல்லியிடம் சாமியார் வந்திருக்கிறார் என்று சொன்னேன். அல்லி ஓடி வந்து சாமியாரை வணங்கினாள். 'ஏன் சாமி! வாசலிலேயே நின்று விட்டீர்கள்! உள்ளே வரக் கூடாதோ!' என்று கேட்டாள். 'அற்புதமாய்ப் பாடிக் கொண்டிருந்தாய், அதைக் கேட்டு மகிழ்ந்து கொண்டிருந்தேன்' என்றார். 'பாட்டுத்தான் முடிந்து விட்டதே' என்றாள் அல்லி. 'உனக்கு என்னமோ பாட்டு முடிந்து விட்டது. எனக்கு இன்னும் முடியவில்லை. என் காதில் அது ஒலித்துக் கொண்டிருக்கிறது. வெளியில் மழையும் பெய்து கொண்டிருக்கிறது, பார்' என்றார்.

"எனக்கு இப்பொழுது நினைத்தால்கூட ஆச்சரியமாகத்தான் இருக்கிறது. அல்லி அந்தப் பாட்டை எப்பொழுதாவது மனம் உருகிப் பாடினால் மழை பெய்யத்தான் செய்தது. இப்பொழுது சிலர் 'பஜகோவிந்தம் பாடினால் மழை வருமா?' என்று பைத்தியக்காரத்தனமாகக் கேட்கிறார்கள். ஆமாம், பைத்தியக்காரன் ஒருவன்தான் அப்படி உளற முடியும். பகுத்தறிவு உள்ள மனிதனால்தான் எந்த விஷயத்தையும் சிந்தித்துப் பார்க்க முடியுமே! எந்தக் காரியத்தையும் நம்பிச் செய்தால் அது நடக்கத்தான் செய்யும். அதற்காக வேலையை விட்டுச் சோம்பேறியாகக் காலம் கடத்தி, பிறரை ஏமாற்றி வாழ்வதுதான் தவறே ஒழியப் பிரார்த்தனை செய்வது ஒன்றும் தவறில்லை. தேசத்தை வணங்கிப் பாடுவதுபோல மழையை நினைத்து வணங்கிப் பிரார்த்திக்கிறோம். அதனால் நம்முடைய பண்புகள் உயரும். மழை பெய்தால் நமக்கும்



"அந்த 'ஸில்க்கின்' விலை ஆறு ரூபாயா? அதைவிட அதிக விலையில் எதுவும் இல்லையா?"

"இல்லையே, அம்மா! ஆனால் அதையே முதலாளியிடம் சொல்லி உங்களுக்காக, ஸ்பெஷலாக விலை அதிகமாக்கிக் கொடுக்கிறேன்..."

தேசத்துக்கும் லாபம். மழை பெய்யவில்லை என்றால் நாம் பிரார்த்தனையாவது செய்தோமே அதன் அவசியத்தை உணர்ந்தோமே என்றுவது மன நிம்மதி யடையலாம்.

"இதற்குப் பிறகு எத்தனையோ வருஷங்கள் ஓடி மறைந்து விட்டன. நானும் பத்துக் குழந்தைகளுக்குத் தந்தையாகி விட்டேன். எத்தனையோ பேரக் குழந்தைகளுக்குத் தாத்தாவாகி விட்டேன். என் குழந்தைகளை எல்லாம் படிக்க வைப்பதற்கு வேண்டிய வசதிகள் பெற்றிருந்தாலும், வெறும் ஏட்டுப் படிப்பில் எனக்கு நம்பிக்கை இல்லை. பி. ஏ., எம். ஏ., பட்டம் பெற்று விட்டு வாழ்க்கையையும் கெடுத்துக் கொண்டு யாராவது ஒருவரிடம் நூறுக்கும் இருநூறுக்கும் அடிமைபோல் வேலை செய்வதில் என்ன லாபம்! அதனால் எழுதப் படிக்கும் அளவுக்குப் பிள்ளைகளுக்குப் படிப்பைக் கற்றுக் கொடுத்தேன். எல்லாப் பையன்களையும் விவசாயத்தில்தான் ஈடுபடுத்தியிருக்கிறேன். பையன்கள் எல்லாம் விவசாயத்தில் எத்தனையோ அற்புதங்களைச் செய்து வருகிறார்கள். என்னிடமும் அல்லியிடமும் அன்புடனேயே இருக்கிறார்கள். ஒவ்வொருவரும் எத்தனையோ பண்ணையாட்களை வைத்துக் கொண்டு தாங்களும் அவர்களுடன் சேர்ந்து பாடுபட்டு வருகின்றனர்.

"இரண்டு மாதங்களுக்கு முன் என்னுடைய கடைசிப் பையனுக்குக் கல்யாணம் செய்தேன்.

"நமது சொந்தக்காரர்கள், நண்பர்கள் என்று சொல்லிக் கொள்வதற்கு வேண்டியவர்கள் இருந்தால் அதன் இன்பமே அலாதிதான். நம்மையும் நம் வாழ்க்கையையும் உயர்வாக மதிக்கும் உன்னத மனிதர்களாகவும் அவர்கள் இருந்து விட்டால் அதன் மகிழ்ச்சியே தனிதான். அவர்களுக்கெல்லாம் அழைப்பு அனுப்பி வைத்தேன்.

"அடாடா! என்ன அருமையான கல்யாணம் தெரியுமா! மறக்க முடியாத தினம். என்னுடைய உறவினர்கள் நண்பர்கள் யாவரே திரண்டு வந்திருந்தது. என் வீடு சாதாரண ஓலை வீடுதான். எல்லோரும் திரண்டு என் குடிசைக்கு வந்து விட்டதால் அந்த வேளையில் அது பெரிய பொன் மாளிகையாகக் காட்சி யளித்தது. எல்லாரும் உற்சாகமாகவே இருந்தார்கள். மக்களுக்குச் சேவை செய்வதைவிட சமுதாயத்துக்கு உழைப்பதைவிட இனியது, அழகானது வேறொன்றும் கிடையாது என்பதை அன்று பரிபூரணமாக உணர்ந்தேன்.

"மாரியம்மன் கோயில் சாமியாரும் வந்திருந்தார். என் பிள்ளையை ஆசீர்வதித்தார். அப்பொழுது அவர் சொன்னார்: 'மக்களுக்கு உணவு அளிக்கும் புனிதமான தொண்டில் ஈடுபட்டுப் பாடுபடுவதை விட உயர்ந்த வாழ்க்கை உலகில் ஒன்றுமே கிடையாது. இவர்களுக்குத் தேவை ஏற்படும் போது நீங்கள் உதவி புரியுங்கள்' என்று கூடி யிருந்த மக்களைப் பார்த்துக் கேட்டுக் கொண்டார். சமுதாயத்தையே கேட்டுக் கொண்டார்.

"அவர் கேட்டுக் கொண்டது போலவே விவசாயிகளுக்கு உதவுவதற்காக இப்பொழுது விவசாயப் பாதுகாப்புச் சட்டம் வந்திருக்கிறது. இதில் பட்டாதாருக்கும் பண்ணையாளுக்கும் நல்ல பாதுகாப்பு இருக்கிறது. இதைவிட மனிதரை மனிதராக மதிக்கும்படி போதிக்கும் சட்டம் வேறென்ன வேண்டும்! அதனால் கிராமத்து உழவர்கள் அடைந்திருக்கும் திருப்தியை அவர்களுடன் கலந்து பழகிப் பார்த்தால்தான் தெரியும்.

"ஆகையால் அந்தக் காலத்தைவிட இந்தக் காலம் எவ்வளவோ மேலானது. என்னைப் போன்ற கிழவன்கூட எங்கு வேணுமானாலும் போகலாம். தனியாகவே போகலாம்" என்றார்.

ரயில் 'டக்' என்று நின்றது. போர்ட்டர் 'பூந்தோட்டம்' 'பூந்தோட்டம்' என்று கூவினார். கிழவர் என்னைப் பார்த்து, "தம்பி நான் போய் வருகிறேன். ஏதோ கிழவன் என் அனுபவத்தைச் சொன்னேன். அதில் நல்லதும் இருக்கும் பொல்லாததும் இருக்கும். இருந்தாலும் நான் சொன்னது அத்தனையும் உண்மை" என்று கூறி என்னிடம் விடைபெற்றுக் கொண்டார்.

கிழவருக்கு என்ன பதில் சொல்லுவது என்றே தெரியாமல் சிறிது நேரம் திகைத்தேன். கடைசியில் "தாத்தா! எனக்கு எத்தனையோ விஷயங்களை மிக எளிதில் சொல்லிக் கொடுத்து விட்டீர்கள். உங்கள் கதையைக் கேட்ட பிறகு நான் புதிய மனிதனாகவே மாறிவிட்டேன். வணக்கம்" என்று சொல்லிக் கைகூப்பி வணங்கினேன்.

கிழவர் என்னைப் பார்த்துச் சிரித்துவிட்டுப் பையையும் கைத் தடியையும் எடுத்துக் கொண்டு ஒரு இளம் வாலிபனைப்போல வேகமாகச் சென்றார்.

ரயில் ஒருதரம் 'க்கூ......' என்று நீளமாக ஊதிவிட்டுக் கிளம்பி விட்டது. ரயில் சக்கரங்களின் ஒரேமாதிரியான சத்தமும் தண்டவாளங்களின் இணைப்பிலிருந்து எழுந்த தாளம் தவறாத இசையும் கேட்டுக் கொண்டிருந்தன. வான வெளியில் கறுப்பு நிறமுள்ள மேகக் கூட்டங்கள் மிதந்து கொண்டிருந்தன. ஆழ்ந்த அனுபவம் நிறைந்த அந்த உழவரின் அற்புதமான வாழ்க்கையைப் பற்றி எண்ணமிட்டுக் கொண்டிருந்தேன்.

# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரசாமி

## 42. சந்தேக விளக்கம்

**கேள்வி :—** ஆசனம் செய்கிறவர்களுக்கு ஏதோ ஒரு கோளாறினால் லேசான சுகக் குறைவு ஏற்பட்டால் ஆங்கில மருந்தாவது நாட்டு மருந்தாவது சாப்பிடலாமா ?

**பதில் :—** ஆசனம் செய்பவர்கள் ஆகாரப் பழக்கங்களை ஒழுங்காய்க் கடைப் பிடித்தால் எந்த நாளும் எந்தக் கோளாறும் வராது. ஆரம்ப சாதகர்களுக்கு, ஏதோ முன்பு பல நாட்களாக ஏதாவது உடற் கோளாறு உள்ளிருந்து சில சமயம் வரலாம். அப்படியென்றால், ஆசனம் செய்து அவை வந்து விட்டது என்று அர்த்தமல்ல. ஆசனத்தை இவர்கள் செய்யாமல் இருந்தாலும் அது வந்தே தீரும். பழைய நோய் மூட்டைகளை அதற்குத் தக்கபடி நாள் ஆகும். ஒரு வஸ்துவை இன்று சாப்பிட்டால் அதன் குணம், சத்து நம் சரீரத்தில் ஆறு வருடம் வரை இருக்கும் என்று வைத்திய சாஸ்திரம் சொல்லியிருக்கிறது. கடந்த ஆறு வருடங்களாய் நாம் என்னென்ன ஆகாரங்களைச் சாப்பிட்டோமோ, எப்படித் தாறுமாறாய் நடந்தோமோ யார் கண்டார்கள் ! அது அவரவர்களுக்கே தெரிய வரும். எனவே, அதன் பயனாக ஏதாவது நோய் ஆரம்ப சாதகர்களுக்கு வரலாம். ஆனால் இவர்கள் ஆசனம் பழகி வந்தால் அழிவு மார்க்கத்தை விட்டு மீட்சி மார்க்கத்திற்குத் திரும்பி விட்டதால் அப்படி ஏதாவது நோய் வந்தாலும் எளிதில் குணமாகும்.

தலைவலி, ஜுரம், இருமல் போன்றவைகளும் வரும். ஜுரம் வந்திருப்பது நமக்கு நன்கு தெரியும். ஜுரக் கிருமிப் போர் உள்ளே நடப்பது நன்கு புரியும். அப்போது இலேசாய்க் கைகால் ஓய்ச்சலாகவும், வேலை செய்ய மனதில்லாமலும் இருக்கும். சில சமயம் லேசாய் உடம்பு சுட்டாலும் சுடும். அதற்காக வென்று உடனே மருந்து வாங்கிச் சாப்பிட வேண்டுமென்று அவசியமில்லை. ஓரிரு வேளை பட்டினி போடலாம். கஞ்சி சாப்பிடலாம். இரவு படுக்குமுன் மிளகு, சீரகம் வறுத்து, பனங் கற்கண்டு போட்டுக் கஷாயம் செய்து சாப்பிட்டு விட்டுப் படுத்தால் மறுநாள் உடம்பு கலகலப்பாக எல்லாம் சரியாய் விட்டிருக்கும். தலைவலி வந்தால் ஒரு வேளை பட்டினி போட்டு ஓய்வு எடுத்துக் கொள்ளலாம். இருமல் வந்தால் நாடி சுத்தி அதிக தடவைகள் செய்யலாம். சித்தரத்தைக் கஷாயம் குடிக்கலாம். அல்லது பசும் பால் கறந்ததும் மூன்று நாள் குடிக்கலாம். இம்மாதிரி லேசாய் ஏதாவது செய்து கொண்டாலே போதும்.

எவ்வளவு தூரம் மருந்தென்னும் விஷத்தால் நமது உடலை மாசு படுத்தாமல் வைத்துக்கொள்ள வேண்டுமோ அவ்வளவு தூரம் வைத்திருப்பது நல்லது. ஆனால் இதுவே கடுமையாக 104, 105 டிகிரி ஜுரமென்று இருந்தால் கட்டாயம் ஆங்கில வைத்தியரிடமோ நாட்டு வைத்தியரிடமோ வழக்கப்படி சென்று மருந்து வாங்கிச் சாப்பிடத்தான் வேண்டும். ஆனால் குணமான பின் மறுபடியும் ஆசனங்களைச் செய்து உடலை நல்ல நிலைக்குக் கொண்டு வரலாம்.

**கேள்வி:—** குடும்பஸ்தர்கள் குடும்பத்தில் ஈடுபடும் மறுநாள் ஆசனங்களைச் செய்யலாமா ?

**பதில் :—** மறுநாள் காலையில் குளித்து விட்டுச் செய்யலாம். எந்த நாளும் எந்தக் காரணத்தைக் கொண்டும் ஆசனத்தை ஒதுக்கி வைக்க வேண்டிய அவசியமே இல்லை.

**கேள்வி :—** தாங்கள் எழுதி வரும் ஆரோக்கிய ரகஸ்யம் எனும் கட்டுரை முடிய இன்னும் எத்தனை நாள் ஆகும் ! இக்கட்டுரைகள் எல்லாம் சேர்த்துப் புத்தகமாக வெளியிட்டால் தமிழ் மக்களுக்கு மிக்க உபகாரமாய் இருக்கும். அப்படிப் புத்தகரூபமாய் வெளியிடும் உத்தேசமுண்டா !

**பதில் :—** ஆரோக்கிய ரகஸ்யக் கட்டுரைகள் முடிய இன்னமும் சுமார் ஆறு மாத காலம் ஆகலாம். புத்தகமாகக் கட்டாயம் வெளிவரும். அதற்கான ஏற்பாடுகள் நடக்கின்றன.

**கேள்வி :—** சர்வாங்காசனத்தில் ஐந்து நிமிடம் நின்றவுடன் கால்கள் நடுங்க ஆரம்பித்து விடுகின்றன. நடுக்க மெடுத்தாலும் மேலும் கொஞ்ச நேரம் என்னால் ஆசனத்தைக் கலைக்காமல் இருக்க முடியும். அப்படி இருக்கலாமா, கூடாதா !

**பதில் :—** நரம்பு பலவீன முள்ளவர்களுக்கு ஆரம்பத்தில் அவ்வாறு ஏற்படுவது சகஜம். அப்படி நடுக்க மெடுத்தால் ஆசனத்தைக் கலைத்து இறங்கி சாந்தி ஆசனத்தில் மூன்று அல்லது ஐந்து நிமிஷமிருந்து, மறுபடியும் ஒரு ஐந்து நிமிஷம் சர்வாங்காசனம் செய்யலாம். இவ்வாறு மூன்று தடவைகள் செய்தால் பதினைந்து நிமிஷங்கள் சர்வாங்காசனத்தைச் செய்த மாதிரி ஆகும். இதையே வாரத்துக்கு ஒரு நிமிஷமோ, இரண்டு வாரத்துக்கு ஒரு நிமிஷமோ அதிகமாக்கி வந்து ஒவ்வொரு தடவையும் பத்து நிமிஷங்கள் வீதம் மூன்று தடவைகள் செய்தால் போதுமானது. அதற்குள் அநேகமாய் இந்த நடுக்கம் போய் விடும். ஒரே தடவையில் அதிக நேரம் செய்ய வேண்டிய அவசியமில்லை. சிலருக்கு இரண்டாவது தடவையில் முன் நிற்பதைப் போன்று ஐந்து நிமிஷம் நிற்க வராது. மூன்று நிமிஷத்தில் நான்கு நிமிஷத்தில்கூட நடுக்க முண்டாகிவிடும். ஐந்து நிமிஷம் செய்து ஆகவேண்டுமே என்று கஷ்டப்பட்டுக் கொண்டு நிற்கக் கூடாது. நடுக்க மெடுத்ததும் இறங்கி ஓய்வு எடுத்துக்கொள்ள வேண்டும்.

**கேள்வி :—** இந்த நடுக்கத்தைத் தடுக்கப் பிரத்தியேகமான ஆகாரங்கள் சாப்பிட வேண்டுமா !

**பதில் :—** ஆம். அவசியம் சாப்பிடத்தான் வேண்டும். அப்படி ஒன்றும் தனியாக அதிக செலவுகள் செய்ய வேண்டிய அவசியமில்லை. ஜீவசத்து பி. இல்லாக் குறைவினாலும் நரம்பு பலவீனமாய் இருக்கலாம். ஜீவ தாதுவை அதிகம் செலவழிப்பதினாலும் நரம்பு பலஹீனமாய் இருக்கலாம். தைராய்ட் கோளங்கள் சரிவர வேலை செய்யாமையாலும் இருக்கலாம். ஜீவசத்து குறைவாய் இருந்தால் அதை உணவில் சற்றுக் கவனம் செலுத்தினால் சரியாய்விடும். தவிட்டுடன் அரிசி தேடிப் பிடித்தாவது கஞ்சி வடிக்காமல் கட்டாயம் சாப்பிட வேண்டும். பால், பழங்கள், காய்கறி, கீரை நிறைய சேர்க்க வேண்டும். முடிந்தால் பாதம் பேரிச்சைப் பழம் சேர்க்கலாம். தாது விரயமானதில் பலஹீனமாயிருந்தால் இருபது, நாற்பது

## மழை வந்தது!



நாட்கள் என்று பிரம்மச்சரியம் அனுசரிக்க வேண்டும். இனிமேலாவது அதிகம் செலவு செய்யாமல் மட்டாய் மிதமாய் இருக்க வேண்டும். தைராய்ட் கோளத்தின் குறைவானால் அதற்குச் சர்வாங்காசனமே போதும். முன் சொன்ன இரண்டு வகை அதாவது ஜீவ சத்துக் குறைவு, தாதுக் குறைவு ஆகியவற்றையும் சரி செய்யக் கூடியது சர்வாங்காசனமே. அதனுடன் ஆகார நியமப் பத்தியமும் அனுஷ்டிக்க வேண்டும்.

**கேள்வி** :— சர்வாங்காசனம் செய்யும் போது எனக்கு வலது காலைவிட இடதுகால் சீக்கிரம் நடுங்க ஆரம்பித்து விடுகிறது. இதற்கு என்ன காரணம்! பரிகாரம் உண்டா!

பதில் :—இதற்கும் நரம்பு பலஹீனமே காரணம். போதிய ரத்தம் பிராண வாயுவுடன் சரிவர நரம்புகளின் மூலமாய் இடது பக்கத்திற்குப் பிரவேசிக்கவில்லை. அதனாலும் உண்டாகலாம். எனவே நாடி சுத்தி முதலில் ஐந்து தடவை ஆரம்பித்து வாரம் இரண்டு எண்ணிக்கை வீதம் அதிகமாக்கி வந்து இருபத்தொரு தடவை வரை தினமும் காலை மாலை செய்யவும். அதனுடன் முடிந்தவரை முன் சொன்னபடி சர்வாங்காசனமும் செய்யவும்.

**கேள்வி**:—சர்வாங்காசனத்தைச் செய்யும் போது சாதாரணமாய் மூச்சை வாங்கவும் விடவும் வேண்டுமென்று எழுதிக் கொண்டிருக்கிறீர்கள். ஆனால் நான் சர்வாங்காசனம் செய்யும்போது மூச்சை அதிகமாக வெளிவிடவும் வாங்கவும் செய்ய வேண்டியிருக்கிறது. மூச்சின் சத்தம்கூட கேட்கிறது. இவ்வளவிற்கும் நான் பெருத்த சரீரமுடையவனுமல்ல. அப்படி விடுவதால் கெடுதல் ஒன்றும் இல்லையே! அல்லது அடக்கி மெதுவாய்த் தான் விட வேண்டுமா!

பதில் :—சர்வாங்காசனம் செய்வதற்கு முன் மூன்று அல்லது ஐந்து நிமிஷம் சாந்தி ஆசனத்தில் படுத்திருந்து விட்டுச் செய்தால் இம்மாதிரி வேகமாய் மூச்சு விடவும் இழுக்கவும் வேண்டியிராது. சர்வாங்காசனத்திற்கு முந்தி புஜங்க, சலப, தனுர், பஸ்சிமோத்தான, மயூரா, ஹலாசனம் முதலியவைகளில் ஒன்றிரண்டோ செய்துவிட்டு உடனே சர்வாங்காசனம் செய்தால் பெரு மூச்சு விடவேண்டியதாய் இருக்கும். ஆகையால் சாந்தி ஆசனத்தில் சிறிது நேரம் ஓய்வு எடுத்துக் கொண்டு செய்தால் நல்லது. சிலருக்கு நுரையீரல் இறுக்கம் ஏற்படுவதினாலும் உண்டாகலாம். பொதுவாய் நரம்பு பலவீனமும் உடலில் போதிய சக்தியில்லாமையுமே காரணம். அப்பேர்ப்பட்டவர்கள் ஆசனம் ஆரம்பிப்பதற்கு முன் நாடி சுத்தி செய்துவிட்டு, ஆசனம் செய்தால் சுகமாய் இருக்கும். எல்லாம் நாளடைவில் சரியாய்விடக் கூடியதே. அதற்கென்று மூச்சை அடக்கிவிட வேண்டிய அவசியமில்லை. இப்பேர்ப்பட்டவர்கள் ஒவ்வொரு தடவை சர்வாங்காசனம் முடிந்ததும் ஓய்வெடுத்துக் கொண்டு, மத்ஸ்யாசனம் செய்துவிட்டு மறுபடியும் சர்வாங்காசனம் செய்யலாம். இவ்வாறு மூன்று தடவைக்கும் மூன்று முறை மத்ஸ்யாசனம் செய்யலாம். இப்படிச் செய்தால் சிரமம் குறையும்.

**கேள்வி** :—எண்ணெய் ஸ்நானத்துக்கு நான் எண்ணெயில், வெள்ளைப்பூண்டு, வெந்தயம், மிளகு, மிளகாய் முதலியவைகளைப் போட்டுக் காய்ச்சித் தேய்த்துக் குளிப்பது வழக்கம். இது நல்லதா! அல்லது வெறும் எண்ணெயைக் காய வைத்துத் தேய்த்துக் குளிப்பது நல்லதா! பச்சை எண்ணெயாகவே தேய்த்துக் குளிப்பது நல்லதா!

பதில் :—ஏதோ ஜுரம், நோய் வந்து போன பின் முதன் முதலில் எண்ணெய் ஸ்நானம் செய்ய வேண்டுமானால் மேற்சொன்ன சரக்குகளெல்லாம் போட்டுக் காய்ச்சி குளிப்பது வழக்கம். சாதாரணமானவர்களுக்கு அப்படி ஒன்றும் தேவை இல்லை. வெறும் எண்ணெய் கூட காய்ச்ச வேண்டியதில்லை. பச்சை எண்ணெயைத் தேய்த்துப் பச்சை ஜலத்திலேயே ஸ்நானம் செய்வதுதான் நல்லது.

**கேள்வி** :—நான் இரண்டு மாதமாக ஆசனங்கள் செய்து வருகிறேன். காப்பியை நிறுத்திப் பால் சாப்பிடுகிறேன். புளிக்குப் பதில் எலுமிச்சை உபயோகிக்கிறேன். பொதுவாக ஆசன விதிகளை அனுசரிக்கிறேன். எனக்குச் சில நல்ல பலன்கள் ஏற்பட்டுள்ளன. நல்ல களையாகவும், மெலிவாகவும் இருக்கிறேன். என் நண்பர்கள் "நீ முன்புவிட நன்றாய் இருக்கின்றாய். விடாமல் ஆசனம் செய்" என்கிறார்கள். ஆனால் என் மனைவியோ "ஆசனம் செய்வதால் நிறம் வெளுத்து விடுகிறது. அது ரத்தக் குறைவுக்கு அறிகுறி. ஆசனம் செய்ய வேண்டாம்" என்கிறாள். இதில் நான் யார் சொல்லைக் கேட்பது!

பதில் :—தங்கள் மனைவி தெரியாமல் சொல்வதாய் இருக்கலாம். ஏன் அதை நீங்களே முடிவு செய்து கொள்ளலாமே! எதற்கும் மாறாத நம்பிக்கையும் உறுதியும் வேண்டும்.

**கேள்வி** :—குமட்டல், வாந்தி, வயிற்றோட்டம் உள்ளவர்கள் நிலக்கடலையைச் சாப்பிடலாமா!

பதில்:—கூடாது. அது குமட்டல், வாந்தி, வயிற்றோட்டத்தை அதிகப்படுத்தும். (தொடரும்)

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

REGD. No. M. 4392

*Registered as a newspaper in Ceylon*

எப்பொழுதும், எங்கும்



கைகளில் அழுக்கிலிருக்கும் கிருமிகள் பற்றிக்கொள்ளலாம்



அவைகளை உங்கள் உடலிலும் பரவச்செய்யலாம்

இந்த ஆபத்தை தவிர்க்க—

கைகளையும் உடலையும் தவறாமல்

# லைப்பாய் சோப்பினால்

கழுவுங்கள்.

அது அழுக்கிலிருக்கும் கிருமிகளிலிருந்து உங்களை காப்பாற்றுகிறது.




L. 219-50 TM